# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Wednesday, the 4th July 1962.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, Mr. Speaker (the HON. SRI S. CHELLAPANDIAN) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

### கோத்தகிரி-சோலூர் மட்டம் சாலே.

*70. *கேள்வி.*—திரு. ஜே. மாதா கவுடர்: கனம் பொதுப்பணித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோத்தகிரி-சோலூர் மட்டம் பாதை தார் போடாமல் விடப்பட்டிருக்கும் காரணமென்ன?

(இ) எப்போது போட்டு முடிக்கப்படும்?

THE HON. SRI V. RAMAIAH: (a) & (b) The total length of the road is 7 miles 4 furlongs. The first four miles have been black-topped and the remaining length of three miles and four furlongs is metalled and in fair condition. This portion will also be black-topped in due course.

**திரு. ஜே. மாதா கவுடர்**: ஸார், இந்த 7 மைலுள்ள ரோடை தார் போடுவதற்கு மூன்று வருட காலமாகி இருக்கிறது. அடிக்கடி டிவிஷனல் என்ஜினியர் டெவலப்மென்ட் கவுன்சில் கூட்டத்திலே சர்க்கார் இதற்குப் போதிய பணம் கொடுக்கவில்லை என்று சொல்கிறார். ஆகவே, கனம் அமைச்சர் அவர்கள் இந்த டிவிஷனல் என்ஜினியர் அவர்களுக்கு உடனடியாக ஒரு உத்திரவு போட்டு, இந்த ஆண்டிலேயே எடுத்துக்கொண்டு அந்த ரோட்டுக்கு தார்போட நடவடிக்கை எடுப்பார்களா?

**கனம் திரு. வி. ராமைய்யா**: டெவலப்மென்ட் கவுன்சில் கூட்டத்தில் தீர்மானம் போட்டால் மட்டும் போதாது. அதற்கென்று இப்போதுள்ள கொள்கைப்படி பஸ் ரூட்டுகளுக்கெல்லாம் தார் போட வருஷத்திற்கு ஒவ்வொரு ஜில்லாவிற்கு குறிப்பிட்ட அளவுக்கு போடவேண்டுமென்று முடிவு செய்திருக்கிறோம். அந்த அடிப்படையிலே இந்த ரோடுகள் எடுக்கப்பட்டு இருக்கின்றன. மீதம் இருக்கக்கூடிய பகுதியை இந்த வருஷத்திலேயே தார் போடுவதற்கு, அதற்கான நடவடிக்கைகளை அதிகாரிகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

**திரு. ஜே. மாதா கவுடர்**: ஸார், இந்த ரோடு பஸ் ரூட்டாக கன்வெர்ட் செய்து மூன்று வருஷத்திற்கு மேலாகிறது. இப்போதுள்ள இந்த 7 மைல் ரோட்டை போடுவதற்கே மூன்று

வருட காலமாகி விட்டது என்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். இது பற்றி கனம் அமைச்சர் அவர்களுக்கு கிராமத்திலிருந்து போக்குவரத்துக்கு மிகவும் இடைஞ்சலாக இருக்கிறது என்று புகாரும், பஸ் போவதற்கு முடியாத நிலைமையில் இருக்கிறது என்று தந்தி மூலமும் சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே, தயவுசெய்து சீக்கிரமாக இந்த வருஷத்திலேயே அதைச் செய்வதற்கு அரசாங்கம் உத்திரவு இடுமா?

**கனம் திரு. வி. ராமைய்யா :** பஸ்கள் ஓடக்கூடிய ரோடுகள் தான் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன என்பது எனக்குத் தெரியும். இன்னும் நாம் எல்லா ரோடுகளுக்கும் 'ப்ளு மெடல்' போட்டு பூர்த்தி செய்து விட வில்லை. அதனாலேயே வருஷத்திற்கு எத்தனை மைல் எடுத்துக்கொள்வது என்று ஒரு அடிப்படை வைத்துக் கொண்டிருக்கிறோம். நீலகிரி மாவட்டத்திற்கு விசேஷ சலுகை காட்டப்பட்டு வருகிறது. அந்தக் காரணத்தினாலே தான் இந்த மீதம் இருக்கக்கூடிய பகுதி இந்த வருஷத்திலே பூர்த்தியாகிவிடும் என்று மீண்டும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்?

**திரு. டி. கர்ச்சா கவுடர் :** நீலகிரி ஜில்லாவிலுள்ள பஞ்சாயத்து யூனியனுக்கு ஒப்படைக்கப்பட்டுள்ள கிராமப்புற ரோடுகளுக்கு ரூரல் ஓர்க்ஸ் கிராண்டிலிருந்து தார் ரோடு போடக்கூடாது என்று அரசாங்கம் தடை விதித்துள்ளது கனம் அமைச்சர் அவர்களுக்கு தெரியுமா என்று கேட்க விரும்புகிறேன்.

**கனம் திரு. வி. ராமைய்யா :** அதற்கு தனியாக கேள்வி வேண்டும்.

SRI C. CHIRANJEEVULU NAIDU : Are the recommendations of the District Development Council regarding the classification of the roads taken into account by the Government?

THE HON. SRI V. RAMAIAH : Normally, their recommendations are considered.

*Office of Superintending Engineer (Projects) (Tiruchirappalli)*

* 74 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Works be pleased to state the reasons for shifting the office of the Superintending Engineer (Projects) from Tiruchirappalli to Tirunelveli?

THE HON. SRI V. RAMAIAH : The Tiruchirappalli Circle, as it was in 1959, was having eight divisions under its control. It was considered too heavy for a Superintending Engineer to have effective supervision and control. Hence, in 1960, the Government sanctioned the bifurcation of the regular Tiruchirappalli Circle by the formation of a new circle with headquarters at Tirunelveli. However, before the new circle was formed, it was observed that there was not sufficient work in the Projects Circle, Tiruchirappalli, because, out of the three schemes, namely, Kattalai High Level Canal Scheme, Pullambadi Canal Scheme and the Neyyar Irrigation Scheme dealt with in the Projects Circle—the first two schemes had almost been completed and the last one had reached an advanced stage in execution. Therefore, the Projects Circle was

4th July 1962]

abolished and the remaining work of the Projects Circle was attached to the newly formed circle at Tirunelveli, especially on account of the fact that the bulk of the remaining work relating to the Neyyar Irrigation Scheme was in Tirunelveli Circle. It will, therefore, be seen that the Projects Circle was abolished and there was no question of shifting its headquarters from Tiruchirappalli to Tirunelveli.

*Periyar-Idiki Project (Report)*

* 78 Q.—SRI K. MOOKIAH THEVAR : Will the Hon. the Minister for Works be pleased to state whether the Government have received any report on the Periyar-Idiki Project and if so, the action taken thereon?

THE HON. SRI V. RAMAIAH : The Government have not received the report on the Periyar-Idiki Project. A communication on the subject is awaited from the Government of India.

**திரு. கே. மூக்கையா தேவர் :** இந்தத் திட்டம் பற்றி ஏதாவது ஆராயப்பட்டதா ?

**கனம் திரு. வி. ராமையா :** மத்திய அரசாங்கம் ஆராய்ந்து கொண்டுதான் இருக்கிறது.

**திரு. கே. மூக்கையா தேவர் :** நமது அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு எந்த விதத்திலேனும் சொல்லி, இதை நல்ல முறையிலே நிறைவேற்றுவதற்கு காரணத்தைக் காட்டி இருக்கிறார்களா ?

**கனம் திரு. வி. ராமையா :** இதில் சம்பந்தப்பட்ட நதிகள் நமது மாகாணத்திலே ஒரு பகுதியில் ஓடக்கூடிய காரணத்தினால், எந்த ஒரு திட்டமும் ஆராய்ச்சி செய்து நிறைவேற்றுவதற்கு முன்பு மத்திய அரசாங்கத்திலுள்ள பிளானிங் கமிஷன் நமது அரசாங்கத்தின் அபிப்பிராயம் தெரிந்துதான் முடிவு செய்து கொண்டிருக்கிறார்கள். இப்போது அதற்கு வேண்டிய பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள். விரைவிலே அவர்களுடைய முடிவு நமக்குத் தெரியும்.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** இடிக்கி ஆறுத் திட்டம் என்பது இன்டர்-ஸ்டேட் ரிவர் என்பது உண்மையா ? இந்த இடிக்கி ஆறு தண்ணீரை நமது மாகாணத்திற்கு உபயோகப்படுத்தினால், மூன்று போகத்திற்கு வேண்டிய தண்ணீர் கிடைப்பதுடன், மின்சாரம் கிடைப்பதற்கும் வசதியாக இருக்குமாகையால், இதை மேற்குப் பகுதியில், திருப்பினால், மழைகாலத்திலே அந்தத் தண்ணீர் மிகவும் பிரயோஜனப்படும் என்று நம்புகிறேன். ஆகவே, இதனை மத்திய அரசாங்கத்திலே கனம் முதல் மந்திரி அவர்கள் தனக்குள்ள செல்வாக்கை உபயோகப்படுத்தி. நமது மாகாணத்தில் இப்படி திருப்பிவிடுவதற்கான முயற்சி எடுத்துக்கொள்வாரா என்று அறிய விரும்புகிறேன் ?

**கனம் திரு. வி. ராமையா :** மத்திய அரசாங்கத்திற்கு நமது அபிப்பிராயத்தை எடுத்துச் சொல்லி இருக்கிறோம். அவர்கள் அதை ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்து கொண்டிருக்கிறார்கள்.

[4th July 1962

அவர்கள் அப்படி ஆராய்ந்து ஒரு முடிவு எடுப்பதற்குமுன் நமது அரசாங்கத்தின் கருத்தை கேட்பார்களா என்பதை திரும்பவும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

**திரு. கே. மூக்கையா தேவர்:** இப்போது ஆராய்ச்சி செய்து முடிவெடுத்ததன்மூலமாக எவ்வளவு தண்ணீர் நமது நாட்டிற்கு கிடைக்கும்?

**கனம் திரு. வி. ராமைய்யா:** ஆராய்ச்சி நடந்து கொண்டிருக்கிறது.

**வெள்ளாற்றின் குறுக்கே அணைகள் கட்டுதல்**

* 107 **கேள்வி.—திரு. ஆ. துரையரசன்:** கனம் விவசாய அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

அறந்தாங்கி வட்டத்தில் வெள்ளாற்றில் ஆவுடையார் கோவில் அருகிலும், தண்டலை அருகிலும், மணலூர் அருகிலும் அணைகட்டுகள் கட்ட திட்டமிடப்பட்டிருள்ளதா?

THE HON. SRI P. KAKKAN: Yes, Sir, sanction has been accorded for construction of an anicut at Avadayarkoil. As regards anicuts in other two villages, the matter is under consideration.

**திரு. ஆ. துரையரசன்:** வெள்ளாற்றில் ஆவுடையார் கோவில் அருகிலும், மணலூர் அருகிலும், தண்டலை அருகிலும் அணைக் கட்டுகள் கட்டுவதற்கு மாவட்டத் தண்டல்நாயகம் அவர்களால் அரசாங்கத்திற்கு சிபார்சு செய்யப்பட்டதா? அதற்காகத் தொகைகள் ஒதுக்கப்பட்டுள்ளனவா?

**கனம் திரு. பூ. கக்கன்:** இதைத்தான் நான் சொன்னேன். ஆவுடையார்கோவில் அணை சாதகமாக இருக்கிறது. அடுத்து மணலூர் அருகில் உள்ள அணைக்கட்டு பரிசீலனையில் இருக்கிறது. இவைகள் எல்லாம் பரிசீலனை செய்து பின்னால் எடுத்துக்கொள்ளப்படும்.

*Tanks in Erode taluk (restoration)*

* 108 *Q.*—**SRI M. KALYANASUNDARAM:** Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) whether the Revenue Board has recommended for the restoration of the Pallipalayam tank and Kannimarkoil tank in Changapalli, Erode taluk: and

(*b*) if so, the reasons for the delay in sanctioning the same?

THE HON. SRI P. KAKKAN: (*a*) A scheme for the restoration of Pallapalayam tank in Chengapalli village has been recommended by the Board for sanction. The proposal is under the consideration of the Government. No proposal has been received by the Government or the Board, in respect of Kannimarkoil tank; and

(*b*) The final report of the Board of Revenue relating to the restoration of the Pallapalayam tank was received on 1st May 1962 and orders of Government will be issued shortly.

4th July 1962]

*வீணாக்கப்பட்ட மருந்துகள் (தலைமை மருத்துவ மனைகள்)*

*109 கேள்வி.—திரு. ம. கமலநாதன்: கனம் சுகாதார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1961-62-ல் மாவட்டத் தலைமை மருத்துவ நிலையங்களுக்கு வாங்கப்பட்ட மருந்துகளில் உபயோகிக்கப்படாமல் வீணாக்கப்பட்ட மருந்துகளின் மதிப்பு என்ன?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHALLUM: There has been no wastage of medicines purchased for use in the District Headquarters Hospitals in the State during the year 1961–62.

திரு. ம. கமலநாதன்: மாவட்டத் தலைமை மருத்துவ நிலையங்களில் யாரால், எப்படி மருந்து வாங்கப்படுகிறது? வாங்கப்படும் மருந்துகள் உபயோகப்படுத்தப்படுகின்றன?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM: A separate question may be put.

*Dharmapuri panchayat*

*110 Q.—SRI M. V. KARIVENGADAM: Will the Hon. the Minister for Municipal Administration be pleased to state—

(a) whether the Government have received a copy of the resolution from Dharmapuri Major Panchayat about the conversion of this panchayat into a municipality; and

(b) if so, the action taken thereon?

THE HON. SRI S. M. A. MAJID: (a) Yes, Sir.

(b) The proposal is under consideration.

SRI M. V. KARIVENGADAM: What is the population and the income per annum required to convert a major panchayat into a Municipality?

THE HON. SRI S. M. A. MAJID: A separate question may be put.

திரு. நா. ப. செங்கோட்டுவேலு: தர்மபுரி மேஜர் பஞ்சாயத்து ஜனத்தொகை எவ்வளவு என்று அறிய விரும்புகிறேன்.

(பதில் இல்லை.)

*Melapalayam Municipality*

*111 Q.—SRI V. KRISHNAMOORTHY: Will the Hon. the Minister for Municipal Administration be pleased to state whether the Government have received any representation from Melapalayam Municipal Council in Tirunelveli district to convert the municipality into a town panchayat?

THE HON. SRI S. M. A. MAJID: Recently a resolution of the Municipal Council, Melapalayam, requesting that the municipality might be converted into three panchayats was received and the request was turned down by the Government.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** மேலப்பாளையத்தில் இருக்கிற ஏழை முஸ்லிம்கள் முனிசிபல் வரியை தாங்கமுடியாமல் இருக்கும் காரணத்தினாலே, அவர்கள் விரும்புகிறபடி இந்த முனிசிபாலிடியை மூன்று நகர பஞ்சாயத்துகளாக மாற்றிக் கொடுக்க நம்முடைய அமைச்சர் அவர்கள் அனுதாபத்துடன் கவனிப்பார்களா என்று நான் கேட்க விரும்புகிறேன்.

**கனம் திரு. சே. ம. அ. மஜீத் :** இந்த நகராட்சியை மூன்று ஊராட்சி மன்றங்களாக மாற்றினாலும்கூட, பஞ்சாயத்து சட்டப்படி எல்லா வரிகளுக்கும் உட்படத்தான் செய்யும். வரியிலிருந்து தப்பும் அடிப்படையில்தான் இதை ஊராட்சி மன்றங்களாக மாற்றவேண்டும் என்று சம்பந்தப்பட்டவர்கள் கேட்கிறார்கள் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

*Political sufferers (Kanyakumari district)*

* 112 *Q.*—SRI A. KUNJAN NADAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Government have received any memorandum from the Kanyakumari District Political Sufferers' Association for help;

(*b*) if so, the action taken thereon;

(*c*) whether the Government have received any list of political sufferers from the District Congress Committee President, Kanyakumari district; and

(*d*) if so, whether the Government will lay on the table a copy of the list?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes;

(*b*) The Secretary, Kanyakumari District Political Sufferers' Association has been requested to instruct the persons whose names are found in the list to send individual representations to Government containing the details of their participation in the freedom struggle of the country;

(*c*) No; and

(*d*) Does not arise.

*Scholarships (income limit)*

* 113 *Q.*—SRI V. S. S. MANI : Will the Hon. the Minister for Agriculture be pleased to state whether there is any proposal to raise the present income limit of Rs. 1,500 per annum applicable to students applying for State scholarships?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

**திரு. வா. சொ. சு. மணி :** முன்பு ரூ. 1,500 வருமானம் உள்ள என்.ஜி.ஓ-க்களின் சம்பள விகிதம் பே கமிஷன் ரிபோர்ட்டுக்கு பிறகு அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது. அந்த முறையிலே அவர்கள் ரூ. 1,500-க்கு மேலே வருமானம் காட்டவேண்டி யிருக்கிறது. அந்த நிலையில் அவர்கள் சலுகை அடைய

முடியாமல் இருக்கிறார்கள். அதற்கு ஏதாவது வழிவகை செய்ய முடியுமா? இந்த ஆண்டு அவர்களுக்கு ஏதாவது வழி உண்டா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. பூ. கக்கன் :** அரசாங்கம் நிதி நிலைமைக்கு தக்க வாறு எவ்வாறு உதவி செய்ய முடியுமோ அவ்வாறு மாணவர் களுக்கு உதவி செய்துக்கொண்டுவருகிறது. சோசலிஸ சமுதாய பாணி அமைப்பில் ஏதாவது வசதி உடையவர்கள் வருமானம் வரும்போது கொஞ்சம் கொடுக்கத்தான் வேண்டும்.

**விவசாய உற்பத்தி கருத்தரங்கு**

*114 கேள்வி.—**திரு. ஜே. மாதா கவுடர் :** கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1962-ல் உதகையில் நடந்த தென் பிராந்திய விவசாய உற்பத்தி கருத்தரங்கில் என்னென்ன முடிவுகள் எடுக்கப்பட்டன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Since the seminar was convened by the Government of India, the proceedings and conclusions reached are awaited from them.

**திரு. ஜே. மாதா கவுடர் :** உதகையில் நடந்த தென் பிராந்திய விவசாய உற்பத்தி கருத்தரங்கில் நம்முடைய மாகாணத்தில் என்னென்ன வகையிலே உணவு உற்பத்தியை அதிகரிக்கவேண்டும் என்பதைப்பற்றி நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு தெரிவித்திருக்கிறார்களா? அதன் காரணத்தை ஒட்டி அண்மை மாகாணத்திலிருந்து நம் மாகாணத்திற்கு தண்ணீர் கொண்டு வருவதன் கருத்தைப்பற்றி விளக்கப்பட்டதா?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இது விவசாய உற்பத்தி பெருக்கத்தைப்பற்றிய கருத்தரங்கு. இதில் நீர்ப்பாசன விஷயங் கள் வந்திருக்க முடியாது. நம்முடைய அரசாங்கப் பிரதிநிதி களும் இந்த கருத்தரங்கில் கலந்துகொண்டார்கள். இந்த கருத் தரங்கின் நடவடிக்கை விவரங்கள் இன்னும் இந்த அரசாங்கத் திற்கு வரவில்லை.

*Municipal Council, Madurai*

*115 Q.—SRI K. MOOKIAH THEVAR : Will the Hon. the Minister for Municipal Administration be pleased to state—

(*a*) whether the Government have received any representation from the Madurai Municipal Council to increase the number of seats in the Council on population basis; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI S. M. A. MAJID : (*a*) Yes, Sir.

(*b*) The matter is under consideration.

**திரு. கே. மூக்கையா தேவர் :** அது எப்பொழுது அதிகப் படுத்தப்படும்?

**கனம் திரு. சே. ம. அ. மஜீத் :** அது பரிசீலனையில் இருக்கிறது. இப்பொழுது சொல்வதற்கில்லை.

[4th July 1962

டோபிகானு அமைத்தல் (நிதி உதவி)

***116. கேள்வி.—திரு. முனு ஆதி:** கனம் நகராட்சி அமைச்சர் தயவுசெய்து கிழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஊராட்சி மன்றங்களுக்கும், நகராண்மைக் கழகங்களுக்கும் டோபிகானு அமைக்க அரசாங்கம் உதவித்தொகை அளிக்கிறதா?

(இ) அப்படியானல், 1961-62-ல் எத்தனை ஊராட்சி மன்றங்கள், நகராண்மைக் கழகங்கள் எவ்வளவு தொகை பெற்றுள்ளன?

THE HON. SRI S. M. A. MAJID: (*a*) Yes, Sir;

(*b*) Loans aggregating Rs. 1,40,000 to three Municipalities and Rs. 7,500 to two panchayats were given in 1961-62.

அரக்கோணம் நகரசபை ஆணையர் (புகார்கள்)

***117 கேள்வி.—திரு. எஸ். ஜே. ராமசாமி:** கனம் நகராட்சி நிர்வாக அமைச்சர் தயவுசெய்து கிழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

அரக்கோணம் நகரசபையின் ஆணையாளர்மீது துண்டுப் பிரசுரமூலமாகவும், மகஜர்மூலமாகவும் வந்த புகார்கள்மீது அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது?

THE HON. SRI S. M. A. MAJID: The complaints are being enquired into by the appropriate authorities.

**திரு. எஸ். ஜே. ராமசாமி:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஆணையாளர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேந்தவர். அவர் நமது முதல் அமைச்சரின் ஊருக்கு பக்கத்து ஊர் என்று சொல்லிக்கொண்டு லஞ்சங்கள் வாங்கிக்கொண்டிருக்கிறுர். அவர் மீது என்ன நடவடிக்கை எடுக்க உத்தேசம் இருக்கிறது?

MR. SPEAKER: The hon. Member should simply put the question and cannot make a speech.

(No reply.)

ஹோமியோபதி வைத்தியமுறை (அங்கீகாரம்)

MR. SPEAKER: Question No. 118.

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM: Sir, the hon. Member who gave notice of this question is not in his seat.

MR. SPEAKER: As the hon. Member who gave notice of question No. 118 is not in his seat the question and answer will be printed in the proceedings.

***118 கேள்வி.—திரு. எம். எஸ். செல்வராஜன்:** கனம் சுகாதார அமைச்சர் தயவுசெய்து கிழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஹோமியோபதி வைத்திய முறையை இந்த அரசாங்கம் அங்கீகரித்துள்ளதா?

(இ) ஹோமியோபதி டாக்டராக பணியாற்றுவதற்கு ரிஜிஸ்ட்ரேஷன் முறை உண்டா?

4th July 1962]

(உ) ரிஜிஸ்டர் செய்துகொள்வதற்குரிய நடைமுறைகள் என்னென்ன?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : (a) Yes, Sir;

(b) None at present; and

(c) Does not arise.

*Drainage scheme for Kandaparichan canal*

* 119 Q.—SRI A. K. SUBBIAH : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(a) when the drainage scheme for Kandaparichan canal in Tiruthuraipundi taluk, Thanjavur district, was launched;

(b) the amount sanctioned for the scheme;

(c) whether the scheme has been completed; and

(d) if not, the reasons therefor?

**கனம் திரு. பூ. கக்கன்** : (அ) கொந்தப்பரிசான் ஆற்றுக்கு குறுக்கே அணை கட்டும் திட்டமானது 1958-ம் ஆண்டு எப்ரல் மாதம் துவக்கப்பட்டது.

(இ) இதற்கு எஸ்டிமேட் ரூ. 4,82,400.

(உ) இல்லை. 30—6—1962-க்குள்ளே இதை நிறைவேற்ற திட்டமிடப்பட்டிருக்கிறது.

(எ) ஜாம்பவான்ஓடை வில்லேஜில் நில ஆர்ஜிதம் செய்ய வேண்டியிருக்கிறது. அதனால்தான் காலதாமதம். அது இன்னும் முடியவில்லை. அதுதான் முக்கியகாரணம். இருந்தாலும், 'குலோஷர் பீரியடிற்குள்' இதை முடித்து நல்ல முறையில் நிறைவேற்றுவதற்கு ஏற்பாடு செய்யப்படும்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்** : கனம் அமைச்சர் அவர்கள் கூறிய தகவலிலிருந்தும், எனக்கு கிடைத்திருக்கக்கூடிய தகவலிலிருந்தும், கால்வாய் சம்பந்தப்பட்ட மட்டில் வெட்டி பூர்த்தியாகி 7 ஆண்டு காலமாகிவிட்டதே, வடிகால் வெட்டுவதற்குத்தான் காலதாமதம் ஆகிறது. ஜாம்பவான்ஓடையில் வடிகாலுக்குத் தேவையான நிலம் மிகவும் செல்வாக்குள்ளவர் கையில் இருப்பதினால், 7 ஆண்டுகள் தாமதம் ஆகி, 2,000 ஏகர் மகசூல் நஷ்டம் அடைகிறது என்பது உண்மையா?

**கனம் திரு. பூ. கக்கன்** : செல்வாக்குள்ளவர் கையில் நிலம் இருக்கிறதா என்று எனக்குத் தெரியாது. இருந்தாலும், எவ்வளவு செல்வாக்குள்ளவர் நிலமாக இருந்தாலும், அதை ஆர்ஜிதம் பண்ண அரசாங்கம் பின்வாங்காது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்** : சம்பந்தப்பட்ட நிலத்தை ஆர்ஜிதம் செய்வதற்காக இதுவரை எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் என்னென்ன என்று அறிவிக்க முடியுமா?

[4th July 1962

**கனம் திரு. பூ. கக்கன்:** அநேகமாக எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டிருக்கின்றன. திட்டமே இந்த 'குளோஷர் பீரியடிற்குள்' முடிந்துவிடும் என்று சொல்லுகிறார்கள். அநேகமாக எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டிருக்கின்றன.

*Veterinary College*

*120 Q.—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(a) whether there is any proposal to open an additional Veterinary College; and

(b) if so, the details thereof?

THE HON. SRI P. KAKKAN: (a) Yes, Sir; and

(b) Details of the proposal have not yet been settled.

*Entertainment tax (surcharge)*

*121 Q.—SRI V. KRISHNAMOORTHY: Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether there is any proposal to withdraw the powers conferred on local bodies to levy surcharge on entertainments taxes; and

(b) if so, the reasons therefor?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) No such proposal is just now under consideration of Government; and

(b) Does not arise.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி:** ஸ்தல ஸ்தாபனங்களுக்கு சர்சார்ஜ் விதிக்கின்ற உரிமை கொடுத்திருக்கிற காரணத்தினால், ஒரே சினிமாவுக்கு பல பகுதிகளிலே பல விதமாக டிக்கெட் விலைகள் அமைந்திருப்பதால், ஏழைகளும் மற்றவர்களும் கஷ்டத்திற்கு உள்ளாகிறார்கள். அதனால் அதை ஒருமுகப்படுத்தும் வகையில் பஞ்சாயத்து யூனியன், முனிசிபாலிடிகளுக்கு கொடுத்திருக்கும் அதிகாரத்தை ரத்து செய்துவிட்டு, இது விஷயமாக ஏதாவது ஒரு 'யுனிபாரம்' சட்டத்தை கொண்டுவர சர்க்கார் முன்வருமா என்று அறியவிரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** இந்த அதிகாரம் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அளிக்கப்பட்டது. இந்த மன்றத்தில் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தினால். ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களை எடுத்துவிடும் விஷயத்தில் நாம் நினைத்தமாதிரி செய்வது முறையல்ல. ஆகையினால் அரசாங்கத்திற்கு அந்த உத்தேசம் இல்லை என்று சொன்னேன்.

*Medical Colleges (admissions)*

*122 Q.—SRI V. S. S. MANI: Will the Hon. the Minister for Health be pleased to state whether the Government propose to reserve any seats for Science Graduates in regard to admission to Medical Colleges.

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM: No, Sir.

4th July 1962]

**திரு. வா. சொ. சு. மணி :** மருத்துவக் கல்லூரிகளில் சேரு வதற்கு பி.யூ.சி. படித்தவர்களும், **Science Graduates** என்று சொல்லக்கூடிய விஞ்ஞானப் பட்டதாரிகளும் மனுக்கள் செய் கிறார்கள். ஆனால் பி.யூ.சி.-யில் வாங்கிய மார்க்குகளை வைத்துக் கொண்டுதான் செலக்ஷன் கமிட்டியிலேயே முடிவு செய்கிறார்கள். மூன்று ஆண்டுகள் அதிகமாகப் படித்த விஞ்ஞானப் பட்டதாரி களுக்கும், பி.யூ.சி. படித்தவர்களுக்கும் என்ன பாகுபாடு செய் கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன். அவர்களுக்குத் தனிச் சலுகை கொடுக்க முடியுமா, அல்லது தனியாக இடம் ஒதுக்கமுடியுமா?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** சாதாரணமாக, பி.யூ.சி. மார்க்குகள், அதாவது கிரேடு மார்க்குகளை வைத்துக்கொண்டு தான் மெடிகல் கல்லூரிகளுக்கு ஸெலக்ஷன் செய்யப்படுகிறது. 'பி.எஸ்.ஸி. கிராடுவேட்ஸ்' மனுச் செய்துகொண்டால், 'மெரிட்' டின் காரணமாக அவர்களையும் எடுத்துக்கொள்ளலாம்.

*Drugs supplied to Government hospitals (quality)*

*123 *Q.*—Sri K. MOOKIAH THEVAR: Will the Hon. the Minister for Health be pleased to state—

(*a*) whether the medicines supplied to the patients, especially N.G.Os., at various Government hospitals are of inferior quality when compared to the medicines of private nursing homes and pharmacies; and

(*b*) if so, what are the remedial measures to be taken by the Government?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM: (*a*) No, Sir; and

(*b*) Does not arise.

**திரு. கே. மூக்கையா தேவர் :** அது சம்பந்தமாக, தரக்குறை வான மருந்துகள் கொடுக்கப்பட்டுவருகிற காரணத்தால் அவை கள் பிரயோஜனம் இல்லை. ஆகவே தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று என்.ஜி.ஓ.-க்கள் சங்கத்திலிருந்து தீர்மானம் வந்திருக்கிறதா.

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** என்.ஜி.ஓ.-க்களாக இருந்தாலும் சரி, மற்றவர்கள் ஆனாலும் சரி, தரக்குறைவான மருந்துகள் அரசாங்க ஆஸ்பத்திரிகளில் கொடுக்கப்படவில்லை. ஏதாவது ஸ்பெஸிபிக் கேஸ்கள் இருந்தால் தெரிவிக்கும்படி கனம் அங்கத்தினரைக் கேட்டுக்கொள்கிறேன்.

*Kothavalchavadi market*

MR. SPEAKER: As the hon. Member who gave notice of **question No. 124 is not in his seat, the question and answer will be printed in the proceedings.**

[4th July 1962

* 124 Q.—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Municipal Administration be pleased to state—

(a) whether it is a fact that he visited recently incognito the Kothavalchavadi in Madras City;

(b) whether he has made any observation in this connection; and

(c) whether a copy of the reference sent to the Corporation of Madras in this regard will be placed on the Table of the House?

THE HON. SRI S. M. A. MAJID : (a) A surprise visit was made on 9th May 1962;

(b) Yes, Sir; and

(c) No, Sir.

*Hospitals for N.G.Os.*

* 125 Q.—SRI K. MOOKIAH THEVAR : Will the Hon. the Minister for Health be pleased to state—

(a) whether there is any proposal to construct hospitals exclusively for N.G.Os.; and

(b) if so, the details thereof?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : (a) The question of providing separate hospital facilities for Non-Gazetted Officers is under consideration; and

(b) The details have not yet been settled.

*Expanded Nutrition Programme*

* 126 Q.—SRI V. SANKARAN AND SRI K. MOOKIAH THEVAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) the nature of help received from FAO, WHO and UNICEF for implementing the "Expanded Nutrition Programme"; and

(b) the centres selected for the implementation of this programme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Under the Expanded Nutrition Programme, UNICEF have agreed to provide technical supplies and equipment, as also, financial assistance to cover the cost of stipends and travel in connection with the training programme. The total UNICEF allocation for the programme as a whole is estimated at $ 2,45,000. The programme has the technical approval of the Food and Agriculture Organization and World Health Organization. Food and Agriculture Organization and World Health Organization will provide experts and technical assistance and guidance to the Project at the request of the State Government; and

(b) the programme is implemented in the seven rural extension training centres at Krishnagiri, Bhavanisagar, S.V. Nagaram, T. Kallupatti, Aduthurai, Pattukkottai and Koilpatti and in the seven blocks attached to the training centres.

4th July 1962]

திரு. கே. மூக்கையா தேவர் : எந்த அடிப்படையில் இந்த இடங்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றன?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : பரவலான முறையிலே இம் மாதிரி ஏழு இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன.

திரு. கே. மூக்கையா தேவர் : இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக இடங்களைத் தேர்ந்தெடுக்கும்பொழுது, எந்த அடிப்படையிலே எடுக்கப்படுகின்றன?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : ஏழு ஸ்தலங்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும். ஏதாவது ஏழு இடங்களைத்தான் தேர்ந்தெடுக்க முடியும். அப்படித் தேர்ந்தெடுக்கும்பொழுது, ஒரே மாவட்டத்திலே இல்லாமல், பரவலான முறையிலே தேர்ந்தெடுக்கிறோம்.

கனம் சபாநாயகர் : கேள்விகள் முடிவடைந்தன.

[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

* திரு. ஜே. மாதா கவுடர் : ஆன் எ பாயின்ட் ஆப் இன்பர்மேஷன், ஸார். கேள்வி நேரத்திற்காக நாம் ஒரு மணி நேரம் ஒதுக்கியிருக்கிறோம். அரை மணி நேரத்திற்குக்கூட கேள்விகள் வரவில்லை. ஏராளமான கேள்விகளை அங்கத்தினர்கள் கொடுத்திருக்கிறார்கள். இந்த கேள்விகளுக்கெல்லாம் சம்பந்தப்பட்ட இலாகாக்களிலிருந்து உடனடியாக பதில்கள் வருவதற்கு கனம் சபாநாயகர் அவர்கள் கவனிப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

கனம் திரு. எம். பக்தவத்சலம் : நாம் நிச்சயமாக இந்த மாதம் 28-ம் தேதிவரையில் கூட்டம் நடத்துவோம். அதற்குள்ளாக, அநேகமாக அனுப்பப்பட்ட கேள்விகளுக்கு எல்லாம் விடை அளிக்கப்படுமென்று நான் நம்புகிறேன்.

## II.—STATEMENT BY A MEMBER *re* HIS SUPPLEMENTARY QUESTION.

திரு. மீ. கலியாணசுந்தரம் : ஆன் எ பாயின்ட் ஆப் பெர்ஸனல் எக்ஸ்பிளனேஷன், ஸார். நேற்றைய தினம் கேள்வி நேரத்தின் போது, நான் கொடுத்த தகவலில் ஒரு தவறைத் திருத்துவதற்காக நான் எழுந்து நிற்கிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீ மூக்கையா தேவர் சர்க்கார் உத்யோகஸ்தர்களின் மருத்துவச் சலுகைகள் சம்பந்தமாக கேள்வி போட்டபொழுது நான் ஒரு உப கேள்வியைக் கேட்டது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரியும். அந்த உப கேள்வியில், விலை உயர்ந்த மருந்துகளை என்.ஜி.ஓ.-க்களுக்கு அளிக்கக்கூடாது என்று அரசாங்கம் உத்தரவு போட்டிருக்கிறதா என்று கேட்டேன். கனம் முதல் அமைச்சர் அவர்கள், அப்படியிருந்தால் அந்த உத்தரவைக் காட்டுங்கள் என்று கேட்டார். அது அரசாங்க உத்தரவு அல்ல. டைரக்டர் ஆப் மெடிகல் செர்விஸ் அனுப்பியிருக்கக்கூடிய ஒரு சுற்றறிக்கை

[திரு. மீ. கலியாணசுந்தரம்] [4th July 1962

இரண்டு வருடங்களுக்கு முன்னர் என் கைக்கு வந்தது. பழைய சட்ட சபையிலே கூட நான் இதைப்பற்றி ஒரு கேள்வி கொடுத்திருந்தேன். ஆனால் அதற்கு விடையளிக்கப்படவில்லை. என்னுடைய பழைய ரிக்கார்டுகளிலிருந்து அந்த சுற்றறிக்கையை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன். தங்கள் மூலமாக அதை கனம் அமைச்சர் அவர்களிடம் கொடுக்கிறேன். அதை கவனிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

(கனம் அங்கத்தினர் சுற்றறிக்கையை கனம் மருத்துவ அமைச்சர் அவர்களிடம் சமர்ப்பித்தார்.)

## III.—ADJOURNMENT MOTION *re* POWER-CUT IN THE STATE.

**கனம் சபாநாயகர்:** கனம் அங்கத்தினர் ஸ்ரீ சா. கணேசன் அவர்கள் மின்சாரப் பற்றுக்குறையைப் பற்றி ஒரு ஒத்திவைப்புப் பிரேரணை நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். அது இப்பொழுதுதான் கொடுக்கப்பட்டது. அதில் குறிப்பிட்டுள்ள விஷயத்தையும் சேர்த்து நாளையதினம் கனம் நிதி அமைச்சர் அவர்கள் 41-வது விதியின்கீழ் கொடுக்கப்போகிற ஸ்டேட்மெண்டில் பதில் சொல்லுவார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஆதலால் இந்த ஒத்திவைப்பு பிரேரணைக்கு அவசியமில்லை. நான் இன்னொன்று சொல்ல விரும்புவது என்னவென்றால்:

"A member desirous of moving a motion for an adjournment of the business of the House for the purpose of discussing a definite matter of urgent public importance shall, before the commencement of the sitting of the Assembly at which he proposes to ask for leave of the House to make his motion, hand to the Secretary three copies of a statement in writing of the matter proposed to be discussed, and obtain the Speaker's consent to his asking for leave to make the motion".

மூன்று காப்பிகளுடன் முன்னதாகவே கொடுத்தால், ஒருவேளை சம்பந்தப்பட்ட அமைச்சருக்கு அனுப்பி, அவர்களும் தயாராக வரலாம் என்ற நோக்கத்தோடு போட்டிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. இனிமேல் அவ்வாறு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்று நேரம் இல்லாத காரணத்தினலே திரு. சா. கணேசன் அவர்கள் திடீரென்று கொடுத்திருக்கலாம். இந்த அட்ஜார்ன்மெண்ட் மோஷனுக்கு அவசியமில்லை என்று நான் நினைக்கிறேன். நாளைக்கு கனம் மந்திரி அவர்கள் கொடுக்கப்போகும் ஸ்டேட்மெண்டில் இதையும் சேர்த்துச் சொல்லுவார்கள் என்று நினைக்கிறேன்.

**திரு. சா. கணேசன்:** இந்த ஒத்திவைப்பு பிரேரணையைக் கொடுத்ததின் நோக்கம் கனம் மந்திரி அவர்களுடைய கவனத்திற்கு இந்த விஷயத்தைக் கொண்டுவரவேண்டும் என்பதற்காகத்தான். வட ஆற்காடு ஜில்லாவிலே ஆரணி பிர்காவிலே மூன்று

4th July 1962] [திரு. சா. கணேசன்]

நாட்களாக விவசாயத்திற்குத் தண்ணீர் எடுப்பதற்குரிய மோட்டார்களுக்கு அளிக்கப்படும் மின்சாரத்தை முழுவதும் நிறுத்திவிட்டார்கள்.

**திரு. ஜே. மாதா கடவுர் :** On a point of order, Sir. கனம் சபாநாயகர் அவர்கள் நாளையதினம் கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லுவார்கள் என்று தீர்ப்பு சொன்னபிறகு, மறுபடியும் கனம் அங்கத்தினர் அதை எடுத்துச் சொல்லுவது முறையா என்று கேட்கிறேன்.

**திரு. சா. கணேசன் :** இதை நான் இப்பொழுது பிரேரேபிக்க வில்லை. ஏன் இதைக் கொண்டு வந்தேன் என்பதைப் பற்றித் தான் சொல்லுகிறேன். இதைப்பற்றி எனக்கு காலை 7-50 மணிக்குத் தான் டெலிபோன் மூலம் செய்தி வந்தது. ஆகையால்தான் இங்கே வந்து மிகவும் அவசரமாக எழுதிக்கொடுத்தேன். குற்றம் சொல்லவேண்டும் என்பதற்காக அல்ல, நிவாரணம் கிடைக்க வேண்டுமென்பதற்காகத்தான் இதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அதை, நாளை எடுத்துக்கொள்வதற்கு கனம் சபாநாயகர் அனுமதி தந்ததற்கு எனது நன்றி. இனி அவர்கள் குறிப்பிட்டபடி, மூன்று பிரதிகளை எவ்வளவு காலம் முன்னதாகவே கொடுக்க முடியுமோ, அவ்வளவு முன்னதாகவே கொடுப்பதற்கு முழு முயற்சி எடுத்துக்கொள்வேன் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Thanks.

## IV.—ANNOUNCEMENT.

### THE MADRAS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1962.

9-00 a.m.

MR. SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the introduction in the Madras Legislative Assembly of the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1962.

## V.—GOVERNMENT BILL.

### THE MADRAS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1962.

THE HON. SRI V. RAMAIAH : Sir, I beg leave to introduce the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1962.

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1962'.

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI V. RAMAIAH : Sir, I introduce the Bill, Sir.

MR. SPEAKER : The Bill is introduced.

VI.—SUPPLY OF BUDGET PAPERS.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** கனம் சபாநாயகர் அவர்களே, ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர்: பட்ஜெட் பேபர்களைப்பற்றி வழக்கமாக டிடெயில்ட் எஸ்டிமேட் ஆப் பட்ஜெட் என்ற பெரிய புஸ்தகம் கொடுக்கப்படுவது வழக்கம். அதற்கு சில அனுபந்தங்களும் கொடுக்கப்படுவது வழக்கம். இது வரையில் அப்படித்தான் கொடுக்கப்பட்டு வந்தது. ஆனால் இந்த வருடம் அதிகப்படியாக புஸ்தகங்கள் கொடுக்கப்பட்டாலும் அந்த இரண்டு அனுபந்தங்களும் கொடுக்கப்படவில்லை. அவற்றில் ஒன்று கெஜட்டட் ஆபிசர்களுடையவும், நான்-கெஜட்டட் ஆபிசர்களுடையவும் சம்பள விகிதங்கள் அவர்களுடைய நிரந்தர உத்தியோகங்கள் இவைகளைப்பற்றியெல்லாம் இருக்கும். இந்த அரசாங்கத்தில் வேலை பார்க்கக்கூடியவர்களுடைய ஜாப்தா அதில் இருக்கும். அந்தந்த இலாகாவில் வேலை பார்க்கக்கூடியவர்களுடைய நிரந்தர ஜாப்தாவும் இருக்கும். அவரவர்களுக்கு என்னென்ன சம்பளம் என்றெல்லாம் இருக்கும். அவரவர்களுடைய பஞ்சப்படி எல்லாம் இருக்கும். அந்த ஜாப்தா வழக்கமாகக் கொடுக்கப்படுவது, இப்பொழுது கொடுக்கப்படவில்லை. அதன் காரணம் என்னவென்பது தெரியவில்லை. இன்னும் இந்த விவாதம் இரண்டு நாட்கள் நடக்கப் போகிறது. அதற்குள் அவற்றை அச்சடித்துக் கனம் அங்கத்தினர்களுக்குக் கொடுக்க முடியுமா? அப்படி தனியாக அச்சடித்துக் கொடுக்க ஏற்பாடு செய்ய முடியுமா என்பதைத் தெரிந்து கொள்வதற்குத்தான் இந்த ஒழுங்குப் பிரச்னையைக் கொடுத்திருக்கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் சபாநாயகர் அவர்களே, இதைப்பற்றி நாளை விளக்கம் கூறுகிறேன். ஆனால் சில அங்கத்தினர்கள் அதிகப்படியான பேப்பர் அச்சடித்துக் கொடுத்திருக்கிறார்கள் என்று புகார் சொல்லுகிறார்கள். ஆனால் கனம் கலியாணசுந்தரம் அவர்கள் சிலவற்றைக் கொடுக்கவில்லை என்று சொல்லுகிறார். ஏன் கொடுக்கப்படவில்லை என்பதைப்பற்றி நாளை விளக்கம் கூறுகிறேன்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** புஸ்தகம் கொடுக்கவில்லை என்றால் புகார் சொல்வதாக அர்த்தமில்லை.

VII.—REVISED BUDGET FOR 1962-63—GENERAL DISCUSSION—*cont.*

* **திரு. ஏ. ராமச்சந்திர ராயர்:** கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது 1962-63-க்கான நிதி நிலை ஆண்டு அறிக்கையைப்பற்றி பேசும்போது அதை நான் வரவேற்று என்னுடைய சில கருத்துக்களைச் சொல்ல முன்வந்துள்ளேன். நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் சற்று நிதானத்துடனும், நல்ல முறையிலும் இந்த நிதி நிலை அறிக்கையை தயாரித்து சமர்ப்பித்திருக்கிறார். அதை நான் ஆதரிக்கிறேன். எதிர்க்கட்சி அங்கத்தினர் திரு. கருணாநிதி அவர்கள் பேசும்போது பல புள்ளி விவரங்களைக் கொடுத்து அள்ளித் தெளித்து விட்டார்கள் என்று குறிப்பிட்டார். அதைப்போலவே கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம்

4th July 1962] [திரு. எ. ராமச்சந்திர ராயர்]

அவர்கள் இதைப்பற்றி குறிப்பிடும்போது அதிகப்படியான புத்தகத்தைக் கொடுத்து இருக்கிறார்கள் என்று குறிப்பிட்டார். மற்றும் கட்டுக் கட்டாக நிறைய புஸ்தகங்களைக் கொடுத்திருக்கிறார்கள் என்றும் குறிப்பிட்டார். ஆனால் இந்த பட்ஜெட்டானது நல்ல முறையில் நிதானத்துடன் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். தெளிவாகவும், அநேக புள்ளி விவரங்களைக் கொடுத்தும் பல விவரங்களைக் கொடுத்தும் இந்த பட்ஜெட் நல்ல முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். இருந்தபோதிலும் இதில் சில குற்றங்களை எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் எடுத்துக் குறிப்பிட்டார்கள். குறை சொல்லவேண்டும் என்ற காரணத்திற்காகத்தான் அவர்கள் குறை சொல்லுகிறார்கள். எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் இன்றைக்கு குற்றம் சொல்வதெல்லாம் விலைவாசி உயர்வைப் பற்றி தான். குறிப்பாக இந்த பட்ஜெட் கூட்ட ஆரம்ப தினத்தில் ஆயிரக்கணக்கானவர்கள் அட்டைகளை ஏந்திக்கொண்டு விலைவாசி உயர்வைக் குறைக்க வேண்டுமென்று கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள். விலைவாசிகளை குறைக்க வேண்டும் என்று சொன்னால் அதற்கு அட்டைகளை ஏந்திக்கொண்டு கூச்சல் போடுவதில் பிரயோசனம் இல்லை. அதைக் குறைப்பதற்கு எவ்வளவோ யோசனைகளை சட்ட மன்ற உறுப்பினர்கள் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட யோசனைகளைச் சொல்ல வேண்டுமேயொழிய அட்டைகளை ஏந்திக்கொண்டு சத்தம் போடுவதில் பிரயோசனம் இல்லை.

அது மாத்திரம் அல்ல. தற்போது இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டு அவை முடிந்து இப்பொழுது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் நடந்து வருகிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ஒன்பது லட்சம் டன் உணவு தானியங்கள் அதிகமாக உற்பத்தி செய்திருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 17 லட்சம் டன் அதிகப்படியான உற்பத்தி செய்ய வேண்டும் என்று திட்டமிட்டிருக்கிறார்கள். அதற்கு வேண்டிய உரங்களை சேகரித்துக் கொடுக்க சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகளும் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு வேண்டிய அளவும் பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு என்று பட்ஜெட்டிலும் வேண்டிய நிதி ஒதுக்கியிருக்கிறார்கள், அதிகப்படியாக உரம் தயாரிக்கவும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதே சமயத்தில் இன்றைக்கு விவசாய நிலங்களின் மீது வரி விதிக்கப்போகிறார்கள். அப்படி விவசாய நிலங்களுக்கு வரி விதிப்பதை நான் ஆட்சேபிக்க வேண்டியதாக இருக்கிறது. அப்படி விதித்தால் அதனால் விவசாயிகள் பெரிய அளவில் பாதிக்கப்படுவார்கள். நில உச்ச வரம்புச் சட்டம் கொண்டு வந்த பிறகு சாதாரணமாக ஒருவருக்கு முப்பது எக்கர் நிலம் தான் இருக்கும். அந்த முப்பது ஏகாராவிலிருந்து வருவாய் அவருக்கு ஒரு எக்கருக்கு 15 கலம் விதம் அதாவது ஒரு கலத்திற்கு பட்டணம் படி 25 விதம் கணக்குப் பார்த்தால் அந்த விவசாயிக்கு சராசரி ஒரு ஆண்டுக்கு 400 கலம் வரும். அதன் மூலம் அவருக்கு வருவாய் சாதாரணமாக 4,000 ரூபாய் வரும்.

[திரு. எ. ராமச்சந்திர ராயர்] [4th July 1962

இந்த நாலாயிரம் ரூபாய் வருவாயை வைத்துக்கொண்டு அவன் எப்படி தன்னுடைய குடும்பத்தை நடத்த முடியும். சாதாரண மாக ஒரு குடும்பத்தில் ஒரு ஆண்டு வருவாய்—மூட்டை ஒன்று 20 ரூபாய் என்று விற்றால்—நாலாயிரம் ரூபாய் வரும். அந்தக் குடும்பத்தில் நாலைந்து பிள்ளைகள் இருக்கிறார்கள் என்று வைத்துக் கொண்டு ஒரு பிள்ளை சர்வகலாசாலை படிப்பும், மற்றொரு பிள்ளை ஹைஸ்கூல் படிப்பும், மற்றொரு பிள்ளை காலேஜ் படிப்பும் என்று வைத்துக்கொண்டால் அவர்களுக்கு ஆண்டு ஒன்றுக்கு 1,500, 1,000 என்ற முறையில் படிப்புக்காக செலவு செய்ய வேண்டியதாக ஏற்படுகிறது. இப்படி செலவு செய்துவிட்டு தன்னுடைய பெரிய குடும்பத்தை பழைய நிலைமைப்படிக்கே நல்ல முறையில் நடத்த வேண்டியதாக வேறு இருக்கிறது. அதற்கு என்ன செலவாகும் என்பதையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த முறையில் அந்த விவசாயி தன்னுடைய முப்பது ஏக்கராவை வைத்துக்கொண்டு வருட வருமானம் ரூபாய் 4,000 என்று வைத்துக்கொண்டு நல்ல முறையில் தன்னுடைய குடும்பத்தை நடத்த முடியுமா என்பதைப் பார்க்க வேண்டும். படிப்புக்கு கிட்டத்தட்ட 2,500 ரூபாய் வரையில் செலவு செய்துவிட்டு மிச்ச முள்ள ஆயிரம் ரூபாயை வைத்துக்கொண்டு தன்னுடைய குடும்பத்தை நடத்த முடியுமா என்பதைப் பார்க்கவேண்டும். இந்த நிலைமையில் குடும்பத்தின் வாழ்க்கைச் செலவு நாளுக்கு நாள் உயர்ந்துகொண்டேதான் போகிறது. இந்த நிலைமையில் அவனுக்கு இன்னும் அதிகப்படியாக வரி விதித்தால் எப்படி குடும்பத்தை நடத்த முடியும்? மற்றும் தற்காலம் உற்பத்திச் செலவு வேறு அதிகமாக ஆகிறது. இப்பொழுது நான்கு ஆட்கள் முன்பு வேலை செய்த ஏக்கரில் எட்டு ஆட்கள் வேலை செய்கிறார்கள். இன்னும் விவசாயச் செலவு வேறு அதிகமாக ஆகிறது. இந்த முறையில் அதிகமாக வரி விதித்தால் விவசாயிகளுக்குக் கட்டுப்படியாகுமா என்பதையும் யோசிக்க வேண்டியதாக இருக்கிறது.

அடுத்தபடியாக, விவசாயத்திற்கு மின்சாரத்தை உபயோகிக்க இப்பொழுது ஆரம்பித்திருக்கிறார்கள். அதற்கும் வரி விதிக்கப் பட்டிருக்கிறது. விவசாயத்திற்கு என்று எடுத்துக்கொள்ளக்கூடிய மின்சாரத்தின் வரியை நான் எதிர்க்க வேண்டியதாக இருக்கிறது. விவசாயத்திற்குத் தவிர மற்றவைகளுக்கு உபயோகப்படுத்தக் கூடிய மின்சாரத்திற்கு வரி போடுவதாக இருந்தால் அதைப்பற்றி ஆட்சேபணை இல்லை. மற்றவைகளுக்கு வரி விதிக்கலாம்.

அடுத்தபடியாக, என்னுடைய புவனகிரி தொகுதியில் தென் ஆற்காடு மாவட்டத்தில் தொழில் பேட்டையை அமைக்காமல் அதை புறக்கணித்திருக்கிறார்கள். ஆகவே சிதம்பரம் போன்ற இடத்தில் ஒரு தொழில் பேட்டையை அமைக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்தபடியாக சிதம்பரம் தொகுதியில் ஒரு மருத்துவக் கல்லூரியை அமைத்துக் கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அது இல்லாமல் அங்கு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சமீபத்தில் கனம் அமைச்சர் அவர்கள்

**4th July 1962]** *[திரு. ஏ. ராமச்சந்திர ராயர்]*

அங்கு சுமார் 100 படுக்கைகள் கொண்ட ஆஸ்பத்திரியை திறக்கப் போகிறார்கள். இது போதாது. ஆகவே அதிகப்படியாக படுக்கைகள் அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே அங்கு ஒரு மருத்துவக் கல்லூரியை அமைத்துக் கொடுத்தால் நலமாக இருக்கும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அது மட்டுமல்ல, அங்கு அண்ணாமலை சர்வகலாசாலை ஒன்று மட்டும்தான் இருக்கிறது. அங்கு மற்ற இடங்களிலிருந்து வரக்கூடிய பிள்ளைகள் சேர்ந்து விடுகிறார்கள். அங்குள்ள பிள்ளைகளுக்கு இடம் கிடைக்கவில்லை. அதனால் அங்கு இன்னொரு கல்லூரியை அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

(பியூன் ஒருவர் குறுக்கே சென்றார்.)

**கனம் சபாநாயகர் :** 'ஆர்டர், ஆர்டர்'. பியூனாக இருந்தாலும், பேசுபவருக்கும், சபாநாயகருக்கும் குறுக்கே செல்லக் கூடாது, கனம் அங்கத்தினர்கள்கூட அப்படி குறுக்கே செல்லக்கூடாது.

**திரு. ஏ. ராமச்சந்திர ராயர் :** ஆகவே அண்ணாமலை சர்வகலாசாலை ஒன்றுதான் இருக்கிறது. அதுவும் சிதம்பரத்தில் இருக்கிறது. ஆகவே கடலூரில் ஒரு கல்லூரியை அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதை அரசியலாரே அமைக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். வரிப் பளு அதிகமாக இருக்கிறது என்றாலும், சினிமாக் காட்சிகளுக்கு மக்கள் வந்து குவிவதும் அதிகமாக இருக்கிறது. இதைக் குறைப்பதற்கு சினிமாக்களுக்கு வரியை அதிகமாகப் போடலாம். குதிரைப் பந்தயங்களுக்கும் வரி அதிகமாகப் போடலாம். குதிரைப் பந்தயங்கள் சென்னையிலும், நீலகிரியிலும் நடக்கின்றன. சினிமாக்களுக்கும், குதிரைப் பந்தயங்களுக்கும் வரி அதிகப்படுத்தி விட்டால், கிட்டத்தட்ட பத்து லட்ச ரூபாய் கூடுதலாக அரசாங்கத்திற்கு வருமானம் வரக்கூடும். இப்படி மற்ற துறைகளிலிருந்து வருமானத்தை அதிகமாகப் பெற்று, விவசாயிகளைப் பாதிக்கக்கூடிய வகையில் ஒரு கோடி ரூபாய்க்கு வரி போடுவதை நிறுத்திக்கொள்ளலாம் என்று தெரிவித்துக்கொண்டு என்னுடைய சிற்றுரையை முடித்துக்கொள்கின்றேன்.

**திரு. எம். வி. கரிவேங்கடம் :** கனம் சபாநாயகர் அவர்களே, 1962-63-ஆம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையை மதிப்பிற்குரிய கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்தச் சபை முன் சமர்ப்பித்திருக்கிறார்கள். ஒருசில புது வரிகள் போடுவதன் மூலமாகவும், ஏற்கனவே உள்ள சில வரிகளை அதிகரிப்பதன் மூலமாகவும் வருவாய் தேடக்கூடிய வகையில் இந்த நிதி நிலை அறிக்கை இருக்கின்றது. இதனால், உண்மையிலேயே ஏழை, எளியவர்கள், பாமரர்கள், நடுத்தர வர்க்கத்தினர்கள் பாதிக்கப்படுவார்கள். இந்த அரசினர் சோஷலிச சமுதாயத்தை நோக்கிச் செல்கின்ற அரசு என்று தங்களைச் சொல்லிக்கொள்கின்ற காரணத்தால், ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக புது வரிகளைப் போட்டாலும், அப்படிப் போடப்படுகின்ற வரிகள் ஏழை எளியவர்களைப் பாதிக்கக்கூடிய வகையில் இருக்காது, பணக்காரர்கள்,

[திரு. எம். வி. கரிவேங்கடம்] [4th July 1962

ஆலே அரசர்கள், செல்வந்தர்கள், இவர்களைப் போன்றவர்கள் கொடுக்கக்கூடிய வரியாகத்தான் இருக்கும் என்று எதிர்பார்த்த மக்களுக்கு இந்த நிதி நிலை அறிக்கை நிச்சயமாக ஒரு பெருத்த ஏமாற்றமாக இருக்கிறது.

இதில் ஏழு கோடியே 15 லட்சம் ரூபாய் அதிக வருமானம் வருகிற அளவுக்கு வரிகள் போடப்பட்டிருக்கின்றன என்று சொல்லப்பட்டிருந்தாலும், எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் மாத்திர மல்லாமல், ஆளும் கட்சியில் உள்ள அங்கத்தினர்களில் பலர், ஏழை எளியவர்களுடைய துன்பங்களை அறிந்தவர்கள், 'ஒருசில வரிகளைத் தவிர்த்து மற்ற வதிகள் அத்தனையும் நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ ஏழை எளியவர்களைப் பாதிக்கத்தான் செய்யும்' என்ற முறையில் நேற்றும், நேற்றைக்கு முந்திய தினமும் நடந்த விவாதத்திலே தெளிவாக எடுத்துச் சொல்லி யிருக்கிறார்கள்.

விவசாயிகளைப் பொறுத்த வரையில், நிலவரி உயர்வு, நஞ்சைத் தீர்வை உயர்வு, தண்ணீர்த் தீர்வை உயர்வு, புஞ்சைத் தீர்வை உயர்வு என்று இப்படியெல்லாம் விதிக்கப் படுகிறது. முப்பது ஆண்டுக்காலமாக யாதொரு மாற்றமும் ஏற்படவில்லை என்று நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருந்தும் கூட, 'சர்சார்ஜ்' என்ற முறையில் ஊராட்சி மன்றங்கள், ஒரு ரூபாயாக இருந்த நில வரியை 1¼, 1½, 1¾, 2 ரூபாய் அளவுக்கும் உயர்த்தி இருக்கின்றன. அதே சந்தர்ப்பத்தில், 'எஜுகேஷன் செஸ்' போன்ற முறையிலேகூட, நில வரி உயர்த்தப்பட்டிருக் கிறது. நில வரியானது இந்த அரசால் உயர்த்தப்படாவிட்டாலுங் கூட, ஸ்தல ஸ்தாபனங்களாலும், மற்ற பல ஸ்தாபனங்களாலும் உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆக, இதுவரை நில வரி உயர்த்தப் படவில்லை என்று அரசாங்கத் தரப்பில் சொல்லப்படுகிற வாதம் அவ்வளவு சரியான வாதம் அல்ல என்று நான் குறிப்பிட விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக, நகரங்களிலுள்ள நிலங்கள் மீது வரி போடப் படுகிறது. இந்த வரி விதிப்பு உடனடியாக அமுலுக்கு வராது என்றும், நிலங்களையெல்லாம் தர வாரியாகப் பிரித்து, சர்வே செய்து, எந்த எந்த தரமுள்ள நிலத்திற்கு எந்த எந்த விகிதம் வரி விதிப்பது என்பதுபற்றி பிறகு முடிவு செய்யப்படும் என்றும் கூறப்படுகிறது. எஸ்டேட் ஒழிப்புச் சட்டத்தின்படி, பல கிராமங் களில் செட்டில்மெண்ட் சர்வே செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் சர்வே செய்யப்பட்ட காரணத் தால், அப்பொழுது சர்வே செய்யப்பட்டபோது இருந்த நிலத்தின் தரத்தையும், மண் வளத்தையும், அது பெற்ற நீரின் தன்மையை யும் கணக்கில் கொண்டுதான் அப்பொழுது நிலத் தீர்வை நிர்ணயிக்கப்பட்டது. முப்பது ஆண்டுகளுக்கு பின்னால் அந்த நிலங்களின் தரம், அந்த நிலங்கள் பெறுகின்ற தண்ணீரின் தன்மை, ஆகிய அத்தனையும் அப்படியே இருக்கும் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கும்? முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் நல்ல மண் வளமுடைய நிலமாக

இருந்தது, இன்று மண் வளமற்ற நிலமாக மாறி இருக்கலாம். முப்பது ஆண்டுகளுக்கு முன்னல் நல்ல பாசன வசதி பெற்றிருந்த நிலம், இன்று பருவ மழை தவறியதின் காரணமாகவோ, ஏரி மராமத்து செய்யப்படாததன் காரணமாகவோ, அது பெறுகின்ற தண்ணீர் குறைந்திருக்கலாம். ஆகவே, எப்படி நகரத்திலுள்ள நிலங்களுக்கு வரி விதிப்பதற்கு முன்னல், அது பற்றி சர்வே செய்யவேண்டும், தரவாரியாகப் பிரிக்கவேண்டும் என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிடுகின்ருரோ, அதே ரீதியில் அந்த நிலங்களினுடைய தரத்தைப் பிரிக்க, அந்த நிலங்கள் பெறுகின்ற நீரைக் கணக்கிட, அதற்கேற்றபடி வரியை நிர்ணயிக்க நிலக் கமிஷன் ஒன்றை ஏற்படுத்துமாறு நான் அமைச்சர் அவர்களை மிகவும் மன்ருடிக் கேட்டுக் கொள்கின்றேன். அப்படிக் கேட்டுக் கொள்கின்ற காரணத்தால், ஏதோ இந்த வரியை நாங்கள் அப்படியே ஆதரிக்கின்ருேம் என்று அர்த்தம் அல்ல. ஏழை எளிய விவசாயிகளைப் பாதிக்காத வகையில் ஒரு குறிப்பிட்ட அளவு நிலங்கள் வைத்திருப்பவர்களைத்தான் நில உச்ச வரம்பு சட்டம் கட்டுப்படுத்தும், அதற்குமேல் நிலம் வைத்திருப்பவர்களைக் கட்டுப்படுத்தாது என்று எப்படி ஒரு வரையறை செய்யப் பட்டதோ, அதே போல், இதற்கும் ஒரு வரையறை நிர்ணயிக்கப் படவேண்டும். 20, 25 ஏக்கர் நிலம் உடையவர்களுக்கு இந்த வரி கிடையாது, அதற்கு மேற்பட்டு நிலம் வைத்திருப்பவர்களுக்குத் தான் இந்த வரி உண்டு என்ற முறையில் சட்டத்திலிருந்து இவர் களுக்கு விதி விலக்கு அளிக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

அடுத்தபடியாக, மின்சாரத்தின் மீது புதிதாக வரி விதிக்கப் படுகிறது. வாகன வரியையும் உயர்த்தியிருக்கிருர்கள். இப்படிப் பல வகைகளில் வரி உயர்வு ஏற்பட்டிருக்கிறது. அமைச்சருடைய உரையில் ஏழு கோடியே பதினைந்து லட்சம் ரூபாய் அளவுக்குப் புது வரிகள் போடப்படுவதாகக் கண்டிருந்தாலுங்கூட, மோட்டார் வாகன வரியை மட்டும் எடுத்துக்கொண்டால், 1961-62-ஆம் ஆண்டில் 561 லட்சம் ரூபாய் அதன் மூலமாக அரசாங்கத்திற்கு வருமானம் வந்திருக்கிறது. இப்பொழுது 132 மைல்கள் வரை தினசரி ஓடும் பஸ்களுக்கு இப்பொழுதுள்ள வரியைக்காட்டிலும் பிரயாணி இடத்திற்குக் காலாண்டிற்கு ஐந்து ரூபாயும், 132 மைலிலிருந்து 169 மைல் வரை உள்ள பஸ்களுக்கு பிரயாணி இடத்திற்குக் காலாண்டிற்கு பத்து ரூபாயும், 170 மைலுக்கு மேல் உள்ள பஸ்களுக்கு பிரயாணி இடத்திற்கு காலாண்டிற்குப் பதினைந்து ரூபாயும் அதிகம் வரி விதிக்கப்போவதாகக் கூறுகின் ருர்கள். இதனல், ஏற்கனவே உள்ள வரியைவிட 45 சத விகிதம் அதிகமான அளவுக்கு வரி விதிக்கப்படுகிறது. சரக்குகளை எடுத்துச் செல்கின்ற வாகனங்களுக்கு வரி உயர்த்துகின்ற வகையில் சராசரி 50 சத விகிதம் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, 561 லட்சம் ரூபாய் சென்ற ஆண்டு வருமானம் அவைகளி லிருந்து வந்திருக்கிறது. சராசரியாகப் பார்த்தால், ஏறக்குறைய மோட்டார் வரிகள் மீது 50 சத விகிதம் அதிகமாக வரி விதிக்கப் பட்டிருக்கிறது. அப்படி விதிக்கப்படுகின்ற காரணத்தால், 50

[திரு. எம். வி. கரிவேங்கடம்] [4th July 1962

சத விகிதம் என்பதைக்கூட 10 சத விகிதம் குறைத்து, நாற்பது சத விகிதம் அதிகமாக பஸ்கள் மீது வரி விதிப்பதாக வைத்துக் கொண்டாலுங்கூட, ஏறக்குறைய அரசாங்கத்திற்கு 260 லட்சம் ரூபாய் கூடுதலாகக் கிடைக்க வேண்டும். ஆனால், கனம் அமைச்சர் அவர்கள் அந்த இனத்தில் காட்டியிருப்பது 200 லட்சம். உண்மையிலேயே ஏழு கோடியே பதினைந்து லட்சம் ரூபாய் அளவுக்கு அதிகமாக வரிகள் விதிக்கப்பட்டிருக்கின்றன என்று சொல்லப் பட்டிருந்தாலுங்கூட, சற்றேறக்குறைய பத்து கோடி ரூபாய் வரையிலும் மக்கள் மீது இந்த அரசாங்கம் புது வரிகளைப் போட்டிருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும்.

ஆடிட் ரிப்போர்ட் சமீபத்தில் வெளிவந்திருக்கிறது. அதில் கண்டுள்ளவற்றை நாம் கவனிக்கவேண்டும். ஆளும் கட்சியிலே உள்ள அங்கத்தினர்களில் பலர், 'நாம் திட்டங்களை வெட்டிக் கொள்ள முடியாது; நாடு முன்னேறவேண்டுமென்றால் திட்டங்கள் போட்டுத்தான் ஆகவேண்டும்; ஏழை எளியவர்களைப் பாதித்தாலும், பணக்காரர்களைப் பாதித்தாலும், யாரைப் பாதித்தாலும், வரிகள் போட்டுத்தான் ஆகவேண்டும்; ஏனென்றால் திட்டங்கள் நிறைவேற்றப்படுவதால் ஜனங்களுடைய வாழ்க்கை வளமாகிறது, வாழ்க்கைத் தரம் உயருகிறது; ஆகவே நாங்கள் திட்டங்களைப் போடுகிறோம்', என்று சொல்லி ஆண்டு தவறினாலும் வரி போடுவது தவறுவது இல்லை என்ற முறையில் மக்களிடமிருந்து ஏராளமாக வரி வசூல் செய்கிறார்கள். அப்படி வசூல் செய்கிற வரிகளையாவது நல்லமுறையில் சிக்கனமாக செலவு செய்கிறார்களா என்று பார்க்கிற நேரத்தில் ஆடிட் ரிப்போர்ட் கவனத்திற்கு வருகிறது. 1956-57, 57-58, 58-59, 59-60, 60-61 ஆகிய ஐந்து ஆண்டுகளில் ஆடிட்டர்களால் தணிக்கை செய்யப்பட்டு அளிக்கப்பட்டுள்ள ரிப்போர்ட்டில் சரியான முறையில் செலவிடப்படாத இனங்கள் பலவற்றைக் கொடுத்திருக்கிறார்கள். இந்த ஐந்து ஆண்டுகளில் மட்டும் முப்பத்தொன்பதாயிரத்து சொச்சம் இனங்கள் மீது கணக்குகள் இருக்கின்றன. அவைகளினுடைய தொகை இருபத்துமூன்று கோடியே தொண்ணூற்றேழு லட்சம் ரூபாய். ஆகவே ஆடிட் ரிப்போர்ட்டில் இந்த இனங்கள் மீது உண்மையிலேயே ஆட்சேபணைக் குறிப்புகள் இருக்கின்றன. ஒரு சில இனங்கள் மீது சாங்ஷன் இல்லாமல் செலவு செய்திருக்கிறார்கள். எஸ்டிமேட் மேல் அதிகமாக செலவு செய்திருக்கிறார்கள். பென்ஷன் வகைகளில் 1960-61-லே 323 வழக்குகளுக்குத் தர வேண்டுமென்று சொல்லியிருந்தும் இன்னும் இதுவரையில் அதுபற்றிய விவரங்கள் கவனிக்கப்படவில்லை. இப்படி வசூலாகிற தொகைகள் சரியான முறையில் செலவு செய்யப்படாத இனங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இதையும் கவனிக்க வேண்டும்.

அடுத்தாற்போல சேலம் மாவட்டத்தை இரண்டாகப் பிரிப்பதை நான் வரவேற்கிறேன். அப்படி வரவேற்கிற நேரத்தில் வட சேலத்திற்குத் தலைநகர் கிருஷ்ணகிரியா தர்மபுரியா என்ற பிரச்னை எழுப்பப்பட்டிருக்கிறது. என்னைப்

4th July 1962] [திரு. எம். வி. கரிவேங்கடம்]

பொறுத்த வரையில் தர்மபுரியே தலைநகராக இருக்கவேண்டு மென்று இந்த மன்றத்தில் வலியுறுத்த விரும்புகிறேன். தர்ம புரிக்குத் தலைநகராக இருக்கவேண்டிய தகுதி இருக்கிறது. அது மாவட்டத்திற்கு நடுவில் இருக்கிறது. முப்பதாயிரத்துக்கு மேற்கொண்ட ஜனத் தொகை கொண்ட இடம். அதுமட்டுமல்ல. சேலம்-பங்களூர் ரயில் பாதையில் இருக்கின்ற காரணத்தினால் போக்குவரத்து வசதி தலைநகருக்கு இருக்கிறது. இத்தகைய தகுதிகள் எல்லாம் கிருஷ்ணகிரிக்குக் கிடையாது.

**திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம்:** கனம் சபாநாயகர் அவர் களே, மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக் கும் இந்த நிதிநிலை அறிக்கையை வரவேற்று ஒரு சில வார்த்தை கள் சொல்ல விரும்புகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற இந்த அறிக்கை மிகவும் போற்றத்தக்க வகையில் அமைந்திருக்கிறது என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். அதுவும் குறிப்பாக தைரியமாக இந்த ஒரு பட்ஜெட்டை நமக்கு நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கிறார் என்பதைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். நம்முடைய சென்னை மாகாணத்தில் 1956-57-இல் 56 கோடி ரூபாயாக இருந்த நம்முடைய வருமானம் 1962-63-இல் 106½ கோடி ரூபாயாக உயர்வதற்கு ஏற்ற வருவாய் இனங்களையும் இந்த வரவுசெலவுத் திட்டத்தில் நிதி அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கிறார்கள். இப்படி ஐந்தாண்டு காலத்திற் குள்ளாக 50 கோடிக்கு வருமானத்தை அதிகப்படுத்திக் காண்பித்து நல்ல பல திட்டங்களை நிறைவேற்றிக்கொண்டு வரு வதற்கு இந்த அமைச்சர் அவையின் திறனையும், ஆற்றலையும் நாம் போற்றாமல் இருக்க முடியாது. வரி போட்டுக் கொண்டிருக் கிறோம், திட்டங்கள் பலவற்றை நிறைவேற்றுவதற்கு. ஏழை களுக்கு வரி போடுகிறார்களே, ஏழைகளுக்கு வரி போட வேண்டாம் என்று எதிர்தரப்பில் இருந்து மக்களைத் தூண்டி விட்டுக்கொண்டிருக்கும் சில அரசியல் கட்சிகள் இருக்கும் இந்த நேரத்தில்கூட கனம் அமைச்சர் அவர்கள் மிகவும் தைரியமாக இந்தப் புது வரித்திட்டங்களைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இவை மிகவும் நியாயமான வரி. வரி போட வேண்டியவர்களுக்கு, தகுதியுள்ளவர்களுக்கு வரி போட்டிருக்கிறார்கள். ஆகையால் இந்த வரிகள் எல்லாம் ஏழைகளைத்தான் பாதிக்கின்றன என்று கூறுவதில் நியாயமே இல்லை. கொஞ்சம் ஏழை எளியவர்களும் வரி கட்டத்தான் வேண்டும் என்று சொன்னால் அதில் தவறு ஒன்றும் இல்லை. இன்று ஏழை பணக்காரன் என்ற பாருபாடின்றி, அடித்தளத்தில் இருக்கும் ஏழை எளிய அத்தனை பேர்களும் சமூக பொருளாதார வாழ்வில் முன்னேற்றம் அடையவேண்டும் என்று இந்தச் சர்க்கார் பல திட்டங்களைப் போட்டுக்கொண்டிருக்கும் போது, திட்டத்தின் மூலம் பொது வருமானத்தில் இருந்து பல திட்டங்களைச் செய்து கொடுத்துக் கொண்டிருக்கும்போது அவர் கள் பெறுகின்ற பயன்களுக்கு ஏற்ப அவர்களுடைய சொந்தத் தொகையையும் இந்த நாட்டின் முன்னேற்றத்திற்குக் கொடுக்கக் கடமைப்பட்டுத்தான் இருக்கிறார்கள். அதற்காக மக்கள் அஞ்சி

[திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம்] [4th July 1962

விடவில்லை. நாங்கள் ஆட்சிக்கு வந்தால் வரி போடமாட்டோம் என்று அமைச்சர்கள் சொன்னதும் இல்லை. அரிசி விலையைக் குறைப்போம், அகவிலையைக் கட்டுப்படுத்துவோம், ரூபாய்க்கு ஐந்து படி அரிசி எவ்வித வரியும் விதிக்காமல் போடுவோம் என்று சொன்னவர்கள் இல்லை. அப்படிச் சொன்னவர்கள்கூட மக்களிடத்தில் ஏமாற்றம் அடைந்துபோகும் நிலைமைக்குத்தான் தேர்தல் முடிவு கொண்டுபோய்விட்டிருக்கிறது. மக்கள் நன்றாகத் தெரிந்துகொண்டுவிட்டார்கள், "வெறுங்கை முழம் போடாது" என்று. சரக்கு இருக்க வேண்டும், ஜவுளி இருக்கவேண்டும், முழம் போடுவதற்கு ; ரூபாய்க்கு 5 படி அரிசி போடுவோம் என்று வாயால் அளந்துகொண்டிருக்கலாம். அரிசி விலையைக் குறையுங்கள் என்று அட்டையைப் பிடித்துக்கொண்டு நிற்பதனால் அரிசி விலை குறைந்துவிடாது என்பதை மக்கள் உணர்ந்து கொண்டு எதிர்க்கட்சிக்காரர்களைச் சட்டை செய்யாமல் இருந்த காரணத்தினால்தான் இந்த அரசாங்கம் தொடர்ந்து மக்களுக்குப் பணியாற்றக்கூடிய வாய்ப்பை பெற்றிருக்கிறது. இன்றைக்கு பஸ்களுக்கு வரி போட்டிருக்கிறார்கள்; அது நியாயமான வரி. லாரிகளுக்கு வரி போட்டிருக்கிறார்கள் ; அது நியாயமான வரி. வரி போட்டதனால் எந்தப் பணக்காரர்களும் தொழிலைவிட்டுப் போகப் போவதில்லை. இன்சால்வெண்டும் கொடுத்துவிடப்போவதில்லை. நாட்டின் முன்னேற்றத்திற்காக எல்லாப் பகுதி மக்களும் வரி கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள். இந்த நிலையை, மனோ நிலையை உணர்ந்து நமது மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்கள் மிக்க ஆற்றலுடன் இந்த நிதி நிலை அறிக்கை தயாரித்திருக்கிறார்கள் என்பதை நான் இந்தச் சமயத்தில் கூறிக் கொள்ள விரும்புகிறேன். நமது நிதி அமைச்சர் அவர்கள் மிகவும் திறமைசாலி. அநுபவசாலி.

விவசாயத்தை எடுத்துக்கொண்டால் நம்முடைய உற்பத்தி 38 லட்சம் டன்னாக இருந்ததை முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே 48 லட்சம் டன்னாக உயர்த்தியதோடு இரண்டாம் திட்டத்திலே இன்னும் 9 லட்சம் டன் அதிகமாக உற்பத்தி செய்ய திட்டமிட்டார்கள். இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நம்முடைய லட்சிய அளவாக 70 லட்சம் டன் உற்பத்தி செய்வதற்கு வகை செய்திருக்கிறார்கள். தொழில் துறையிலும் வேகமாக முன்னேற்றம் அடைந்து வருகிறோம். இதற்காக கனம் அமைச்சர் அவர்களைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். முக்கியமாக பெண்கள் சமூகத்தின் சார்பாக அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் கல்வி அமைச்சராகவும் இருக்கிற காரணத்தினால் கல்வித் துறையில் அதிக கவனம் செலுத்துகிறார்கள். சென்ற ஆண்டில் 1,461 உயர்தர ஆரம்பப் பள்ளிகளைத் துவக்கியிருக்கிறார்கள். அதோடு 272 ஹைஸ்கூல்களை ஆரம்பித்திருக்கிறார்கள். அதுவும் பெண்களுக்கு மட்டும் 39 ஹைஸ்கூல்கள் துவக்கப்பட்டிருக்கின்றன என்றால் நான் கனம் அமைச்சர் அவர்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இவை போதும் என்று சொல்லவில்லை. ஆனால் கனம் அமைச்சர் அவர்களே இதைப்பற்றிச் சொல்கிறபோது, "நான் கல்வி இலாகா

4th July 1962] [திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம்]

பொறுப்பை ஏற்ற பிறகு பெண்களிடையே இன்னும் கல்வியைப் பரவலாகச் செய்வதற்கு விசேஷ முயற்சிகள் தேவையென்று எனக்குத் தோன்றியது. அதுவும் முக்கியமாக பெண்களுக்கென தனி உயர்நிலைப் பள்ளிகள் இன்னும் அதிகம் வேண்டும் என்று பட்டது" என்று பொறுப்பை உணர்ந்து, கடமையை உணர்ந்து இவ்விஷயத்தில் கவனம் செலுத்தியிருப்பதற்காகப் பாராட்டு கிறேன். ஜனத்தொகையைப் பார்த்தாலும் ஆண்களைக் காட்டிலும் பெண்கள் அதிகம். உரிமையில் சமமாக இருக்கலாம். அப்படிப் பார்க்கிறபோது 272 உயர்நிலைப் பள்ளிகளில் பெண்களுக்கென்று சரி பாதியாவது அல்லது 100 பள்ளிகளாவது தனியாக இருக்க வேண்டியது அவசியம். ஏற்படுத்துவார்கள் என்று நினைக்கிறேன். இன்றைக்குள்ள தேவைக்கு ஏற்பத்தான் 39 பள்ளிகளைத் துவக்கியிருக்கிறார்கள் என்று எண்ணுவதால் தேவை அதிகரிக்க அதிகரிக்க இந்த எண்ணிக்கையையும் அதிகப்படுத்தவேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதோடு பெண்கள் முன்னேறவேண்டும் என்று தைரியத்தோடு அவர்களுடைய ஆற்றலை, சக்தியை உணர்ந்து பணியாற்ற அமைச்சர் அவர்கள் முன்வந்திருப்பதற்குப் பாராட்டுகிறேன். அரசியலிலும் பெண்களைப் புறக்கணிக்க முடியாது. சென்ற தேர்தலிலே தம்முடைய கட்சி பெரிதும் தோல்வி அடைந்ததற்குக் காரணமே பெண்கள் நேருவின் அழகில் மயங்கிப் போனதினாலேயே எங்கள் கட்சி தோற்றுவிட்டது என்று ஒருவர் சொல்லியிருக்கிறார். இவர் ஒரு பெரிய மேதை. இன்னொருவர் தாம் தோல்வியுற்றதற்குக் காரணம் பெண்களுக்கு இவ்வளவு அதிகமாக சக்தியும், வோட்டும் இருக்கும் என்று தெரியாது போனதுதான் என்று பேசியிருக்கிறார்.

பெண்களின் நிலையை இந்த அரசாங்கம் நன்கு உணர்ந்து சென்னையில் பெண்களுக்கென்றே ஒரு பாலிடெக்னிக்கை ஆரம்பிப்பதற்கு அங்கீகாரம் அளித்திருப்பதற்காகவும் பாராட்டுகிறேன்.

**திரு. கே. மூக்கையா தேவர் :** ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர் சார். கனம் அம்மையார் அவர்கள் பட்ஜெட்டைப் பற்றிப் பேசுகிறார்களா ? அல்லது பெண்கள் பெருமையைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறார்களா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** பெண்கள் பெருமை இந்த பட்ஜெட்டில் அடங்கியிருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : As there is reference to women's welfare in the budget proposals, the observations of the hon. Member Srimathi Rajathi Kunchithapatham are perfectly in order.

SRI M. V. KARIVENGADAM : On a point of order, Sir. . .

MR. SPEAKER : There can be no point of order now. The hon. Member may continue her speech.

**திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம் :** பெண்களைப் பற்றி இந்த பட்ஜெட்டிலே வரும்போது அதைப்பற்றி நானும் சொல்லலாம். திரு. மாதா கவுடர் அவர்கள் முன்பு ஒரு முறை பேசும்போது

[திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம்] [4th July 1962

"பெண்களுக்கு பாலிடெக்னிக் என்றால் அங்கே அவர்களுக்கு சமையல் வேலை சொல்லித் தரப்போகிறார்களா?" என்று கேட்டார். பெண்களுக்குத்தான் சமையல் வேலை சொந்தம் என்று அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது. ஆனால் ஆண்கள் அந்த உரிமையை, அந்தப் பெருமையைக் கூட பெண்களுக்குக் கொடுத்தது கிடையாது. சமையலில் வல்ல வர்கள் பெண்கள் என்று அவர்கள் பெருமை சொன்னதில்லை. நளபாகம், பீமபாகம் என்று சொல்வார்களே தவிர "தமயந்தி பாகம், சீதை பாகம்" என்று சொன்னதில்லை. திரு. மாதா கவுடர் அவர்கள் சொன்னதினால் நான் ஒன்றைக் கூறிக்கொள்ள விரும்பு கிறேன். ஆண்களுடைய சமையல் பெருமை குன்றாதிருக்க, ஆண் களுடைய பாலிடெக்னிக் பள்ளிகளில்கூட ஆண்களுக்கு சமையல் வேலையை ஒரு ஸ்பெஷல் சப்ஜெக்டாக சொல்லிக் கொடுக்கலாம் என்று தெரிவித்துக் கொள்கிறேன். (பலத்த சிரிப்பு.)

9-30 a.m.

அடுத்தபடியாக, கல்விச் சலுகை பெறக் கூடியவர்களுடைய வருட வருமானத்தை ரூ. 1,200-ல் இருந்து ரூ. 1,500-ஆகக் கூட்டி யிருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது. சமுதாயத்தின் அடித் தளத்தில் உள்ள ஏழை எளிய குழந்தைகள், என்.ஜி.ஓ-க் களின் குழந்தைகள் மருத்துவக் கல்லூரி, எஞ்சினியரிங் கல்லூரி களில் சேர்ந்து படிப்பதற்காக நீண்டகால வட்டி இல்லாக் கடன் கொடுக்கும் திட்டமானது மக்களால் மிகவும் வரவேற்கத்தக்க திட்டமாகும். படிக்கக்கூடிய மாணவர் களின் சொந்தப் பொறுப்பில் கடன் கொடுக்கும் திட்டமானது அமைச்சரவர்களுடைய மிகவும் தைரியமான திட்டமாகும். அமெரிக்கா போன்ற தேசங்களில் தொழில் சம்பந்தப்பட்ட நல்ல ஒரு 'ஐடியா' கொடுத்தால் அதற்குப் பணம் கொடுக்கிறார்கள். நம் நாட்டில் நாம் குழந்தைகளின் மேல் படிப்புக்கு, தொழில் படிப்புக்கு வசதி செய்து கொடுக்கிறோம். குறிப்பாக, கிராமங் களில் பணியாற்றக்கூடிய வைத்தியர்களை உருவாக்க ஒரு சந்தர்ப் பத்தையும் சூழ்நிலையையும் இது உண்டாக்கிக் கொடுக்கும் என்பதை கூறிக் கொள்கிறேன்.

இந்த நிதிநிலை அறிக்கை இவ்வளவு அழகாக அமைந்த போதும்கூட, அதற்கும் ஒரு திருஷ்டிப்பரிகாரம் இருக்க வேண்டு மென்ற நிலையில் அமைச்சர் அவர்கள் பெனல்டி வாட்டர் டாக்ஸ் விதித்திருக்கிறார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் ½ ஏக்கர், ¼ ஏக்கர் இருக்கக்கூடியவர்கள் வெள்ளைக்காரன் காலத்திலேயே 'க்ரோ மோர் புட்' திட்டத்தின்கீழ் நிலங்களைத் திருத்தி மிகுந்த கஷ்டத்திற்குப் பிறகு இன்றையதினம் விளைவிக்கக்கூடிய நிலைமை யில் இருக்கிறது. முன்பு பெனல்டி டாக்ஸ் என்பது 20-ஆகப் போடப்பட்டிருந்தது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு கனம் முதலமைச்சர், முன்பு இருந்த நிதியமைச்சர், தற்போதைய நிதி யமைச்சர் அவ்வளவு பேரும்கூடி மாவட்ட கலக்டர்களை அழைத்து இந்த பெனல்டி டாக்ஸ் போடுவது பற்றி ஆலோசனை நடத்தினார்கள். அந்தக் கூட்டத்தில் இதை இரட்டிப்பு ரேட்டாக

4th July 1962] [திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம்]

ஆக்கினார்கள். ஏக்கருக்கு 20 ரூபாய் என்றால் 40 ரூபாயாக ஆக்கினார்கள். இப்போது அதை 80 ரூபாயாக ஆக்கினால் அவர்களுடைய நிலைமை மிகவும் அவலமடைந்துவிடும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, இதை ரத்து செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

திருநெல்வேலியில் கடானாறு திட்டம் கூடிய சீக்கிரம் ஆரம்பமாகும் என்று முன்பு சொன்னார்கள். இப்போது, கடானாறு திட்டத்திற்கு 89 லட்ச ரூபாயும், ராமநதித் திட்டத்திற்கு 10 லட்சம் ரூபாயும் மூன்றாவது திட்டத்திலே ஒதுக்க அனுமதி கோரியிருப்பதாகக் கூறியிருக்கிறார்கள். சீக்கிரம் இந்த இரண்டு திட்டங்களையும் நிறைவேற்றிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நெல்லைக்கு இதுவரையில் ஒரு விதமான பெரிய திட்டமும் கிடையாது என்பதை வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கோவையை எடுத்துக் கொண்டால் கோடிக் கணக்கான ரூபாய் செலவில் பரம்பிக்குளத் திட்டம் இருக்கிறது. சேலத்தில் இரும்புத் தொழிற்சாலை ஏற்பட இருக்கிறது. ஒவ்வொரு மாவட்டத்திலும் பெரும் பெரும் திட்டங்களை நிறைவேற்றி வரும்போது, நெல்லையில் மட்டும் 1 கோடி, 1-½ கோடி ரூபாய்த் திட்டங்கள்தான் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. மணிமுத்தாறு திட்டம் மக்கள் உதவித் தொகையுடன் நிறைவேற்றப்பட்ட திட்டம். இது தவிர வேறு என்ன திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறீர்கள் என்று கேட்க விரும்புகிறேன். நெல்லையைப் புறக்கணிக்க வேண்டாம். அரசாங்கத்தின் மிகவும் நல்ல பிள்ளைகளான, ஒழுங்குள்ள பிள்ளைகளான, விஸ்வாசம் உள்ள பிள்ளைகளான எங்களுக்கு ஒரு மருத்துவக் கல்லூரி அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதற்கு 6, 7 கோடி ரூபாய் செலவாகும் என்று சொன்னார்கள். இந்த மருத்துவக் கல்லூரியை இல்லையென்று சொல்லாமல் சீக்கிரத்தில் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்த நிதி நிலை அறிக்கை மிகவும் போற்றத்தக்க முறையில் அமைந்திருக்கிறது என்று பாராட்டி என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **திரு. தோ. மு. நல்லசாமி:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த 1962-63-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து என்னுடைய கருத்துக்களைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்தத் திட்டம் ஆதரிக்கத்தகுந்தது, வரவேற்கத் தக்கது என்று சொன்னேன். அதற்குக் காரணம், நம்முடைய சபையிலே ஐந்தாண்டுத் திட்டங்களைப் போட்டு இலட்சிய அளவை நிறைவேற்றுவதிலே இரண்டு விதமான அபிப்பிராயங்கள் இருக்க முடியாது. அந்தப் பக்கத்தில் உள்ளவர்களாக இருந்தாலும் சரி, இந்தப் பக்கத்தில் உள்ளவர்களாக இருந்தாலும் சரி, திட்டம் நல்லபடியாக நிறைவேற்றப்பட வேண்டுமென்றுதான் ஆசைப்படுகிறார்கள். அதன்படி பார்க்கும்போது சென்ற வரவு செலவுத் திட்டத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட செலவுகளுக்காக 50 கோடி 44 லட்சம் செலவு செய்யப்பட்டது. அதேபோன்று இந்த ஆண்டு 57 கோடி 27 லட்சம் செலவு செய்யத் திட்டமிடப்பட்டுள்ளது. இந்தக் கணக்கின்படி இந்த மூன்றாவது ஐந்தாண்டுத்

[திரு. தோ. மு. நல்லசாமி] [4th July 1962

திட்ட காலத்தில் செலவு செய்யக்கூடிய 29 கோடி ரூபாயில் 37 சத விகிதத்தை இந்த இரண்டு ஆண்டுகளிலேயே நாம் செலவு செய்து திட்டங்களை நிறைவேற்றி விடுகிறோம். நாம் போட்ட அளவுக்கு மேல் துரிதமாக இந்தத் திட்டங்கள் நிறைவேறி வருவது வரவேற்கத்தக்கது.

இந்த வரவு செலவுத் திட்டத்தை சபைக்குச் சமர்ப்பிக்கும் போது நமது நிதியமைச்சர் அவர்கள் மிகவும் பொறுப்புணர்ச்சி யோடு கடந்த கால சாதனைகளைச் சொல்லி, நாம் அடையவேண்டிய இலட்சிய அளவைச் சொல்லி, அந்த இலட்சிய அளவை அடைய இன்னின்ன இனங்களில் இவ்வளவு இவ்வளவு செலவு செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம் என்று கூறி இருக்கிறார்கள். எதிர்க்கட்சி அன்பர் ஒருவர் 'புள்ளி விவரத்தை அள்ளிக் கொட்டி யிருக்கிறார்' என்று வேடிக்கையாகச் சொன்னார். புள்ளி விவரங் களைக் கொடுப்பதன் கருத்து எந்த அளவுக்கு அரசாங்கம் செய லாற்றி வருகிறது என்பதை இந்தச் சபைக்கு எடுத்துக் காட்டத் தானேயொழிய தவறுதலாகவோ, 'மிஸ்லீடிங்' செய்யவோ கொடுப் பதில்லை. செலவு இனங்களைப் பார்க்கும்போது ஒவ்வொரு துறைக் கும் தேவையான அளவு கவனம் செலுத்தப்பட்டிருப்பதைக் கனம் அங்கத்தினர்கள் நல்ல முறையில் புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

விவசாயம், பொதுமராமத்து, கல்வி, மருத்துவம், தொழில் ஆகிய ஐந்து இனங்களுக்கும் அதிகமான தொகை ஒதுக்கி யிருப்பது வரவேற்கத்தக்கது. நம் நாட்டின் பொருளாதாரத்தில் மிகுந்த அக்கறை கொண்டு இது அமைந்திருப்பது பாராட்டத் தக்க ஒரு அம்சமாகும். விவசாயத்தில் எந்த அளவுக்கு நாம் முன்னேறியிருக்கிறோம் என்பதைப் பற்றி எனக்கு முன்பு பேசிய திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம் அம்மையார் அவர்கள் மிகத் தெளிவாகச் சொன்னார்கள். உணவு தானிய உற்பத்தியானது முதல் திட்ட ஆரம்ப காலத்தில் 38 லட்சம் டன்னாக இருந்தது, திட்ட கால இறுதியில் 44 லட்சம் டன்னாக உயர்ந்தது. 6 லட்சம் டன் அதிக உற்பத்தி செய்திருக்கிறோம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத் காலத்தில் 44 லட்சம் டன்னாக இருந்தது 53 லட்சம் டன்னாக உயர்ந்திருக்கிறது. 9 லட்சம் டன் உணவு தானிய உற்பத்தி உயர்ந்திருக்கிறது. அதே போன்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் லட்சிய அளவு ஆண்டு ஒன்றுக்கு 17 லட்சம் டன் அதிக உற்பத்தி செய்யவேண்டுமென்று கூறியிருக்கிறார்கள். கடந்த காலத்தில் இரசாயன உரங்களை விநியோகிப்பதில் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டது. 'மென்யூரில் ரிசோர்ஸஸ்'-ஐ கிராமங்களில் பெருக்குவதற்கும் தக்க கவனம் செலுத்தப்பட்டது. 'இம்ப்ரூவ்டு சீட்ஸ்' கொடுப்பதற்கும் நல்லபடி நடவடிக்கை எடுக்கப்பட்டது. எல்லாவற்றிலும் நூற்றுக்கு நூறு வெற்றி என்று சொல்ல முடியாது. பொறுக்கு விதைக்காகத் தேர்ந் தெடுக்கப்பட்ட 'பார்ம்'-களில் சில குறைகள் இருக்கின்றன. இது வரை ஏற்பட்ட அனுபவத்தை வைத்து தவறுதல்களைத் திருத்தி நல்ல முறையில் பணியாற்ற வேண்டுமென்ற ஆசையும் தெளிவு

4th July 1962] [திரு. தோ. மு. நல்லசாமி]

படுத்தப்பட்டிருக்கிறது. கிராம சகாயக்கள் மூலம் பொறுக்கு விதைகளை அதிகரிப்பது என்பது நல்லதொரு அமைப்பு என்று நான் கூற விரும்புகிறேன். நம் நாட்டு விவசாயம் பழங்கால பழக்கவழக்கங்களை அடிப்படையாகக் கொண்டது. அதை மாற்ற வேண்டும். அப்படி மாற்றினால்தான் விவசாயத்தை அபிவிருத்தி செய்ய முடியும். அதற்காக ரிசர்ச் ஸ்டேஷன்களை அபிவிருத்தி செய்வது என்பது வரவேற்கத்தக்கது. ரிசர்ச் ஸ்டேஷன்ஸ் மூலம், எவ்வளவு பணம் செலவு செய்தாலும், எந்த பூமிக்கு எந்த உரம் கொடுப்பது என்று தெரிந்து செய்வதும் வரவேற்கத்தக்கது. அதில் தக்க கவனம் செலுத்தப்பட்டிருப்பதும் வரவேற்கத்தக்கதாகும். அடுத்தபடியாக, நீர்ப்பாசனம். பரம்பிக் குளம்-ஆளியாறு திட்டம் விரைவாக, வெற்றிகரமாக நிறை வேற்றப்பட்டு வருகிறது. அது வரும்போது 2½ லட்சம் ஏக்கரா விற்கு தண்ணீர் கொடுக்கவும், மின்சாரமும் உபரியாக கிடைக்க இருக்கிறது. அதனால் நமது தமிழ்நாடு செழிப்படையும் என்பதில் சந்தேகமில்லை. அதேசமயத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக் கொள்ள தீர்மானிக்கப்பட்ட, டிருப்ட் ப்ளானில், பல நடுத்தரத்திட்டங்கள் எடுத்துக் கொள்ளப்படும் என்று நினைத்தோம், ஆசைப்பட்டோம். இந்த ஆண்டு ஏழு திட்டங்களை எடுத்துக் கொள்ளவும் அதற்காக 4½ கோடி ஒதுக்கப்பட்டிருப்பதும் வரவேற்கத்தக்கதொரு அம்சமாகும். ராம நதித்திட்டம், கடனா நதித்திட்டம் ப்ளானிங் கமிஷனினால் சிபார்சு செய்யப்பட்டு எழுதப்பட்டிருப்பதும் வரவேற்கத் தக்கது. என் தொகுதியைப் பொறுத்தவரையில் நொய்யல் நதித்திட்டம், குடகனாறுத்திட்டம் இவைகள் நடுத்தரத் திட் டத்தில் சேர்க்கப்பட்டிருந்தன. ஆனால் இப்பொழுது நொய்யல், குடகனாறு திட்டம் விடப்பட்டிருக்கிறது. நொய்யல் நதித் திட்டம் பற்றி ஒரு வார்த்தை சொல்ல ஆசைப்படுகிறேன். நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். குறைந்த செலவில் அதிக விஸ்தீர ணத்திற்கு தண்ணீர் பாயும் நல்லதொரு திட்டம் அது. ஆகவே இதில் நிதியமைச்சர் அவர்கள், முதல் அமைச்சர் அவர்கள், பொது மராமத்து அமைச்சர் அவர்கள், இவர்கள் தக்க கவனம் செலுத்தி எப்படியாவது இவைகளை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டம் நகல் மூலம் வெளிப்படுத்தப் பட்டு அரசாங்கத்தினால் விளம்பரப்படுத்தப்பட்டு ஒவ்வொரு கடிதத்திலும் நொய்யல் நதித்திட்டம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படும் என்று சொல்லியும் அது தடைப்பட்டு விட்டது. இது அங்குள்ள மக்களுக்கு ஏமாற்றத்தை அளித் திருக்கிறது. ஆகவே அந்தத்திட்டம் எப்படியும் மூன்றாவது திட் டத்தில் சேர்க்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். "ரெம்யூனரேட்டிவ் ஆஸ்பெக்டிலும்" நல்லதொரு திட்டமது. அடுத்தபடியாக, குடகனாறுத் திட்டமும் நிறைவேற்றப்பட வேண்டும். சப் டிவிஷன்ஸ் போட்டு, டீட்டெயில் ப்ளான்ஸ் ஆன்ட் எஸ்டிமேட் தயாரித்து, இப்படி ஏராளமான பணம் செலவழித் திருக்கின்றார்கள். ஆகவே, இத்திட்டங்களை மூன்றாவது

[திரு. தோ. மு. நல்லசாமி] [4th July 1962

ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று மீண்டும் கூறிக் கொள்ள விரும்புகிறேன். கரூருக்கு மேல் பகுதிக்கு அஞ்சுவாமங்கலப்பட்டி மெயின்கனல் மூலம் அதனுல் நல்ல பலன் ஏற்படுமென்று நானும் சதாசிவம் அவர்களும் சொல்லி வந்திருக்கிறோம். இதனுல் துக்காச்சி, கிராவணி போன்ற இடங்கள் செழிப்படையும். கோவை மாவட்ட அங்கத்தினர்கள் ஆனமலே ஆற்றை நமக்கு கிடைக்கச் செய்வதால் தண்ணீர் அதிக மாக கிடைக்குமென்று சொன்னுர்கள். அதை நிறைவேற்று வதற்கும் சர்க்கார் கவனம் செலுத்தவேண்டும். அதனுல் கரூர் மேல் பகுதிகளில் உள்ள வரண்ட பிரதேசங்கள் பயனடைய ஏதுவாயிருக்கும். அடுத்தபடியாக இவ்வாண்டு 9½ கோடி ரூபாய் துண்டு விழுகிறது. இதை, வரி போட்டுத்தான் சரிப்படுத்த வேண்டும். அதில் எந்தவிதமான அபிப்பிராயப் பேதமும் கிடையாது. எந்த இனங்கள் வரி போட எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கின்றன? மோட்டாருக்கு வரி போடப்பட்டிருக்கிறது. இது சம்பந்தப்பட்ட மட்டில் சட்டசபையில் உள்ளவர்களும் நாட்டில் உள்ள மக்களும் மோட்டாருக்கு வரி போட்டால் என்ன என்று நினைக்கிறுர்கள். அத்தொழில் நடத்தும் சிலருடன் நான் பேசினேன். அவர்கள் கூறுகிறுர்கள், இன்று போட்டிருக்கும் வரி உயர்ந்தபட்ச அளவு வந்துவிட்டது. இனி அத்தொழிலை நடத்த முடியுமா என்று சந்தேகப்படுகிறோம் என்ற அடிப்படையில் சொல்கிறுர்கள். ஒன்று அதை 'நாஷனலைஸ்' செய்யவேண்டும், இல்லாவிடில் எந்தளவு வரி போட்டால் கட்டுப்படியாகுமோ அந்தளவு செய்ய வேண்டும். நாஷனலைஸ் செய்வது என்பது உடனடியாக நடக்கக் கூடிய காரியம் அல்ல. ஸ்டேட் டிரான்ஸ் போர்ட்டை நடத்தும் அனுபவம் நமக்கு இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு வரி போட்டால் நியாயமாக இருக்கும். ஆகவே இதை மறுபடியும் புனர்பரிசீலனை செய்து தேவையான அளவு வரி எடுத்துக்கொள்வது நியாயமாக அமையும் என்று எனது ஆலோசனையை நிதியமைச்சர் அவர்களுக்கு சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். பின்னர், தண்ணீர் தீர்வையைப் பொறுத்து, பழைய நஞ்சை நிலங்களுக்கு போடும் வரி செண்ட் பர்செண்ட் தண்ணீர் தீர்வை உயர்த்தும் ஆலோசனை நியாயமானதாக இருக்க லாம். ஆனல் புதிய புஞ்சை நிலங்களுக்கு செண்ட் பர்செண்டோடு மின்விசை மூலம் பயிர் செய்ய வசதியிருந்தால் அதற்கு 10 சத விகிதம் உயர்த்தி, ஆக அவர்கள் இரண்டு வித வரிகள் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஏராளமாக பணம் செலவு செய்து மின்விசை மூலம் தண்ணீர் பாய வசதி செய்து புஞ்சையை நஞ்சையாக்க முயற்சிகள் எடுத்து வரும்போது அந்நிலங்களுக்கு இரட்டை வரி போடுவதென்றால், தண்ணீர் தீர்வை செண்ட் பர்செண்ட் உயர்த்தி யது போக மின்விசை கட்டண உயர்விஞல் 10 சத விகிதம் கூடுதலாக கொடுக்க வேண்டுமென்றால் அது மிகவும் கஷ்டமாகும். ஆதலால் இதை ஆலோசனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். (மணியடிக்கப்பட்டது) கரும்பு செஸ் பற்றி ஒரு வார்த்தை. ரூபாய் 2-ல் இருந்து 5 ஆக உயர்த்தியது வரவேற்கத் தக்கது. அந்த நிதியை பொது நிதியோடு சேர்த்து விடாமல்

4th July 1962] [திரு. தோ. மு. நல்லசாமி]

தனியாக வைத்து கரும்பு அபிவிருத்தி செய்யவேண்டிய வகையில் செலவிடப்பட வேண்டும். ரிசர்ச், போக்குவரத்து, கரும்புப் பயிருக்கு சீக்கு வரும்போது அதைத் தடுப்பது இவைகளுக்காக அதை தனியாக ஒதுக்கி வைக்க வேண்டும். இன்றுள்ள நிதி யமைச்சர் அவர்கள் அதை நன்கு புரிந்து கொண்டுள்ளார்கள். ஆகவே, அதை தனியாக வைத்து கரும்பு அபிவிருத்தியில் தக்க கவனம் செலுத்தவேண்டும். தென் இந்தியாதான் கரும்பு வளர்ச்சிக்கு ஏற்ற இடம் என்று ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதற்கு இது உதவியாகயிருக்கும் என்று கூறிக்கொண்டு பொது வாக இந்த நிதிநிலை அறிக்கை வரவேற்கத்தக்கது என்று கூறி எனது உரையை முடிக்கிறேன், வணக்கம்.

* திரு. சொ. வெங்கிடசாமி : கனம் சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையை பல உறுப்பினர்கள் வர வேற்றும் பல உறுப்பினர்கள் எதிர்த்தும் பேசியிருக்கிறார்கள். ஆனால் வரவேற்றுப் பேசிய உறுப்பினர்கள் ஒவ்வொரு துறையில் அது வரவேற்க முடியாத நிலையில் இருக்கிறது என்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். கல்வித் துறைக்காக ஒதுக்கப்பட் டிருக்கும் தொகையைத்தான் அநேகமாக எல்லோரும் ஏகமனதாக வரவேற்றிருக்கிறார்கள். எல்லோராலும் எதிர்த்துப் பேசப்படும் வரி, நில வரி. அது விவசாய மக்களைப் பாதிப்பதாகும் என்று எல்லோரும் எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அதற்கு அடுத்த படியாக என்னைப் பொறுத்த மட்டில் லாரி வரியினால் விலைவாசி நிச்சயமாக உயரும் என்பது என் எண்ணம். லாரிகளில்தான் பெரும்பாலும் உணவுப் பொருள்கள் அதிகமாக எடுத்துச் செல்லப் படுகிறது. அப்படி உணவுப் பொருள்களை லாரிகளில் எடுத்துச் செல்வதால் லாரி வரியை உயர்த்தினால் லாரி சொந்தக்காரர்கள் அதிக வாடகை கேட்பார்கள். அப்பொழுது உணவுப் பொருள் களின் விலைவாசியை ஏற்றுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. அடுத்தபடியாக, எனது தொகுதியில் பாலாறு பொருந்தலாறு திட்டம் 53-ல் தொடங்கப்பட்டு அதை அமுல் செய்ய வேண்டு மென்று மூன்றுவது திட்ட குறிப்பேடு புத்தகத்தில் குறிப்பிடப் பட்டிருந்தும்கூட என்ன காரணத்தினாலோ அது விடப்பட்டு விட்டது. தேர்தலுக்கு நான்கு மாதங்களுக்கு முன்பு இந்த பாலாறு பொருந்தலாறு திட்டத்தை அமுல் செய்ய வேண்டு மென்று அதிகாரிகள் நியமிக்கப்பட்டு விவசாயிகளிடத்தில் ஏக்கர் ஒன்றுக்கு 300 ரூபாய் வீதம் அபிவிருத்தி வரி வாங்க சம்மத ஸ்டேட்மெண்ட் எழுதி வாங்கப்பட்டது. அப்படி வாங்கப்பட்டும் இதுவரை எந்தவிதப் பதிலும் கிடைக்கவில்லை. சமீபத்தில் பழனிக்கு விஜயம் செய்திருந்த கனம் அமைச்சர் அவர்களிடம் கேட்டபோது அத்திட்டம் இப்பொழுது இல்லை என்று கூறி விட்டார்கள். அதன் காரணத்தை அறிய விரும்புகிறேன். அடுத்தபடியாக, பழனி நகர குடிதண்ணீர் திட்டம். அரசாங் கத்தினிடம் ரூபாய் 28 லட்சம் கடன் கேட்டிருந்தார்கள். அதற்கு பழனி நகராண்மைக் கழகம் 5 சத விகிதம் வரியை உயர்த்தினால் தான் அத்தொகையை திரும்பித் தரமுடியும் என்று சொன்னதை நகராண்மைக் கழகம் ஒப்புக்கொண்டது. அதன் பின்னால்

[திரு. சொ. வெங்கிடசாமி] [4th July 1962

நகராண்மைக்கழகத்திற்கு ஓர் உத்தரவு வந்தது. அதில் 5 சதமானம் என்று போட்டிருந்தது தவறு, எட்டு சதமானம் என்று மாற்றவேண்டும் என்றும் அப்போதுதான் பத்து ஆண்டு காலத்தில் இதை திருப்பிக் கொடுக்க முடியும் என்றும் சொல்லியிருந்தது. அதன் பின்னுல் எட்டு சதமானம் என்று சொல்லியிருந்தது தவறு, 12 சதமானம் என்று மாற்றவேண்டும் என்று உத்தரவு வந்தது. அதையும் நகராண்மைக் கழகம் ஏற்றுக்கொண்டு தீர்மானம் நிறைவேற்றி அனுப்பிவைத்திருக்கிருர்கள். அதன் மீது இது வரையிலும் எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்திருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே இதைப்பற்றி உடனடியாக கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பழனி தேவஸ்தானத்திற்கு டிரஸ்டிகளை நியமனம் செய்ததில் ஒரு சில புகார்கள் இருப்பதாக பழனியிலுள்ள பெரியார்களும், சுற்றுவட்டாரத்திலுள்ள பலரும் என்னிடம் வந்து புகார்களை சொல்லி ஒரு பெரிய மனுவையும் கொடுத்தார்கள். இதற்கு முன்பு இந்த சட்டமன்றத்தில் அங்கத்தினராக இருந்த ஒருவர் கோவிலின் டிரஸ்டியாக ஐந்தாண்டு காலமாக பொறுப்பு வகித்து வந்திருக்கிருர்கள். அப்படி பொறுப்பு வகித்து வந்த காலத்தில் அந்த கோவிலிலிருந்து அதிகப்படியான பணம் விரயமாக்கப்பட்டிருக்கிறது என்று புகாரில் சொல்லப்பட்டிருக்கிறது. தணிக்கையாளர்கள் தணிக்கை செய்து கொடுத்த ரிப்போர்ட்டையும் சேர்த்து நீண்டதொரு மனுவை கொடுத்திருக்கிருர்கள். இது போன்ற மனுவை கனம் அமைச்சர் அவர்களுக்கும் அனுப்பியிருப்பதாகவும் தெரிவித்தார்கள். அந்த மனுவில் சொல்லப்பட்டிருப்பதானது, 1957-ல் பொறுப்பேற்கும்போது 54 லட்சம் ரூபாய் கையிருப்பு இருந்ததாகவும், அதன் பின்னுல் ஆண்டு ஒன்றுக்கு 11 லட்சம் வருமானம் வந்திருப்பதாகவும், இவ்விதம் 1957-லிருந்து 1962-வரை 55 லட்சம் ரூபாய் வருமானம் வந்திருப்பதாகவும் கூறப்பட்டிருக்கிறது. தணிக்கையாளர் ரிப்போர்ட்டில் கிட்டத்தட்ட இத்தனை பணமும் செலவழிக்கப்பட்டிருக்கிறது என்று கூறப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி ஒரு சில கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன். சமீபத்தில் மதுரையில் நடந்த எ.ஐ.ஸி.ஸி. கூட்டத்திற்கு தேவஸ்தானக் கணக்கிலிருந்து 1,300 ரூபாய் பெறுமான பஞ்சாமிர்தம் கொடுக்கப்பட்டதாகவும், அங்கு நடந்த கும்பாபிஷேகத்திற்கு வந்திருந்த யாத்ரீகர்களுக்கு 10 ரூபாய், 100 ரூபாய் டிக்கட் அச்சடிக்கப்பட்டு வினியோகம் செய்யப்பட்டிருப்பதாகவும் ஆனுல் இது பற்றிய எந்தவிதமான கணக்கும் தெரிவிக்கவில்லை என்றும், இதுசம்பந்தமான வரவு-செலவு ஒன்றும் காண்பிக்கப்படவில்லை என்றும் தணிக்கையாளர்கள் ரிப்போர்ட்டில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் அந்த அங்கத்தினர் டிரஸ்டீ போர்ட் தலைவராக இருந்த காலத்தில் நடைபெற்றிருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் காங்கிரஸ் கட்சியின் சார்பாக இந்த மன்றத்தில் இருந்த காரணத்திஞலோ அல்லது அங்கு காங்கிரஸ் கட்சியின் முக்கிய பிரமுகராக இருப்பதின் காரணத்திஞலோ அவர் மீண்டும் டிரஸ்டீ போர்ட் அங்கத்தினராக வந்திருக்கிருர். காங்கிரஸ் கட்சியின் ஆளாக இருப்பதி

ஞல் தான் திரும்பவும் அவரை நியமித்திருக்கிருர்களா என்ற சந்தேகம் ஏற்படுகிறது. அவர் முன்பு கொத்தனுர் சங்கத்தின் தலைவராக இருந்து கொண்டு தேவஸ்தான டிரஸ்டீ போர்ட் தலைவராகவும் இருந்து கொண்டிருந்தார். ஆனல் வேறு ஏதாவது ஒரு சங்கத்தின் தலைவராக இருந்து அதிலிருந்து வருமானம் பெறக்கூடியதாக இருந்தால் தேவஸ்தான போர்டில் இருக்கக் கூடாது என்று விதி இருக்கிறது. அதோடு தேவஸ்தானத்திற்கு பாக்கி கொடுக்கவேண்டியிருந்தால் அவர்களும் டிரஸ்டீ போர்டில் இருக்கக்கூடாது என்றிருக்கிறது. ஆனல் கடந்த இருபது ஆண்டுகளுக்கு முன்பு இந்த மாஜி அங்கத்தினர் அவர்களுடைய அண்ணு அவர்கள் தேவஸ்தானத்திற்கு குத்தகை நெல் சரியாகக் கொடுக்காமல் இருந்ததின் காரணமாக 2,500 ரூபாய் பாக்கி கொடுக்க வேண்யிருந்தது. இப்போது ஒரு வாரத்திற்கு முன்தான் அந்த பாக்கி கொடுக்கப்பட்டிருக்கிறது. கொத்தனுர் சங்கத்தின் தலைவராக இருந்து கொண்டு தேவஸ்தான கட்டிட வேலைகளில் எல்லாம், பங்குத் தொகைகளை பெற்றுக்கொண்டிருக்கிருர் என்கின்ற குற்றச்சாட்டு வந்து விடும் என்று நினைத்து இப்போது அந்தப் பதவியை ராஜிநாமா செய்திருக்கிருர். அதற்கு மேல் இப்போதும் டிரஸ்டீ போர்ட் அங்கத்தினராக நியமிக்கப்பட்டிருக்கிருர். இது போன்ற தவறுகளை மந்திரிகளின் கவனத்திற்கும் இந்த மன்றத்தின் கவனத்திற்கும் கொண்டு வர விரும்புகிறேன். ஆகவே இனிமேலாவது இம்மாதிரியான தவறுகள் நடக்காதவாறு நியாயம் வழங்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். தேவஸ்தானத்தில் சுமார் ஒரு கோடி ரூபாய் பாழாக்கப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி ஒரு நீதி விசாரணை நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

*திரு. எம். வில்லியம்: கனம் சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையின் மீது ஒரு சில கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன். இந்த நிதிநிலை அறிக்கையை அமைச்சர் அவர்கள் மிக தைரியத்தோடு கொண்டு வந்திருக்கிருர்கள் என்பதில் சந்தேகமில்லை. அதற்காக நான் அமைச்சர் அவர்களை பாராட்டுகிறேன். நம்முடைய திட்டம் தேசியத் திட்டத்தின் ஒரு அம்சமாகும். இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டால்தான் நம்முடைய அரசியல் குறிக்கோளாகிய சோஷியலிச சமுதாயத்தை அமைக்க முடியும். அதற்கேற்ற முறையில்தான் நமது திட்டங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்த அடிப்படைக் கொள்கையில்தான் நாம் செயலாற்றி வருகிருேம் என்பது நான் சொல்லாமலே எல்லோருக்கும் தெரியும். இந்த அபிவிருத்தித் திட்டங்கள் வெற்றி பெற்றுல் தான் நம் நாடு பொருளாதார அடிப்படையில் முன்னேற்றம் அடையமுடியும். அப்போதுதான் மக்களை இப்போது பீடித்திருக்கின்ற வறுமை, பசி, அறியாமை போன்றவை அகலும் என்பதில் சந்தேகமில்லை. இந்தக் குறைகள் எல்லாம் நீங்கினல் தான் ஒரு சமுதாயம் முன்னேற்றம் அடைய முடியும். அதற்கான முறையில்தான் இந்தத்திட்டங்கள் கொண்டு வரப்பட்டிருக்கின்றன என்பதை தைரியமாக

[திரு. எம். வில்லியம்] [4th July 1962

தெரிவித்துக்கொள்கிறேன். நாம் போட்டிருக்கின்ற அபிவிருத் தித்திட்டங்கள் எல்லாம் நன்றாக முடிவு அடைந்தால் தான் நம்முடைய அரசியல் குறிக்கோள் நிறைவேறும் என்பதில் சந்தேகமில்லை. இந்தத் திட்டங்களை எல்லாம் நிறைவேற்ற வேண்டுமென்றால் பணம் வசூலித்துத்தான் ஆக வேண்டும். அதற்காக ஒரு சில புது வரிகளை நிதி அமைச்சர் அவர்கள் கூறி இருக்கிறார்கள். அந்த வரிகள் இல்லாமல் அபிவிருத்தித் திட்டங்களை நிறைவேற்ற முடியும் என்ற கருத்தை எதிர்கட்சித் தலைவர்களோ அல்லது எதிர்கட்சியிலிருந்து பேசுகின்ற யாருமே சொல்ல வில்லை. இதற்கான வழி வகைகளை எதிர்கட்சியிலிருந்து யாரும் சொன்னதாகத் தெரியவில்லை. ஆகவே புது வரிகள் அவசியமாக போட்டுத்தான் தீர வேண்டியிருக்கிறது. ஆகவே இந்த வரிகள் ஏழை மக்களை அதிகமாக பாதிக்கிறது என்று சொல்வது சரியல்ல என்பதை கூற விரும்புகிறேன். ஏனென்றால் இந்தத் திட்டங்களினால் ஏழை மக்கள், தனவந்தர்கள் எல்லோரும் நன்மை அடைகிறார்கள். ஏழை மக்களுக்கு இப்போதே எவ்வளவோ நன்மைகள் இருக்கின்றன. ரூபாய் 1,500-க்கு கீழ் வருமானம் உள்ளவர்களுக்கு இலவசக்கல்வி அளிக்க வசதி செய்யப்பட்டிருக்கிறது. அது தவிர, திறமையான மாணவர்களுக்கு பல கல்விச் சலுகைகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. அதே போன்று சுகாதார வசதி எல்லா மக்களுக்கும் கிடைக்கும்படியாக செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே இந்தத் திட்டங்கள் வருவதால் ஏழை மக்கள் பாதிக்கப்படுவார்கள் என்று சொல்வதில் எந்தவிதமான அர்த்தமும் இல்லை. இந்தத் திட்டங்களின் மூலம் ஏழை மக்கள் அதிகமான நன்மையைத்தான் அடைகிறார்கள் என்பதை வற்புறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். புது வரிகள் போடுவதின் காரணமாக நன்மைகள்தான் ஏற்படுமே தவிர தீமை உண்டாகாது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். எதிர்கட்சிகள் வேண்டுமென்றால் இதை பிரசாரத்திற்கு வைத்துக்கொள்ளலாமே தவிர வேறு எந்தவிதமான நன்மையும் இல்லை என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரையில், கன்னியாகுமரி மாவட்டம் கல்வியில் அதிகமான முன்னேற்றம் அடைந்து வருகிறது என்பதில் சந்தேகம் இல்லை. உயர்நிலைப் பள்ளிகள் அதிகமாக இருக்கின்றன. ஆனால் கல்லூரிகள் இரண்டு தான் இருக்கின்றன. அதுவும் நாகர்கோவிலில் இருக்கின்றன. இந்த வருடம் ப்ரீ யூனிவர்ஸிட்டி கோர்ஸ்-க்கு சுமார் 1,500 பேர்கள் மனு செய்திருந்தார்கள். ஆனால் சுமார் 800, 900 மாணவர்களுக்குத் தான் அட்மிஷன் கிடைத்தது. பாக்கி பேர்கள் இடமில்லாமல் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே விளவங்கோடு தாலூகாவில் சர்க்கார் ஒரு கல்லூரியை ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறோம். இதற்கான மூலதனம் போடுவதற்கு அந்த இடத்தில் பெரிய தனவந்தர்கள் யாரும் இல்லை. எல்லோரும் நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள் தான். ஆகவே சர்க்காரே முன்வந்து விளவங்கோடு தாலூகாவில் ஒரு கல்லூரியை ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அங்கு நீர்ப் பாசனத் திட்டங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. இப்போது

4th July 1962] [திரு. எம். வில்லியம்]

பட்டணங்கால் திட்டம் இந்த மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உள்ளடக்கப்பட்டு இருக்கிறது. இந்த நீர்ப்பாசனத் திட்டத்தை வெகு சீக்கிரத்திலே நடைமுறைக்கு கொண்டு வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், சுமார் 16,000 ஏக்கர் நிலங்கள் இந்த நீர்த் தேக்கத்தினுல் நன்மையடைய முடியும். அதோடு அங்கு குடிதண்ணீர் பஞ்சமும் நீங்கி, அங்கு விவசாய அபிவிருத்திக்கும் வாய்ப்பு ஏற்படும் என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, இந்தத் திட்டத்தை கூடிய சீக்கிரம் நடைமுறைக்கு கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

10-00 a.m.

கோதையாறுத் திட்டம் இருக்கிறது. இந்த நதியிலிருந்து மின்சாரம் கிடைக்க வசதி இருக்கிறது. இது சம்பந்தமாக எஸ்டிமேட்டும் தயாராகி இருக்கிறது என்று அறிகிறேன். இந்த மின்சார நிலையத்தின் மூலமாக 75,000 கிலோ வாட் மின்சாரம் கிடைக்குமென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இப்போது இது ஒரு 'பைலட் ஸ்கீம்' ஆக இருக்கிறது. இதை நிறைவேற்றுவதற்கு 8 கோடி ரூபாய் ஆகுமென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்தத் திட்டத்தையும் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உள்ளடக்கி நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இது மாத்திரமல்ல. குழித்துறை ஆற்றில் ஞாறம்புழ என்ற இடத்தில் அங்கு ஒரு பாலம் கட்ட வேண்டுமென்றும், அதற்கான எஸ்டிமேட்டும் தயாராகி இருக்கிறது. இதையும் இந்த மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே உள்ளடக்கி நடைமுறைக்கு கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக, அங்கு பனைத்தொழில் திட்டத்தை நம்பி ஒரு லட்சத்திற்கு மேல் இருக்கிறுர்கள். ஆகவே, இந்த பனை அபிவிருத்தித் தொழிலை தக்கவாறு செய்வதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அங்கு இதற்கு ஒரு "பாம்-கர் பெடரேஷன்" அமைக்க வேண்டுமென்று, ஒரு வருஷமாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகின்றன. இது சம்பந்தமாக சிரமங்கள் ஏதாவது இருந்தால், அதற்கான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டு, அந்தப் பிரதேசத்தில் கூடிய சீக்கிரத்திலே ஒரு பெடரேஷன் அமைக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன். ஏனென்றால் இந்த பனைத் தொழிலை நம்பி வாழக்கூடிய ஏழை மக்கள் மிகவும் வறுமையினுல் கஷ்டப்படுகிறுர்கள். அன்றுடம் வேலை செய்தாலும், போதிய கூலி கிடைக்காமல் பட்டினி கிடக்கக் கூடிய நிலைமையிலே இருக்கிறுர்கள். இதைத் தவிர, இந்தத் தொழிலிலே ஈடுபட்டிருக்கக்கூடிய தொழிலாளர்களுக்கு அடிக்கடி மரணம் சம்பவிக்கிறது. இப்படி திடீர் மரணம் ஏற்படுவதினுல், அவர்களுக்கு 'கம்பல்சரி இன்சூரன்ஸ்' திட்டம் ஒன்றை ஏற்படுத்துவதற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர்களுக்கு விறகு கிடைப்பதற்கு வேண்டிய ஒழுங்கு செய்யவேண்டும்.

[திரு. எம். வில்லியம்] [4th July 1962

இது மாத்திரமல்ல. அங்கு அடிக்கடி மழை காலத்தில் வெள்ளச் சேதம் ஏற்படுகிறது. வாய்க்கால் வழியாக வெள்ளம் பிரிட்டு, கரைகள் உடைந்து, ஆண்டுதோறும் 500, 1,000 ஏக்கர் நிலங்கள் மண்ணாலும், மணலாலும் நிரப்பப்படுகிறது. ஆகவே, இந்த வாய்க்கால் கரைகளை நல்லமுறையில் சீர்படுத்தி வைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்போதுதான் அவைகள் நீர்ப்பாசனத்திற்கு நன்மையளிக்க முடியும். இப்படி வெள்ளக் காலங்களில் அடிக்கடி உடைந்து விடுவதால், அதைத் தடுப்பதற்கான முறையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களை பணிவோடு வேண்டிக்கொள்கிறேன். இந்தச் சபையில் ஒருசில வார்த்தைகள் பேசுவதற்கு அனுமதி தந்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* திரு. கே. ஏ. மதியழகன்: கனம் சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையின் மீது என்னுடைய சில வார்த்தைகளை இந்த மன்றத்தில் தெரிவிக்க விரும்புகிறேன். பல உறுப்பினர்கள், நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்கள் முதன் முதலாக இந்த நிதி நிலை அறிக்கையை சமர்ப்பிக்கிறார்கள் என்று குறிப்பிட்டார்கள். என்னைப் பொறுத்தவரையில் இந்த நிதி நிலை அறிக்கை, சுதந்திரத்தை இந்த நாட்டிற்கு வாங்கித் தந்த ஒரு கட்சி, சுதந்திரம் பெற்றதற்குப் பிறகு, அதாவது 15 ஆண்டுகளுக்குப் பிறகு, மன்றத்தின் முன்னாலே சமர்ப்பிக்கின்ற

(கனம் உதவி சபாநாயகர் தலைமை.)

ஒரு அறிக்கையாகத்தான் நான் இந்த அறிக்கையை கருதுகிறேன். இந்த அறிக்கையை சமர்ப்பித்திருக்கிற நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்களைக் காட்டிலும் இதற்கு வேண்டிய அருகதையும், ஆற்றலையும் கொண்டு அந்தக் கட்சியின் சார்பிலே நல்ல ஒரு திறமையான அறிக்கையைச் சமர்ப்பிக்கக்கூடியவர்கள் உண்மையில் யாரும் இருக்க முடியாது என்பதைப்பற்றி இரண்டு விதமான அபிப்பிராயங்கள் யாருக்கும் இருக்க முடியாது. ஆனால் அப்பேர்ப்பட்டவருடைய அறிக்கையில் இந்த மாநிலத்திலுள்ள மக்களுடைய நலன்களை பின்னணியாகக்கொண்டு, அதற்குப் பரிகாரம் தேடுகிற காரியங்களை என்ன வடிவத்தில் தந்திருக்கிறார்கள்? என்ன வர்ணத்தில் தீட்டி இருக்கிறார்கள்? என்பது தான் இன்றைக்கு இந்தச் சபையின் முக்கியமான சாரம் மிகுந்த விவாதம் என்று நான் கருதுகிறேன். அந்த அடிப்படை அம்சத்தைப் பற்றித்தான் என்னுடைய உரையிலே சில வார்த்தைகள் அப்படி இருக்கிறதா என்று தெரிந்து சொல்லலாம் என்று எண்ணுகிறேன்.

1947-ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 14-ம் தேதி இரவு 12 மணிக்கு டாண் டாண் என்று கடிகாரம் மணி அடித்தது. அந்த 12 மணி அடித்தவுடன் இந்தியாவில் எல்லோரும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு அது ஒரு சாவு மணியாகவும், நவ இந்தியாவுக்கு அதை ஒரு நவ மணியாகவும் கருதினார்கள்.

4th July 1962] [திரு. கே. ஏ. மதியழகன்]

அப்போது அந்த நள்ளிரவிலே, நிசப்தத்தைக் கிழித்துக்கொண்டு டெல்லியிலே இருக்கிற அரசியல் நிர்ணய சபையிலே பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் பேசினார்கள். இந்தத் தலைமுறையின் மிகச் சிறந்த தலைவராகிய மகாத்மா காந்தியடிகளுடைய சிறந்த லட்சியமாகிய "இந்த நாட்டிலே உள்ள கடைசி மனிதனின் கடைசி கண்ணீர் துளியை அகற்றுவதற்கு பாடுபடுவோம்" என்று பேசினார்கள். ஆகவே, அந்த கால கட்டத்திலிருந்து இன்றைக்கு வரையிலும் யாத்திரை செய்து பாருங்கள். அப்படிப்பட்ட கண்ணீர்த் துளிகள் இன்று இந்த நாட்டிலே குறைந்திருக்கிறதா? காவேரி வெள்ளம்போல் பெருகி அல்லவா இருக்கிறது? இன்னமும் எத்தனை வாக்குறுதிகள் எல்லாம் அளித்தார்கள். அரசியல் சட்டத்தின்கீழ் விஸ்வாசப் பிரமாணம் இந்த மன்றத்திலே உள்ள நாமும் எடுத்திருக்கிறோம். இதைவிட அதிகமான பக்திப் பிரவாகத்துடன் நமது அமைச்சர்கள் எடுத்திருப்பார்கள் என்று நான் நம்புகிறேன். பல ஆண்டுகளுக்கு முன்பு அரசியல் சட்டத்திலே, அதாவது 1950-வது வருஷத்திலேயே பல உறுதிமொழிகள் வழங்கப்பட்டன. இந்திய அரசியல் சட்டத்தில் "Directive Principles" அதாவது நெறிமுறைக் கொள்கையின் அடிப்படையிலே, நலன்கள் வளர்க்கப்பட வேண்டுமென்பதில், நாலாவது பாகத்தில் 38-வது பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

'The State shall strive to promote the welfare of the people by securing and protecting as effectively, as it may a social order in which Justice, Social, Economic and Political, shall inform all the institutions of the National life.'

என்று வாக்குறுதி அளிக்கப்பட்டது. 'இப்படிப்பட்ட வாக்குறுதி அளித்ததை நான் உண்மையிலேயே கருதுகிறேன் இன்றைக்கு இருக்கிற இந்த சமுதாயத்தை மாற்றி, இன்றைக்கு இருக்கிற செல்வச் சிகரங்களையும் ஏழ்மைப் படுகுழிகளையும் ஒழிக்க பாடுபட்டு, நாட்டிலே ஒரு புதிய சமுதாயத்தை நிறுவுவதற்கு உண்மையாக உத்திரவாதம் அளித்தது என்று. இதேபோல்தான், நாலாவது பாகம் 39-வது பகுதியில்,

'The State shall, in particular, direct its policy towards securing—

that the citizens, men and women equally, have the right to an adequate means of livelihood.'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இன்றையத் தினம் இந்த உத்திரவாதங்கள் உண்மையிலேயே கொடுக்கப்பட்ட உத்திரவாதங்கள் தான் என்று நான் கருதுகிறேன். நாட்டிற்கு சுயராஜ்யத்தைப் பெற்றுத் தந்த ஒரு கட்சி கொடுத்த உத்தரவாதம், இந்த நாட்டிற்கு தியாகத்தைச் செய்த ஒரு கட்சி கொடுத்த உத்தரவாதம் என்றே கருதுகிறேன். இந்த உத்தரவாதங்கள் எந்த அளவிலே நம்முடைய நிதி நிலை அறிக்கையில், செயல்படுத்தப்பட்டிருக்கிறது என்று உரைகல்லிலே வைத்துப் பார்த்தால், இந்த நிதிநிலை அறிக்கை கண்டிப்பாக மிக அழுத்தமான

கண்டனத்திற்குரிய அறிக்கையாக இருக்கிறது என்றுதான் நான் சொல்வேன். அந்த உரைகல்லிலே இதைப் பார்த்தால், இது பொன் பூசிய பித்தளையாகத் தான் காட்சி தருகிறது. இந்த நிதிநிலை அறிக்கை மிகவும் கண்டனத்திற்கு உரியது என்பதை நான் சொல்லிக்கொள்ள பிரியப்படுகிறேன். இந்த மாநிலத்தில் எவ்வளவோ பெரும் பிரச்னைகள் நிறைய இருக்கிறது. உண்மையாகவே, சொல்லமுடியாத பல வேதனைகள் இந்த நாட்டிலே இன்று இருக்கிறது. அந்த வேதனைகளுக்கு, அதாவது வறுமைக்கு, வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு, கடன் தொல்லையினால் கஷ்டப்படுகிறவர்களுக்கு என்ன பரிகாரம் இதிலே தரப்பட்டிருக்கிறது? வேலையில்லாத் திண்டாட்டமும், வேலைக்குறைவும் இந்த நாட்டின் பெரிய பிரச்னைகள் என்று பொருளாதார மேதை திரு. மகலநோபிஸ் சொன்னார். அறிஞர் பெர்னாட்ஷா சமுதாயத்தில் வறுமைதான் மிகமிகப் பெரிய குற்றம் என்று எடுத்துச் சொன்னார்கள். வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் இந்த இரண்டும் இணைபிரியாத தோழர்கள். வறுமையின் கோர நர்த்தனம் காரணமாக தண்டவாளத்திற்கும் தாம்புக் கயிற்றுக்கும் தலையைக்கொடுத்து தற்கொலை செய்து கொண்டோர் தொகை ஏராளம். இந்த சண்டமாருதத்தில் சிக்கி, அனாதையாக, துர்பாக்கியவனாக பிச்சைக்காரராக சுற்றுபவர்களுடைய பட்டியல் தான் இந்த புள்ளி விவரங்களை அமைச்சர் அவர்கள் கொடுத்த நேரத்தில் என் மனக்கண் முன்னால் நின்றது. அவர்களுக்கு இது தெரியாதது அல்ல. வழக்கு மன்றங்கள் வறுமையை பிரகடனப்படுத்துகிறது. சிறைச்சாலை எச்சரிக்கை பலகையாக ஆகிறது. வறுமையின் காரணமாக வாழ முடியாதவர்கள் வாழ்க்கையில் வழுக்கிவிழுந்து விபசாரிகளாக ஆகிறார்கள். குற்றங்கள் பெருகுகின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வேலையில்லாத திண்டாட்டத்தை நீக்குவதற்கு . . .

**திரு. கே. பொன்னையா :** ஆன் எ பாயிண்டு ஆப் ஆர்டர். கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் அவர்கள் பட்ஜெட்டில் உள்ள விஷயங்களைப்பற்றி பேசுகிறார்களா அல்லது பொதுப் பிரசங்கம் செய்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** நான் தாழ்மையுடன் இப்பொழுது பாயிண்டு ஆப் ஆர்டர் கிளப்பிய கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இப்பொழுது பேசுகிற கனம் அங்கத்தினர் அவர்கள் மிக முக்கியமான விஷயம் பற்றி மிகவும் உருக்கமாக மிகுந்த உணர்ச்சியோடு பேசுகிறார்கள். என்ன 'பாயிண்டு ஆப் ஆர்டர்' என்று நினைத்தாலும், அவர்களை குறுக்கிடாமல் இருக்கவேண்டுமென்று என் பக்கத்திலுள்ள கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**திரு. கே. ஏ. மதியழகன் :** இப்படிப்பட்ட வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையில் சாங்கோபாங்கமாக ஒரு அத்தியாயமே எழுதப்பட்டது. நான் பணிவோடு கேட்கிறேன். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் சாதாரண மக்களின் வாழ்க்கைத் தரம் என்ன உயர்ந்திருக்கிறது? பொது வாழ்க்கைத்தரம் என்ன

4th July 1962] [திரு. கே. ஏ. மதியழகன்]

உயர்ந்திருக்கிறது என்று நீங்கள் சொல்லவில்லை? இந்த ஐந்தாண்டுத் திட்டங்களினால் விவசாயம் செய்கின்ற நிலங்கள் எவ்வளவு அதிகரித்திருக்கிறது? விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிற மக்கள் எவ்வளவு பேர்கள் அதிகரித்திருக்கிறார்கள்? தனிமனிதன் ஒவ்வொருவரும் விவசாயம் செய்கிற ஏகராக்கள் எவ்வளவு அதிகரித்திருக்கிறது? இவர்கள் எவ்வளவு மாதங்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்? மீதி நேரத்தில் என்ன செய்கிறார்கள்? நகர்புறங்களிலே வேலையில்லாத் திண்டாட்டத்தினால் பாதிக்கப்பட்டுள்ளோர் தொகை என்ன? அதேபோல் வேலை தேடித்தருகிற ஸ்தாபனங்களுக்கு ஆயிரக்கணக்கான விண்ணப்பங்கள் ஏன் வருகின்றன? இதற்கு என்ன காரணம்? நீங்கள் நிறைவேற்றியிருக்கிற திட்டங்களின் மூலம் எவ்வளவு ஆயிரம் பேர்களுக்கு வேலை கொடுத்திருக்கிறீர்கள்? எவ்வளவு பேர்களுக்கு நீர்ப்பாசன திட்டங்களினால் பலன் ஏற்பட்டிருக்கிறது? இந்தப் புள்ளி விவரங்களையெல்லாம் பார்க்கும்பொழுது நான் நிச்சயமாகச் சொல்லுகிறேன் நீங்கள் நம்பிக்கைத் துரோகம் செய்கிறீர்கள். விலைவாசி உயர்வு என்று நாங்கள் அமளி செய்கிறோம், ஆர்ப்பாட்டம் செய்கிறோம் என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்து, இது சரிதானா என்று கேட்கிறார். நான் வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஒரு வகையில் நமது நிதி அமைச்சர் மிகவும் துணிச்சல்காரர். எவ்வளவு துணிச்சல் இருந்தால் விலைவாசிபற்றி ஒன்றுமே கூறாது விட்டிருக்க முடியும். ஆனால், இதற்கு முன்னாலே இருந்த நிதி அமைச்சர் அவர்கள் 1959-60-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையில் சொல்லியிருக்கிற கருத்தையும், இப்பொழுது இந்த மன்றத்தில் சொல்லப்பட்டிருக்கும் கருத்தையும் வெளியே சொல்லப்போனோமானால், இது திராவிட முன்னேற்றக் கழகத்தாருடைய குரல் என்று தான் கருதுவீர்கள். நாங்கள் இதைப்பற்றி வாதம் செய்யத் தேவையில்லை. 1959-60-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையில் முன்பு இருந்த நிதி அமைச்சர் கனம் சுப்ரமணியம் அவர்கள் கூறியுள்ளார்கள்:

"விலைவாசிகளில் அடிக்கடி ஏற்படும் மாறுதல்கள்தான் நம் நாட்டின் பொருளாதார நிலையில் உள்ள மிகவும் கவலைக்கிடமான அம்சமாகும். மக்களின் அத்யாவசியத் தேவைப் பொருளான உணவு, உடை இவைகளின் விலையில் ஏற்றங்காணும்பொழுது மக்களுக்கு ஏற்படும் இன்னல்கள் ஒருபுறமிருக்க அதன் காரணமாக நாட்டின் பொருளாதாரமே பாதிக்கப்படுவதைக் காண்கிறோம். அதிலும் திட்ட அடிப்படையில் நாம் பொருளாதாரத்தை வளர்க்க எடுத்துக்கொண்டிருக்கும் முயற்சிகளுக்கு இவ்விலைவாசி மாறுதல்கள் மிகவும் முரண்பாடாகவும் பெருந்தடையாகவும் அமைந்துள்ளன. நாம் ஏற்றுக்கொண்டிருக்கும் குறிக்கோள்களுக்கிணங்க திட்டம் நிறைவேற்றப்படவேண்டுமானால் விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவது மிகவும் அவசியமென்பதை மேன்மேலும் பல நிகழ்ச்சிகள் வலியுறுத்தி வருகின்றன. திட்ட அடிப்படையில் வளர்ச்சியும் கட்டுப்பாடற்ற விலைவாசியும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை. இதை மனதிற் கொண்டுதான் உணவு தானியங்களின் விலையேற்றத்தை நாம் ஆராயவேண்டியிருக்கிறது."

[திரு. கே. ஏ. மதியழகன்] [4th July 1962

அதேமாதிரி மீண்டும் 1960-61-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையில் அவர் கூறியிருக்கிறார் :

"மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வகுக்கும் இத் தருணத்தில் இரண்டாவது திட்டக் காலத்தில் ஏற்பட்டிருக்கும் இந்த அனுபவத்தை அடிப்படையாகக்கொண்டு விலைவாசிகளை, அதிலும் முக்கியமாக அத்தியாவசியமான பொருள்களின் விலை வாசிகளை, ஓரளவுக்குள் கட்டுப்படுத்துவதற்கான வழிவகைகளை வகுக்க வேண்டியது மிகவும் அவசியம் என்பதை மறுமுறையும் இங்கு வலியுறுத்த விரும்புகிறேன். இதனைச் சொல்லுகிற நேரத்தில், விலைவாசி உயர்வு என்பது விவாதத்திற்குள்ள பிரச்சனை அல்ல, நாட்டினுடைய இதயக்குரல் அது என்று வற்புறுத்த விரும்புகிறேன். இந்த நிலையில் எரி மலையின் மீது நின்று மகுடி வாசிக்கிறார் நிதி அமைச்சர் அவர்கள். அவர்க ளுடைய தியாகத்திற்கு, அவர்கள் கட்சிக்கு கொடுத்துள்ள அதிகாரத்தை மக்கள் மீறமாட்டார்கள் என்று அவர்கள் கருதக் கூடாது. தேசியம், தேசபக்தி என்ற சல்லாத்துணி கொண்டு நெடுநாள் மூடி மறைக்க முடியாது. பஞ்சாலை அதிபர்கள், பெரிய மிட்டா மிராசுகள் இவர்களுடைய வாழ்வை நிலைநிறுத்துவதற் குரிய போக்கை மாற்றி, ஆயிரக்கணக்கான ஏழை எளியவர்கள் நல்வாழ்வு பெறும் வழியில், நாட்டினுடைய வருமானம் உயர்வதற் கேற்ற தொழிற்சாலைகளை எடுத்துக்கொள்ளத்தக்க வகையில் செயல்படவேண்டும். புதிய சமுதாய உணர்வுக்கேற்ப ஏற்றத் தாழ்வுகளை நிர்மூலமாக்காத வரையில் நெடுநாட்கள் நீடிக்க முடியாது. காலதேவனின் கட்டளையை யாரும் கண்டிப்பாக மீற முடியாது. இன்றைக்கு இருக்கிற வரிகள் எல்லாம் மறைமுக வரிகள். அமைச்சர் அவர்கள் வெளிநாடுகளுக்கு சென்றிருக் கிறார்கள். அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும், 10 ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததைவிட இன்றைக்கு மறைமுக வரிகள் பெரும் பாலும் நேர்முக வரிகளாக மாற்றப்பட்டிருக்கின்றன. புல் டோஸர்கள் அமெரிக்காவிலிருந்து பெறுகிறோம், ரஷ்யாவிலிருந்து பெறுகிறோம் என்று சொல்லப்படுகிறது. விவசாய முறைகளில் காலத்திற்கேற்ற விஞ்ஞான முறைகளை பின்பற்றுகிறீர்கள். வரி விதிப்பு முறையில் ஏன் அவர்களைப் பின்பற்றக்கூடாது? உங்களை யெல்லாம் சபிக்கவேண்டும், உங்களையெல்லாம் கண்டிக்கவேண்டும் என்பதற்குத்தானா இந்த மன்றத்தில் நாங்கள் வந்திருக்கிறோம். நாங்கள் எங்கிருந்து வந்தோம்? ஆலை அரசர்களின் திருமனைகளில் பிறந்தவர்களல்ல, மிட்டா மிராசுகளல்ல, வணிக வேந்தர்கள் குடும்பங்களைச் சேர்ந்தவர்களல்ல. சாதாரண குடியான குடும் பங்களை-நெசவாளர் குடும்பங்களை—நடுத்தர மக்கள் குடும்பங்களை நாங்கள் சேர்ந்தவர்கள். எப்படி இங்கு வந்தோம்? ஏன் வந்தோம், எங்கள் இதய உணர்வை சிறிய விஷயம் அன்றோ, நொண்டிச் சமாதானம் என்றோ தயவுசெய்து கருதாது, மிகவும் அனுபவம் படைத்த மந்திரி அவர்கள், மிக்க திறமைசாலியான மந்திரி அவர்கள், கோடிக்கணக்கான மக்களுடைய நல்வாழ்வை கருத்தில்கொண்டு, இந்த வரவு செலவுத் திட்டத்திலிருக்கிற

4th July 1962] [திரு. கே. ஏ. மதியழகன்]

நிலைமைகள் இல்லாமல், அவர்கள் கூறுகிற சோஷலிச சமுதாய பாணியில் போய், பஞ்சாலைகள், பஸ்கள் போன்ற நிறைய வருமானம் தரத்தக்க துறைகளையெல்லாம் தேசியமயமாக்க வேண்டுமென்று நான் நிச்சயமாகச் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். அப்படிச் செய்தால், ரூ. 100 கோடி வரியைக்கூட போடாமல் இந்த சர்க்கார் நடத்த முடியும். உங்களுக்கு இதைச் செய்ய மனதில் இடம் இல்லையே தவிர, முடியாது என்பது கிடையாது. என்ன தைரியம் இருந்தால், துணிவு இருந்தால், சோஷலிஸ சமுதாயம் என்று சொல்லிக்கொண்டே ஆச்சாரியார் அவர்களின் அத்யந்த சீடர் போல் நம்முடைய கனம் முதல் அமைச்சர் அவர்கள் பஸ்களை தேசியமயமாக்க முடியாது, பஞ்சாலைகளை தேசியமயமாக்க முடியாது என்று கோவையில் சொல்லியிருப்பார்கள்? ஏழைகளுக்கு ஒருவிதமாகவும், பணக் காரர்களுக்கு மற்றோர் விதமாகவும் இரட்டை வேடம் போடு கிறீர்கள். எனக்குத் தெரியும், நான் கோயம்புத்தூர் மாவட்டத்தில் பிறந்தவன். உடுமலைப்பேட்டையில் இருக்கிற 4 மில்களுடைய வருஷ வருமானம் மட்டும் ரூ. 50 லட்சம். எனக்குத் தெரியும், கோவையில் இருக்கும் ஒவ்வொரு மில்லுக்கும் 10 லட்ச ரூபாய் மூலதனம் என்றால், 15 லட்சம், 20 லட்சம் என்று நிகரலாபம் வருகிறது. அந்த அளவுக்கு வருமானம் வரக்கூடிய, லாபம் வரக்கூடிய முறையில் மேலே செல்வந்தர்கள், சீமான்கள் இருப் பதும், கீழே சாதாரண ஏழை மக்கள் இருப்பதும் இப்படி சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வு இருப்பதும், நாட்டுக்கும் நல்லதல்ல, நாடாள்பவருக்கும் நல்லதல்ல. நீங்கள் டெல்லியில் உங்கள் அதிகாரங்களை அடகு வைத்துவிட்டு, யூனியன் லிஸ்டில் அர்ப்பணம் செய்துவிட்டு, 'பவதி பிட்சாந்தேஹி' என்று இந்த மாநிலத்திலிருந்து அங்கே போகிற நிலை மாறவேண்டும். திட்டங்கள் என்று சொல்லி யாரோ சொல்லுகிற காரியங்களை இங்கே ஏற்றுக்கொண்டு, இங்கே உள்ள மக்கள் சமுதாயத்துடன் விளையாடவேண்டாம் என்று நான் மிகவும் கவனமாகவும், பணி வோடும் கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

* **திரு. செ. சீனிவாசன் :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்துள்ள நடப்பு ஆண்டு நிதிநிலை அறிக்கையை வரவேற்று அதை முழு மனதுடன் நான் ஆதரிக்கிறேன். ஏனென்றால், அது நல்ல பல திட்டங்களின் கருத்துக்களைக் கொண்ட பிரதிபலிப்பாக விளங்கு கிறது. எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் அவர்கள் ஏழைகளுக்காக ரொம்பவும் வாதாடிப் பேசினார். அதே நேரத்தில் ஏழைகளுக்காக பல அபிவிருத்தித் திட்டங்கள் இந்த நிதிநிலை அறிக்கையிலே குறிப்பிடப்பட்டிருக்கின்றன என்பதை அறியாத காரணத்தினாலோ அல்லது மேலே நாடுகளில் கூட இந்த மறைமுக மான வரியை இன்னும் பூரணமாக எடுக்கவில்லை என்ற காரணத்தை அறியாததினாலோ அவர் அப்படி பேசியிருக்கிறார் என்று எண்ண வேண்டியிருக்கிறது. உலகத்திலேயே வெகு நீண்ட நாட்களுக்குப் பிறகு சுதந்திரம் பெற்ற நாடுகளிலேயே நமது

[திரு. செ. சீனிவாசன்] [4th July 1962

நாட்டிலேதான் இந்த மாதிரி குறைவான அளவுக்கு வரிகள் இருக்கின்றன என்பதை நாம் புள்ளிவிவரங்களோடு சொல்ல முடியும், விளக்கவும் முடியும். ஆனால் புள்ளிவிவரங்கள் மூலமாக விளக்கம் காட்டும் நண்பர்கள் மேலே நாடுகளில் உள்ள மறைமுகமான வரியைப்பற்றிச் சொல்லும்பொழுது, அங்கேயுள்ள மக்களின் வாழ்க்கைத்தரம், அங்கேயிருக்கக்கூடிய வசதிகள், ஜனத்தொகை, அங்கேயுள்ள தொழிலாளர்களுடைய நிலைமை அவற்றையெல்லாம் கணக்குப் பார்க்காமல் ஏதோ புள்ளிவிவரங்கள் கொடுக்கிறோம் என்ற அடிப்படையிலே பேசினால் அது சரியாக இருக்காது. உதாரணமாக, அமெரிக்கா போன்ற மேல் நாடுகளில், சுதந்திரம் பெற்று எவ்வளவோ ஆண்டுகளுக்குப் பிறகும்கூட இந்த மறைமுக வரிகள் எடுக்கப்படவில்லை, இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கின்றன. இந்த நாட்டிலே எந்த வரி போட்டாலும் அது ஏழை மக்களையோ, மத்தியதர வகுப்பினரையோ பாதிக்கத்தான் செய்யும் என்பது பொருளாதாரம் தெரிந்த அனைவருக்கும் நன்கு தெரியும். உதாரணமாக அமெரிக்காவிலேயுள்ள தொழிலாளர்கள் தங்களது வீட்டு வேலைகளை முடித்துக்கொண்டு, தங்களுக்கும் வேலை ஆட்களை அமர்த்திக்கொண்டு, காரிலே அவர்கள் வேலை பார்க்கும் இடத்திற்கு செல்லும் அளவுக்கு அவர்களுடைய பொருளாதாரம் வளர்ந்து கொண்டு வருகிறது. அந்தச் சூழ்நிலையிலும் கூட அந்த நாட்டிலே மறைமுக வரியும், நேர்முக வரியும், செலுத்த வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது. ஆனால், நமது நாட்டிலே பல நூற்றாண்டுகளாக நாம் அடிமைகளாக இருந்த ஒரு குறை நீங்கி, இப்பொழுதுதான் தேசியப் புனர்வாழ்வு என்ற முறையிலே முன்னேற்றப் பாதையிலே சென்று கொண்டிருக்கிறோம். இந்த நிலையிலே ஏழை யார், மத்தியதர வகுப்பினர் யார், பணக்காரர் யார், என்று சொல்லமுடியாத நிலையில் இருக்கிறோம். எதிர்க்கட்சி மெம்பர்கள் அடிக்கடி இந்த பஸ் போக்குவரத்தை தேசியமயம் ஆக்குவதன் மூலம் சர்க்காருக்கு பல கோடி ரூபாய்கள் வரும், அதனாலே வேறு வரிகளே வேண்டாம் என்று பேசுகிறார்கள். உதாரணமாக, ரெயில் போக்குவரத்தை தேசியமயமாக்கிய பிறகு, அதிலும் கூட, பல குறைகள் இருக்கின்றன என்று அங்கத்தினர்களும் பொதுமக்களும் சொல்லுகிறார்கள். நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காக நல்ல திட்டங்களை நமது சர்க்கார் மேற்கொண்டிருக்கும்பொழுது, இந்த மாதிரி வரிவிதிப்பதை ஒரு பெரிய குறையாக ஆக்கமுடியாது என்பது என்போன்றவர்களின் கருத்து. அதிகமாகச் சொல்லிக் கொண்டு போவதற்கு நேரம் இல்லாததால், எனது தொகுதியாகிய பரமக்குடியைப் பற்றி சில வார்த்தைகள் சொல்லிக் கொண்டு எனது உரையை முடிக்க விரும்புகிறேன்.

முக்கியமாக இந்த மோட்டார் வரிகளின் மூலமாக 2 கோடி ரூபாய் வருவாய் கிடைக்கும் என்று கனம் நிதியமைச்சர் அவர்கள் தமது பட்ஜெட் உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் எனக்கு கிடைத்த தகவல்படி இந்த வரி மூலம் சுமார் 4 கோடி ரூபாய் வருமானம் வரலாம் என்று தெரிகிறது. ஆகவே விவசாயி

களின் நல்வாழ்வுக்காக பல நல்ல திட்டங்களை பல கோடிக்கணக்கான ரூபாயில் நிறைவேற்றும் நமது அரசாங்கம், இந்த நிலவரி மூலமாகக் கிடைக்கும் 1.3 கோடி ரூபாய் வேறு ஏதாவது முறையிலே எடுக்க முடியுமே ஆனால், அதன் மூலம் இந்த நில வரியை எடுத்து விட்டால் ஓரளவுக்கு விவசாயிகளுடைய வாழ்வு வளம் பெறும். அப்படிச் செய்தால் விவசாயிகளுக்கு மனநிறைவு ஏற்படும், அவர்களுடைய பொருளாதார வளர்ச்சிக்கும் நாம் உதவி செய்ததாக இருக்கும் என்பதை கனம் நிதியமைச்சர் அவர்கள் தயவு செய்து கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, எனது மாவட்டத்தைப் பொறுத்தவரையில இந்த திட்டத்திலே இரண்டாவதாக வைகைக் கால்வாய் சீரமைப்புத் திட்டம் இடம் பெறுவதைக் குறித்து நான் மகிழ்ச்சியுறுகிறேன். அதே சமயத்தில் என்னுடைய பகுதியிலே ஒரு நீங்காத குறையாக, ஜமீன் ஒழிப்புக்குப் பிறகு, குளம் கோர்வை நிலங்கள் (tank bed lands) சம்பந்தமாக பட்டாக்கள் நீக்கப்பட்டு அங்கேயுள்ள விவசாயிகள் வெகுவாக பாதிக்கப்பட்டு இருக்கிறார்கள். உற்பத்தியை அதிகமாக பெருக்கவேண்டும் என்று மூன்றாவது திட்டத்திலே நாம் ஒரு லட்சியத்தை மேற்கொண்டிருக்கிறோம். அப்படி இருக்கும் பொழுது இந்த குளம் கோர்வை நிலங்களுக்கு மறுபடியும் பட்டாக்கள் வழங்குவதிலே எந்தவித சட்டசம்பந்தமான பிரச்சினையும் இருக்காது என்று சட்ட நிபுணரான நமது நிதியமைச்சர் அவர்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். ஏற்கெனவே சமஸ்தானாதிபதிகள் இந்த பட்டாக்களை வழங்கும் போது அந்த நிலங்களை திருப்பி எடுத்துக் கொள்ளும் உரிமையுடன்தான் (with the right to resume the land) வழங்கினார்கள். அதே நிபந்தனையின்பேரில் மறுபடியும் பட்டாக்கள் வழங்குவதில் யாதொரு ஆக்ஷேபனையோ அல்லது எதிர்ப்போ இருக்கமுடியாது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஏனென்றால், இந்த குளம் கோர்வை நிலங்களுக்கு பட்டாக்கள் வழங்குவதன் மூலம் இப்பொழுது போடப்பட்டிருக்கிற தண்ணீர் தீர்வை, நிலத்தீர்வை, இவற்றை இன்னொரு மடங்கு அதிகரித்தாலும் அங்கேயுள்ள நிலச்சுவான்தார்கள் கொடுக்கத் தயாராய் இருக்கிறார்கள். பல்லாண்டு காலமாக இந்த விவசாயிகள் பாதிக்கப்பட்டு நிலம் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள் என்பதை இந்த மன்றத்திலே தெரிவிக்க நான் கடமைப்பட்டுள்ளேன். என்னுடைய பிரதேசம் கிழக்கு ராமனாதபுரம். அங்கே சிவகங்கை, ராமனாதபுரம், பரமக்குடி, திருவாடானை, திருப்பத்தூர், முதுகளத்தூருக்குப் பக்கத்தில் உள்ளபகுதி, ஆகிய பகுதிகளில் இந்த குளம் கோர்வை நிலங்களுக்கு பட்டா கொடுக்காததினால், விவசாயிகள் பாதிக்கப்பட்டு இருக்கிறார்கள். அதனால் இதை நல்ல முறையில் பரிசிலித்து ஜமீன் காலத்தில் கொடுத்தது போல மறுபடியும் அவர்களுக்கு பட்டாக்கள் வழங்கி, அதன் மூலமாக நிறைய நிலவரி வசூல் செய்வதற்கு உண்டான வாய்ப்பை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[திரு. செ. சீனிவாசன்] [4th July 1962

பரமக்குடியில் ஒரு தொழிற் பயிற்சிக்கூடத்தை அமைக்கப் போவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதைக்குறிந்து நான் மகிழ்சியுறுகிறேன். அதற்காக நிதியமைச்சர் அவர்களை பாராட்ட கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்த நீண்ட பட்ஜெட் உரையிலே கைத்தறி சம்பந்தமாக ஒன்றும் குறிப்பிடாதது கண்டு சிறிது மனவருத்தப்படுகிறேன். வரிவிதிக்கப்படவில்லை என்ற காரணத்தால் கைத்தறியைப்பற்றி சொல்லவில்லை என்று நினைக்கவேண்டியிருக்கிறது. இந்த நல்ல அறிக்கையிலே அது ஒரு குறையாக காணப்பட்டாலும் கூட கைத்தறியின் முன்னேற்றத்திலே இந்த சர்க்கார் கவனம் செலுத்தி வருகிறார்கள். கைத்தறி நெசவாளர்களுக்கு, இந்த தொழிலை நல்லமுறையிலே செய்வதற்கு உதவியாக பம்பர் பட்டும், செயற்கைப்பட்டும், அதிகமான அளவுக்கு தேவைப் படுகிறது. இப்பொழுது வழங்கும் முறை அவ்வளவு நல்லதாக இல்லையென்று புகார்கள் வந்திருக்கின்றன. இதை நன்கு கவனித்து நெசவாளர் கூட்டுறவு சங்கங்களுக்கு உடனடியாக இந்த பட்டு நூலை கொடுக்கவேண்டும் என்று நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொரு திட்டத்தின் மூலமாகக்கூட அதிகமாக நிலவருவாய் கிடைப்பதற்கு ஏது இருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள் கிறேன். சில இடங்களிலே கண்மாய் தண்ணீரை புன்செய் நிலங் களுக்குப் பயன்படுத்துகிறார்கள். நஞ்சை நிலங்களுக்குத் தேவையான தண்ணீர் இருக்கும் காலங்களில் இந்த புன்செய் நிலங்களுக்கும் நன்செய் நிலங்கள் போலவே தண்ணீரை உபயோகித்துக்கொள்ள அனுமதி கொடுப்பதன் மூலம் சர்க்காருக்கு நல்ல வருமானம் கிடைப்பதற்கு ஒரு வாய்ப்பு இருக்கும். ஆகவே இந்த திட்டத்தை சரிவர சர்க்கார் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

10-30 a.m.

* **திரு. சீ. இராமலிங்கம்** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ஆம் ஆண்டு நிதி நிலை அறிக்கையையொட்டி தொடரப் பட்டுள்ள விவாதத்தில் நானும் கலந்துகொள்ளக்கூடிய வாய்ப் பினை தந்ததற்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளு கிறேன். இவ்வளவு நீண்டதான விளக்கமான அறிக்கையை மிகவும் கவனத்துடன் தயாரித்துக் கொடுத்த கனம் நிதி அமைச்சர் அவர்களை நாம் மனமாற பாராட்டுகிறேன். எதிர்க் கட்சிக்காரர்கள் கூட இந்த அறிக்கை மிகவும் நீண்டதாக இருக் கிறது, அது விளக்கமாக இருக்கிறது என்ற முறையில் எடுத்துக் கொள்ளாதது அதை ஒரு குறைபாடாகவே எடுத்து இந்த மன்றத் தில் அதை ஒரு குறையாகச் சொன்னார்கள். இப்பொழுதுள்ள சமுதாயத்தில் இப்படிப்பட்ட அறிக்கை இந்த சமுதாயத்தின் அமைப்பில் நல்ல விளக்கமாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தான் இவ்வளவு நீண்டதாக இருக்கிறது. வளர்ந்து வருகிற சமுதாயத்தில் நல்ல முறையில் விளக்கங்கள் கொடுத்தால்தான் மக்களுக்கு நன்றாகப் புரியும் என்ற நோக்கத்துடன் இவ்வளவு

4th July 1962] [திரு. சீ. இராமலிங்கம்]

பெரிய, நீண்ட அறிக்கையை அவர்கள் தயாரித்திருக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். சாதாரணமாக ஒரு வீட்டிலே வரவு செலவு கணக்கை எழுதினாலும் கூட அது இருபது அல்லது முப்பது ஆண்டுகளுக்கு முன் எழுதியதைவிட இப்பொழுது அதிகமாகவே எழுதக்கூடியதாகத்தான் இருக்கும். அதைப்போலவே தான் ஒரு நாட்டின் வரவு செலவு கணக்கை எழுதும்போது, அதுவும் அதை விளக்கமாக எழுதும்போது இவ்வளவு பெரிய அறிக்கையை எழுத வேண்டியது தேவையாகத்தான் இருக்கும் என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக இந்த வரவு செலவு கணக்கைப்பற்றி பேசும் போது எதிர்கட்சி நண்பர் ஒருவர் இந்த அறிக்கையில் புள்ளி விவரங்கள் அதிகமாக இருக்கின்றன என்றும் அதை கனம் அமைச்சர் அள்ளித் தெளித்திருக்கிறார் என்றும் குறைப்பட்டுக் கொண்டார். உண்மையிலேயே புள்ளி விவரங்களை வேண்டு மென்றே அள்ளித்தெளிக்கவில்லை. உண்மையிலேயே அந்த எண்ணத்தில் அவர் அப்படி சொல்லவில்லை. 'புள்ளி', 'அள்ளி' என்று வார்த்தைகள் உபயோகப்படுத்துவதற்காகத்தான் அப்படி அவர் சொல்லி இருக்கிறார் என்று நினைக்கிறேன். அதனால் தான் அதை ஒரு குறையாக சொல்லி இருக்கிறார் என்று நினைக்கிறேன். ஆகவே புள்ளி விவரங்கள் வேண்டாதானவாகவோ அல்லது தேவையற்றதாகவோ இருக்கவில்லை என்பதை உணரவேண்டும் என்பதை இந்த இடத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த புள்ளி விவரங்களை இந்த வரவுசெலவு கணக்கில் எடுத்துக் காண்பிக்கப்பட்டிருப்பதனைத்தும் வேண்டியதுதான். சாதாரணமாக வெள்ளையர்கள் காலத்தில் இருந்ததைவிட கிராமங்களிலுள்ள மக்கள் இதைப்பற்றி நன்றாக புரிந்துகொள்ளக்கூடிய அளவில் இதைக் கொடுத்திருக்கிறார்கள். மக்களுக்கு அதிகப்படியாகத் தெரியக்கூடிய அளவில் இதை கொடுத்திருக்கிறார்கள். இந்தக் காலத்தில் எந்த குக்கிராமத்தை எடுத்துக்கொண்டாலும் அவைகள் நல்ல முறையில் காட்சி அளிக்கின்றன. ஒவ்வொரு கிராமமும் சுகாதார முறையிலும் சரி, குடிதண்ணீர் வசதியிலும் சரி, கல்வி வசதியிலும் சரி நல்ல முறையில் காட்சி அளித்து வருகின்றன. முன்பெல்லாம் இப்படி காட்சி அளிக்கவில்லை. இப்பொழுது நல்ல காட்சி அளிக்கிறது. அதற்குக் காரணம் இப்படி அறிக்கையில் புள்ளி விவரங்கள் கொடுப்பதால் தான் கிராம மக்கள் அவைகளைப் புரிந்துக்கொண்டு தங்களுடைய தேவைகளைக் கேட்டு பெற்றுக்கொள்ளுகிறார்கள். அதற்கு இந்தப் புள்ளி விவரங்கள் தேவையாக இருக்கிறது என்பதை இந்த சபையில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இப்பொழுது வளர்ந்து வருகின்ற சமுதாயத்தில் நமக்கு தேவை அதிகமாகிக்கொண்டு வருகிறது. அதுவும் நாளுக்குநாள் அதிகமாகிக்கொண்டு வருகிறது. ஆனால் அதே சமயத்தில் அதை பூர்த்தி செய்து கொள்ளக்கூடிய நிலையில் நாடு இப்பொழுது இல்லை. இப்போழுதுள்ள சூழ்நிலையின் காரணமாக நம்முடைய தேவைகளை நாமே பூர்த்தி செய்து கொள்ள முடியவில்லை. ஏனென்றால் நாளுக்குநாள் தேவைகள் அதிகரித்துக்கொண்டே போகின்றன. அதை பூர்த்தி செய்துக்கொள்ளக் கூடிய வாய்ப்பு

[திரு. சீ. இராமலிங்கம்] [4th July 1962

நமக்கு இல்லை. அதை பூர்த்தி செய்யவேண்டும் என்று நினைக்கும் போதுதான் நிதி நிலையில் துண்டு விழுகிறது. மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்று நினைக்கும்போது நிதி நிலையில் துண்டு விழுகிறது. அதற்குக்காரணம் செலவு அதிகமாக ஆகிறது என்பதுதான். துண்டு விழுவதை சரிகட்டுவதற்கு வெளி நாடுகளிலிருந்து கடன் வாங்கினால் கடன்காரர்கள் என்று நமது எதிர்க் கட்சி நண்பர்கள் சொல்லுகிறார்கள். வாங்கிய கடனை எப்படித் திருப்பிக்கொடுக்கப்போகிறீர்கள் என்று கேட்கிறார்கள். அதனால் தான் நாம் நமது உற்பத்தியை அதிகப்படுத்திக்கொள்ளவேண்டிய நிலையில் இருக்கிறோம். நமது கௌரவத்தை நாம் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்ற நிலைமையில் தான் நாம் மக்களிடமிருந்து அதை வாங்கிக்கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. நமது சக்திக்குத் தகுந்த முறையில் வாங்கிக்கொண்டு வருகிறோம். அப்படி வாங்கி நமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டு வருகிறோம். அதைத் திருப்பிக் கொடுக்கத்தான் வரி போடுகிறார்கள். ஆனால் எதிர்கட்சிக்காரர்கள் வரி கூடாது வரி கூடாது என்று சொல்லுகிறார்கள். ஆனால் அவர்கள் ஆட்சிக்கு வந்தால் ஒருகால் வரி போடாமல் இருப்பார்களோ என்னவோ? இப்படிப்பட்ட ஒரு நம்பிக்கை எனக்கு ஏற்படுகிறது. ஒருகால் அவர்கள் ஆட்சிக்கு வந்தால் இருக்கக்கூடிய வரிகள் எல்லாவற்றையுமே நீக்கி விடுவார்கள்போல் இருக்கிறது. ஆனால் அப்படி நீக்கி விட்டு அவர்கள் செலவு செய்வதற்கு என்ன செய்வார்கள் என்றும் தெரியவில்லை. அதனால் அவர்கள் ஆட்சிக்கு வந்தவுடன் அவர்கள் வரியை நீக்கி விட்டு அதற்கு பதிலாக மக்களை நன்கொடையாகக் கொடுங்கள் என்று கேட்டு வாங்குவார்களோ என்று தோன்றுகிறது. இப்படி வரி என்று சொல்லாமல் 'டெக்னிக்களாக' நன்கொடை என்று சொல்லி வாங்கி வருவார்களோ என்று தோன்றுகிறது. வரி வேண்டாம் வரி வேண்டாம் என்று சொல்லக் கூடியவர்கள் இந்த முறையைக் கையாள்வார்களோ என்று தோன்றுகிறது. ஏனென்றால் அவர்கள் தேர்தல் காலங்களில் அவர்கள் ஆட்சிக்கு வந்தால் வரியை எல்லாம் எடுத்துவிடுவோம் என்று சொல்லி வந்தார்கள்.

எனது தொகுதியாகிய முசிரியைப்பற்றி கொஞ்சம் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். எனது தொகுதி காவிரிக்கு வட கரையில் இருக்கிறது. பக்கத்தில் காவிரி ஆறு பாய்ந்தாலும் குடி தண்ணீர் கஷ்டம் அதிகமாக இருக்கிறது. எனது தொகுதிக்கு பக்கத்தில் நல்ல வாய்க்கால்கள் வேறு ஓடுகின்றன. சமீபத்தில் காவிரியில் வந்த வெள்ளத்தின் காரணமாக எனது பகுதிக்கு ஆபத்து வந்து விடுமோ என்ற பயம் இருந்தது. அங்கு வெள்ளம் வந்து தண்ணீர் எல்லாம் விரயமாகி விட்டது. அப்படி இருந்தும் அங்கு தண்ணீர் கஷ்டம் இருக்கிறது. அதனால் கொஞ்சம் செலவு செய்தால் தண்ணீர் வசதி செய்து கொடுக்கலாம். அங்கு ஏற்கனவே ஒரு திட்டத்தைப்பற்றி சொல்லப்பட்டு வருகிறது. அதாவது ஜேடர் பாளையம் திட்டம். அதை எடுத்து பூர்த்தி செய்து கொடுத்தால் வெள்ளத்தில் வரும் தண்ணீரை தேக்கி வைத்துக் கொண்டு தண்ணீர் கஷ்டத்தை நிவர்த்தி செய்து கொள்ளலாம். சில சமயங்களில் தண்ணீர் தட்டு ஏற்படுவதையும் தடுத்து

4th July 1962] [திரு. சீ. இராமலிங்கம்]

கொள்ளலாம். ஆகவே, அந்த ஜேடர் பாளையம் திட்டத்தை எடுத்து பூர்த்தி செய்து கொடுக்கும்படியாக கேட்டுக்கொள் கிறேன்.

அடுத்தபடியாக எங்கள் பகுதிக்கு பெண்கள் பயிற்சி பள்ளி தேவையாக இருக்கிறது. இப்பொழுது திருச்சி மாவட்டத்தில் ஒன்று இருக்கிறது. பெண்கள் பயிற்சி பள்ளிகள் அதிகம் தேவை என்று கனம் அங்கத்தினர் திருமதி ராஜாத்தி குஞ்சிபாதம் அவர்கள்கூட குறிப்பிட்டார். திருச்சியில் ஒரு பயிற்சிப் பள்ளி இருந்தாலும் எங்கள் பகுதியில் ஒன்றை அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்படி பெண் கல்விக்கு என்று அதிகப் படியான சலுகைகள் கொடுத்தால் எவ்வளவோ பெருமையாக இருக்கும். ஆகவே அங்கு அரசாங்கமோ அல்லது தனியார் துறையில் யாராவது அமைக்க முன்வந்தால் அவருக்கு உதவி செய்யவோ முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே எந்த விதத்திலாவது அங்கு ஒரு பெண்கள் பயிற்சி பள்ளியை அமைக்க சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது ஒவ்வொரு பஞ்சாயத்திலும் குடி நீர்த் திட்டத் தை நிறைவேற்றிக்கொண்டு வருகிறார்கள். குடி நீருக்கு வேண்டிய கிணறுகள் தோண்டப்படுகின்றன. அதற்கு அடுத்தபடியாக, கால் நடைகளுக்கு வேண்டிய குடி நீர்த் திட்டங்கள் தேவைப்படு கின்றன. சாதாரணமாக கிராமங்களில் சிறு சிறு குளங்கள் இருக்கும். அவைகளிலிருந்து கால்நடைகள் தண்ணீர் குடித்துச் சிரமப் பரிகாரம் செய்துகொள்வதுண்டு. சின்னஞ் சிறு கிரா மங்களில் சிறிய குளங்கள் இருக்கின்றன. அவற்றைப் பஞ்சாயத் துக்கள் சரிவர பராமரிக்க முடியவில்லை. காரணம், அவர்களிடம் போதுமான நிதி வசதி இருப்பதில்லை. கால்நடைச் செல்வங்கள் சரியான முறையில் பராமரிக்கப்பட்டு, அவை அபிவிருத்தி அடைய வேண்டுமானால், அவற்றுக்குத் தண்ணீர் வசதி கிடைக்கும் பொருட்டு ஆங்காங்கே இருக்கும் குளங்களைச் செப்பனிட்டுப் பராமரிக்க வேண்டும். அதற்குப் போதுமான நிதி வசதியை பஞ்சாயத்துக்களுக்கு அரசாங்கம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இந்த மன்றத்தில் பேசும்படியான ஒரு வாய்ப்பை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்ததற்கு நன்றியைத் தெரிவித்து என்னுடைய உரையை இத்துடன் முடிக்கின்றேன்.

* **திரு. கரு. சீமைச்சாமி :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையின் பேரில் என் னுடைய கருத்துக்களை எடுத்துரைக்க விரும்புகிறேன். அரசாங் கம் போட இருக்கும் புது வரிகளைப் பற்றியும், செய்யப் போகும் அரும் பெரும் காரியங்களைப் பற்றியும் கனம் நிதி அமைச்சர் அவர் கள் ஐம்பது பக்கங்களிலே எடுத்துரைத்தார். பட்ஜெட்டிலே துண்டு விழும் பற்றுக்குறையைச் சரிக்கட்ட வரி போடுவது என்பது நியாயமானதே. அது ஒரு இலகுவான காரியமும் கூட. மின்சாரத்திற்கும் விவசாயத்திற்கும் வரி போடுவதற்கு முன்னால், அதை மக்களால் கொடுக்க முடியுமா என்பதை பரிசீலனை செய்து பார்த்து, இந்த வரியைப் போட்டிருந்தால் அதை நாங்கள் வர

வேற்றிருக்கலாம். 'வருமானத்தைப் பெருக்க வழியில்லை, ஆகவே வரி போடுகிறோம்' என்ற முறையில் விவசாயிகள் மீது வரிப் பளுவைச் சுமத்தியிருக்கிறார்கள். விளை பொருள்களின் விலை உயர்ந்திருப்பது உண்மையே. ஆனால், அதே சமயத்தில் விவசாயிகளுக்கு ஏற்படுகின்ற கஷ்டங்களையும் கவனிக்க வேண்டும். விவசாயம் செய்கின்றபோது, கூலி ஆட்கள் கிடைக்காமல் விவசாயிகள் படும் அல்லலைப் பார்த்து ஏற்பாடு செய்திருந்தால், நிதி நிலை அறிக்கையை நாங்கள் வரவேற்றிருக்கலாம். மக்கள் வாங்கும் சக்தி குறைந்து, தவித்துக் கொண்டிருக்கும்போது, அவர்கள் மீது இந்த வரிப் பளுவைச் சுமத்துவது நல்லது அல்ல என்று நான் கூறிக் கொள்கிறேன்.

விவசாயிகள் இந்த நாட்டின் முதுகெலும்பு போன்றவர்கள். ஆனால், அவர்கள் பேசத் தெரியாத ஊமைகள். விவசாயிகள் இந்த நாட்டின் செல்வத்தைப் பெருக்கக் கூடியவர்கள். ஆனால், அவர்களுக்கு இழைக்கப்படும் தீங்கு இன்னது என்று அவர்களுக்குத் தெரிந்திருந்தும் கூட, அவர்கள் அதைத் தெரிவிக்கக் கூட சக்தி இல்லாமலிருக்கிறார்கள். விவசாயிகள் இந்த நாட்டின் அஸ்திவாரம். அப்படியிருந்தும், விவசாயிகள் ஊமைகளாகவும், சக்தி இல்லாதவர்களாகவும் இருக்கிறார்கள் என்பதற்காக அவர்கள் மீது எந்த வரியை வேண்டுமானாலும் சர்க்கார் திணித்துவிடலாம் என்று நினைக்குமேயானால், அவர்கள் குமுறல் என்ன ஆகும் என்பதை என்னால் சொல்ல முடியாது.

கடந்த முப்பது ஆண்டுகளாக நில வரியிலே எந்தவிதமான மாற்றமும் ஏற்படவில்லை என்று அமைச்சர் அவர்கள் நிதி நிலை அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால், அதை நான் ஒப்புக்கொள்ள போவதில்லை. 1958-ஆம் வருஷத்திய பஞ்சாயத்துச் சட்டத்தின் 119 செக்ஷனில் (3) வது பிரிவில், பஞ்சாயத்துக்களுக்கும் மேஜர் பஞ்சாயத்துக்களுக்கும் வரி போடும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்படி, பஞ்சாயத்துக்கள் ஏக்கர் ஒன்றுக்கு ஐந்து ரூபாயிலிருந்து பத்து ரூபாய் வரையில் கிராமப் பகுதிகளின் வளர்ச்சிக்காக வரி போட்டிருக்கிறார்கள். பஞ்சாயத்து யூனியன்கள் நிலங்களின் மேல் உபரி வரியாக 'செஸ்' விதித்திருக்கிறார்கள். மாநில அரசாங்கமும் வரிகள் போட்டிருக்கிறார்கள். விவசாயிகளைக் கறவை மாடுகளாகக் கருதி அவர்களிடமிருந்து மேலும் மேலும் வரியைக் கறந்துகொண்டிருக்கிறார்களா என்று நான் கேட்கிறேன். விவசாயிகளிடமிருந்து எவ்வளவு தான் கறந்துகொண்டிருப்பது? விவசாயிகளை ஊக்குவிக்கவேண்டிய நேரத்தில், அவர்கள் மீது இந்த வரிப் பளுவைச் சுமத்தினால், அவர்கள் தங்களுடைய துன்பத்தைத் துடைக்க, துயரை நீக்க வேறு வழி இல்லை என்ற நிலையில் அவர்கள் எல்லோரும் ஒன்றுகூடி இந்த நாட்டிலே வரிகொடா இயக்கத்தைப் பெரிய அளவில் ஆரம்பித்தாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை என்று நான் இந்த மாமன்றத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மதிப்பிற்குறிய நிதி அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு கடந்த கால நிகழ்ச்சியொன்றை நான் கொண்டு வர ஆசைப்படு

4th July 1962] [திரு. கரு. சீமைச்சாமி]

கிறேன். வெள்ளைக்காரன் இந்த நாட்டை ஆண்டபோது, விவசாயிகளுக்கு அவர்களால் இழைக்கப்பட்ட அநீதியை எதிர்த்து பர்தோலியில் விவசாயிகள் ஒன்றுகூடி ஒரு பெரிய சத்தியாகிரகத்தை நடத்தினார்கள். ஆனால் அவர்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தையும், துன்பத்தையும் நிதி அமைச்சரும் மற்ற காங்கிரஸ்காரர்களும் உணராமலிருக்க முடியாது. அதையெல்லாம் அவர்கள் உணர்ந்திருந்தும் வரிப் பளுவை விவசாயிகள் மீது சுமத்தியிருப்பதானது அவர்களை மேலும் மேலும் அமுக்கி, அவர்களை எந்த விதமான முன்னேற்றதிற்கும் கொண்டுவராமல் தடுப்பதற்காகத்தான் என்று நான் கூற வேண்டியிருக்கிறது. தொழிலாளர்கள் தங்களுடைய குறைகளை நீக்கிக் கொள்வதற்காக வேலை நிறுத்தம் செய்கிறார்கள். சர்க்கார் அலுவலங்களில் வேலை பார்க்கிறவர்கள் தங்களுடைய கோரிக்கைகளை வற்புறுத்துவதற்காக போராட்டம் நடத்துகிறார்கள். ஆனால், பாமர விவசாய மக்கள் என்ன செய்துவிடப் போகிறார்கள் என்று, ஆட்சியில் உள்ளவர்கள் நினைக்கலாம். விவசாயிகள் தங்களுடைய துயரைத் துடைக்க, இன்னல்களை நீக்கிக்கொள்ள, கருத்துக்களைத் தெரிவிக்க, அமைதியான முறையில் போராட்டத்தில் இறங்கலாம். அது இங்கிலாந்தில் 1688-ஆம் ஆண்டில் நடந்த ரத்தம் சிந்தாத பெரிய புரட்சி மாதிரியாக இருக்கலாம். விவசாயிகள் தங்களுடைய வீட்டுக்குத் தேவையான அளவுக்கு உணவுப் பொருள்களை நிலத்தில் உற்பத்தி செய்துவிட்டு, மீதியுள்ள நிலங்களைத் தரிசாகப் போட்டுவிட்டுப் பேசாமல் இருந்து, அதையே ஒரு எதிர்ப்பாகக் காட்டலாம். 'உணவுப் பொருள்களைப் பெருக்கவேண்டும், நாளுக்கு நாள் பெருகி வரும் ஜனத்தொகையைக் கட்டுப்படுத்தவேண்டும்' என்று அரசாங்கமும் பஞ்சாயத்து யூனியன்களும் அதிகமாகப் பிரசாரம் செய்யும் இந்த நேரத்தில் அத்தகைய ஒரு எதிர்ப்பை அரசாங்கம் தாங்க முடியுமா ? அரசாங்கத்திற்கு இது ஒரு தலைவலியாக இருக்கும் எனக் கூறி, இதை நிதி அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்து பார்த்து, விவசாயிகளுக்கு இழைக்கப்படும் இன்னல்களைத் துடைத்து, வரியை தளர்த்த முன்வரவேண்டும் என்று நான் நிதி அமைச்சரை வேண்டி விரும்பிக் கேட்டுக் கொள்கின்றேன்.

என்னுடைய மாவட்டமாகிய இராமநாதபுரம் பல துறைகளில் பின் தங்கியும்—முன்னேற்றமும் இல்லாமல் இருக்கிறது. அது நீர் வளம் இல்லாத பகுதி, வானம் பார்த்த பகுதி என்பதை இந்த மாமன்றத்தில் இருக்கும் எல்லாக் கனம் அங்கத்தினர்களும் ஒப்புக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன். வைகை அணையினால் கிழக்கு இராமநாதபுரம் பகுதி செழிப்படையும் என்று முன்பு மந்திரியாக இருந்த இராமநாதபுரம் மன்னர் உறுதி கூறினார்கள். ஆனால், அவர்கள் இப்போழுது இந்த அமைச்சரவையில் இல்லை. வைகை அணையைக் கட்டினால் பிற்பட்ட நிலையில் இருக்கும் பல பகுதிகளுக்குத் துன்பம் ஏற்படும்' என்று அப்போதே நாங்கள் தெரிவித்தோம். ஆனால், மாஜி மந்திரி அவர்கள் அப்பொழுது உறுதி அளித்ததின் பேரில், வைகை அணையைக் கட்டுவதற்கு நாங்கள் அனுமதி தந்தோம். அதன் பிறகுதான் அவர்கள் அந்த அணையைக் கட்ட ஆரம்பித்தார்கள்.

[திரு. கரு. சிமைச்சாமி] [4th July 1962

ஆனால், வைகை அணையில் தேக்கப்படும் தண்ணீர் அளவு என்ன? வைகை நீரின் அளவு என்ன? பெரியாற்று நீரின் அளவு என்ன? இராமனாதபுரம் மாவட்டத்திற்கு வைகையிலிருந்து திறந்துவிடப்பட்டால் கிடைக்கும் நீரின் அளவு என்ன? வருஷா வருஷம் எந்த அடிப்படையிலே தண்ணீர் அளவு நிர்ணயிக்கப்படு கிறது? எந்த அளவு இராமனாதபுரம் மாவட்டத்திற்குக் கொடுக்கப் படுகிறது என்பதைக் கவனித்து பார்த்தால் வைகை அணை கட்டப் படுவதற்கு முன்னால் கொடுக்கப்பட்டுவந்த தண்ணீரைக் காட்டிலும், கட்டப்பட்டதற்கு பின்பு அதிகமாகத் தண்ணீர் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்றால், நிச்சயமாக இல்லை என்று தான் சொல்லமுடியும் காரணம் வைகை அணை கட்டப்படுவதற்கு முன்பு ஏராளமான நிலங்கள் விவசாயம் செய்ய தண்ணீர் வசதி ஆற்றின் மூலம் கிடைத்தது. ஆனால், அணை கட்டிய பிறகு ஸ்பெஷல் ரிலீஸ் என்று வேறு பகுதிகளுக்குத் தண்ணீர் கொண்டு செல்லப் படுகிறது என்று நான் நிச்சயமாகச் சொல்ல முடியும். 'இருபதா யிரம் ஏக்கர் அதிகமான பகுதி பூமிக்கு, கிழக்கு இராமனாதபுரம் பகுதியில் பயன் அளிப்பதற்கு இந்த ஏற்பாடு செய்யப்படுகிறது' என்று அப்பொழுது சொல்லப்பட்டது. ஆனால், அந்த 20,000 ஏக்கருக்கு பதிலாக மந்திரி கனம் திரு. கக்கன் அவர்களுடைய மேலூர் தொகுதிக்கும் திருமங்கலம் தாலுக்காவிற்கும் பயன் படும் வகையில் அந்தத் தண்ணீர் கொண்டு செல்லப்படுகிறது என்று நான் நிச்சயமாகச் சொல்ல முடியும். ஆகவே, கிழக்கு இராமனாத புரம் பகுதி வைகை அணைக்கட்டினால் பாதிக்கப்பட்டிருக்கிறது. கிழக்கு இராமனாதபுரம் பகுதி இதனால் எந்த விதமான முன் னேற்றம் இல்லாமல் தடுக்கப்படுகிறது. ஆகையால் கிழக்கு இராமனாதபுரம் பகுதி மக்கள் நல்ல முறையில் வாழ்வதற்குப் பெரியதொரு திட்டம் வேண்டுமென்றும் வைகை அணையினால் திறந்து விடப்படும் தண்ணீரை கிழக்கு இராமனாதபுரம் பகுதிக்கு பயன்படும் வகையில் வழி செய்யுமாறு கனம் அமைச்சர் அவர் களை நான் கேட்டுக்கொள்கிறேன். "மாஸ்டர் ப்ளான் பார் ஈஸ்ட் இராமனாதபுரம் டிஸ்ட்ரிக்ட்" வேண்டுமென்று நான் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

சேது சமுத்திரம் திட்டம், கல்லாறு திட்டம், இடுக்கி திட்டம், இப்படிப்பட்ட திட்டங்களை நிறைவேற்றி கிழக்கு இராமனாதபுரம் பகுதியைச் செழிப்படையச் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன். 27 கோடி ரூபாய்க்குமேல் செலவிட்டு 26 ஆயிரம் ஏக்கருக்குப் பாசனவசதி தரக்கூடிய பரம்பிக்குளம், ஆளியார் திட்டத்தை நிறைவேற்றுகின்றபோது, பத்து கோடி ரூபாய் செலவில் இரண்டரை லட்சம் ஏக்கருக்குப் பாசன வசதி தரக்கூடிய இடுக்கி திட்டத்தை கனம் நிதி அமைச்சர் அவர்களும், கனம் முதல் அமைச்சர் அவர்களும் கேரள அரசுடன் கலந்து பேசி, தகுந்த நடவடிக்கை எடுத்து, நிறைவேற்றிக் கொடுத்தால் கிழக்கு இராமனாதபுரம் பகுதி மக்கள் வாழ்த்துவார்கள், போற்று வார்கள் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பெரியாற்றில் உபரி நீரை வைகைக்குக் கொண்டுவந்து, திருமங்கலம் தாலூகாவிலே உரப்பனூர் கால்வாய் வழியாகக் கொண்டுவந்து குண்டாற்றில் விட்டால் முதுகுளத்தூர், திருச்

4th July 1962] [திரு. கரு. சீமைச்சாமி]

சுளி, கமுதி முதலிய பகுதிகளும், மதுரை மாவட்டத்தில் பல பகுதிகளும் செழிப்படைய வாய்ப்பும் வசதியும் இருக்கிறது. ஆகவே, இந்த பெரிய திட்டங்களை அமைச்சர் அவர்கள் நிறைவேற்றிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

பஞ்சாயத்து யூனியன்களைப்பற்றி கனம் நிதி அமைச்சர் அவர்கள் நிதிநிலை அறிக்கையில் கூறுகிறபோது, எல்லா வசதிகளும் கொடுக்கப்படவேண்டுமென்பதற்காக நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது, அவர்களுக்கு அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன' என்று சொல்லியிருக்கிறார். அப்படி எனக்குத் தெரியவில்லை. எந்த இடத்திலே பஞ்சாயத்து சேர்மனுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது? எந்த இடத்திலே பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது? மாவட்ட போர்டு கலைக்கப்பட்டவுடனே இந்த அதிகாரம் கமிஷனருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதா? அல்லது ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்து யூனியன் சேர்மனுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறதா? அனேகமாக எல்லா பஞ்சாயத்து யூனியன்களிலுமே பிளாக் டெவலப்மென்ட் ஆபிசர்களும் சேர்மன்களும் நல்ல நிலையில் இல்லாத காரணத்தால் பல கோளாறுகள் ஏற்பட்டு பஞ்சாயத்து யூனியன்களிலே திறமையாக வேலை நடைபெறாத நிலை இருக்கிறது என்பதை கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். பிளாக் டெவலப்மென்ட் ஆபீசர்கள் ரெவினியூ டிபார்ட்மென்டிலிருந்து வருகிற காரணத்தால், அவர்கள் ரெவினியூ டிபார்ட்மெண்டில் தாசில்தாராக இருந்த காரணத்தால், அவர்கள் எப்படி அங்கு விலேஜ் ஹெட்மென், ரெவினியூ இன்ஸ்பெக்டர், குடியானவர்கள் இவர்களையெல்லாம் நடத்தினார்களோ அது போலவே பஞ்சாயத்து யூனியன்களிலும் வந்து பஞ்சாயத்து தலைவர்களை விரட்டுகிறார்கள்—மிரட்டுகிறார்கள். மாவட்ட அபிவிருத்தி கவுன்சிலில் சர்க்கார் சம்பளம் வாங்கும் கலெக்டர்கள் சேர்மனாக அந்த கவுன்சிலுக்கு இருக்கிறார்கள். மாநில பஞ்சாயத்து கன்சல்டேட்டிவ் கமிட்டியின் கவுன்சிலுக்குத் தலைவராக நமது முதல் அமைச்சர் அவர்கள் இருக்கிறார்கள். அதன் காரிய தரிசியாக திரு. வெங்கடாஜலபதி இருக்கிறார். ஆனால் மாவட்டங்களுக்கு மட்டும் சேர்மனாக கலெக்டர்கள் இருக்கிறார்கள். இந்த வேறுபாடு இல்லாமல் மாவட்ட கவுன்சில்களுக்கும் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்து சேர்மன் ஒருவரே சேர்மனாக இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* **திரு. ஆர். செங்காலியப்பன்:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ஆம் ஆண்டினுடைய நிதிநிலை அறிக்கையைப் பற்றி ஒருசில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்த ஆண்டு அறிக்கை நல்லமுறையில் தயாரிக்கப்பட்டு நமக்குச் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

இந்த அறிக்கையில் உள்ள புது வரி இனங்களை நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். இது சிறிய விவசாயிகளுக்கு ஒரு பளுவாக இருக்கிறது என்பதை நாம் ஒத்துக்கொள்ள

[திரு. ஆர். செங்காலியப்பன்] [4th July 1962

வேண்டும். ஆற்றுப்பாசன வசதி இல்லாத பல பிராந்தியங்களிலே இன்று விவசாயிகள் கிணறுகளிலிருந்து தண்ணீர் இரைத்துப் பயிர் செய்கிறார்கள். கிணறுகளிலிருந்து தண்ணீர் இறைப் பதற்கு மின்சார பம்பு செட்டுகள் வைத்திருக்கக்கூடிய இடங்கள் இருக்கின்றன. அவர்களுக்கு மின்சார வரி போட்டிருக்கிறோம். கிணற்றில் நீர் இல்லாத காலங்களிலும்கூட அவர்கள் 'மினிமம் சார்ஜ்' கட்டும்படியான நிலைமை இருக்கிறது. ஹார்ஸ் பவர் ஒன்றுக்கு 50 ரூபாய் என்று மினிமம் சார்ஜ் இருப்பது அவர் களுக்கு மிகவும் தொல்லையாக இருக்கிறது. ஐந்து ஹார்ஸ் பவர் வைத்திருக்கக்கூடிய ஒரு சாதாரண விவசாயிகூட 250 ரூபாய் கட்டவேண்டிய நிலை ஏற்படுகிறது. இதை அரசாங்கம் நன்றாகச் சிந்தித்து இந்த மினிமம் சார்ஜை எடுத்துவிடும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக இன்று பல்லடம் தொகுதி மிகவும் வறட்சியான பிரதேசம். அங்கே இருக்கும் ஏழை விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அந்தப் பகுதி பயன் அடையவேண்டுமென்று மேல் பவானி திட்டம் என்ற ஒரு திட்டத்தை அரசாங்கத்தில் சர்வே செய்திருக்கிறார்கள். ஆனால் எந்தவித காரணத்தைக் கொண்டோ கீழ்பவானி வேறுபக்கத்தில் திருப்பிவிடப்பட்டிருக் கிறது. இதுபற்றி அரசாங்கத்தின் ஆலோசனையும் இருந்து வருவதாகத் தெரிகிறது.

இந்தத் திட்டத்தை நல்லமுறையில் நிறைவேற்றினால் கோவை தாலூகா, பல்லடம் தாலூகா போன்ற பஞ்சமான பிரதேசங்கள் செழிப்படைவதற்கு வாய்ப்பு ஏற்படும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். அதேபோன்று கோயம்புத்தூரிலிருந்து நொய்யல் ஆறு வருகிறது. அந்த ஆற்றிலே மழை காலங்களில் ஓடும் தண்ணீர் வீணாக சமுத்திரத்திற்குப் போய்ச் சேருகிறது. கோயம் புத்தூருக்குப் பக்கத்தில் பெரிய அணையைக் கட்டி வரக்கூடிய தண்ணீரை அங்கே தேக்கினால் பல்லடம், கோயம்புத்தூர் போன்ற தாலூகாக்களுக்கு நல்ல முறையில் தண்ணீர் பாசனத்திற்குக் கிடைக்கும். அங்கே இருக்கும் கிணறுகளில் தண்ணீர் ஊற்றம் அதிகமாகும். மோட்டார் பம்பு செட்டுகள் மூலம் இறைத்து நல்ல முறையில் சாகுபடி செய்வதற்கு வசதி ஏற்படும் என்று சொல்லிக் கொள்கிறேன்.

விவசாயிகளுக்கு சிமிண்ட், உரம் போன்றவைகள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. பத்துப் பதினைந்து மைல்களுக்கு அப்பால் உள்ள ஊருக்குச் சென்று, காத்திருந்து உர மூட்டைகள் கேட்டால் இல்லையென்று சொல்லி விடுகிறார்கள். இதனால் அவர் களுக்கு மிகுந்த கஷ்டம் ஏற்படுகிறது. ஆகவே சிமிண்ட், உரம் போன்றவைகளை அந்த அந்தப் பிராந்தியங்களில் இருக்கக்கூடிய பஞ்சாயத்து யூனியன் மூலமாக கொடுத்தால் விவசாயிகளுக்கு நன்மை ஏற்படும். அதே மாதிரி கோயம்புத்தூர் ஜில்லாவை பொறுத்த மட்டிலும் அது மிகப் பெரிய தொழில் பிராந்தியம். பெரும்பான்மையான தொழிலாளர்கள் வசிக்கக்கூடிய ஏரியா. என்ஜினியரிங் தொழிலாளிகள் நிறைந்த இடம். அங்கு ஒவ்வொரு ஆண்டும் மின்சாரப் பற்றாக்குறை காரணமாக பல தொழி

4th July 1962] [திரு. ஆர். செங்காலியப்பன்]

லாளர்கள் மாதத்தில் பல நாட்கள் வேலை கிடைக்காமல் கஷ்டப் படுகிறார்கள். அவர்கள் ஒரு மாதத்தில் 26 நாட்கள் வேலை செய் தாலும் கூட போதாது சம்பளம். அப்படி இருக்கும்போது மின்சாரப் பற்றுக்குறை காரணமாக வேலைநாட்கள் குறைக்கப் படுகிறபோது அவர்கள்பாடு மிகவும் கஷ்டமாகப் போகிறது. அதுவும் 80% மின்சார வெட்டு என்று வந்தால் அவர்கள் தவிக்கிறார்கள். ஆகவே அந்தப் பிராந்தியத்தில் அணுசக்தி மின்சார நிலையத்தை ஏற்படுத்தி நிரந்தரமாக மின்சார வெட்டு இல்லாமல் அந்தத் தொழிலாளர்களைப் பாதுகாக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். இதையும் அரசாங்கம் கவனித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதே மாதிரியாக தொழிலாளர்களுக்கான இன்ஷூரன்ஸ் வசதி அரசாங்கத்தில் நடந்து வருகிறது. முதலாளிகளுடைய ஒத்துழைப்பினால் இந்தத் திட்டம் கோவையில் வெற்றிகரமாக நடந்து கொண்டு வருகிறது. ஆனால் வடநாட்டில் எல்லாம் வெற்றி கரமாக நடக்க முடியாமல் போய்விட்டது. வெற்றிகரமாக நடந்து வரும் நம்முடைய பிரதேசத்திலாவது தொழிலாளர்களுக்கு மாத்திரம் என்று இல்லாமல் தொழிலாளர்களுடைய குடும்பங் களுக்கும் விஸ்தரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். முதலாளிகள் போடுகிற சந்தாத் தொகை நிறைய இருக்கிறது. இப்படி அதிகப்படியான பணம் இருக்கிற காரணத்தினால் உடனடி யாக இதை விஸ்தரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதே சமயத்தில் கோயம்புத்தூரில் சர்க்கார் ஆஸ்பத்திரி இருக்கிறது. கோவை தொழிலாளர்கள் நிறைந்த பிரதேசமாத லால் ஆஸ்பத்திரியில் இடவசதி குறைவாக இருக்கிறது. நான் அசெம்பளி மெம்பரானவுடன் அடிக்கடி அங்கே போகும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. பலதடவை சென்றபோது பார்த்திருக் கிறேன். படுக்கை நெருக்கடி அதிகமாக இருக்கிறது. மேலும் அட்மிஷன் செய்துகொண்டே இருக்கிறார்கள். காரணம் சீக்காளி கள் வந்துகொண்டே இருக்கிறார்கள். ஆகவே உடனடியாக அங்கே அதிகப்படியான படுக்கை வசதியை ஏற்படுத்திக்கொடுத்து அங்கு இருக்கும் தொழிலாளர்களுக்கும், பொதுமக்களுக்கும் வசதி செய்துகொடுக்கவேண்டுமென்று அரசாங்கத்தை நான் கேட்டுக் கொள்கிறேன். 11-00 a.m.

அடுத்தபடியாக, இப்போது 1,200 ரூபாய்க்கு மேல் வருமானம் பெறக்கூடியவர்கள் பள்ளிக்கூடத்திற்குச் சம்பளம் கட்ட வேண்டு மென்று இருக்கிறது. இன்று ஒரு தொழிலாளியை எடுத்துக் கொண்டாலும் மாதம் 120, 150 சம்பளம் வாங்குகிறார்கள். குடும்பத்தில் 4, 5 பிள்ளைகள் இருந்தால் ஒரு குழந்தைக்குச் சரா சரியாக 5 ரூபாய் சம்பளம் கட்டுவது என்றால் கூட மாதம் 25 ரூபாய் இதற்கே செலவாகிவிடும். அவர்கள் டவுனில் இருந்தால் வீட்டு வாடகை மாதம் 20 ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, 1,200 என்பதை 2,400 ரூபாய் என்று அதிகப்படுத்தி ஏழை மக்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்த நிதிநிலை அறிக்கையை வரவேற்று என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

[4th July 1962

* **திரு. கி. நாராயணசாமி பிள்ளை :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையைக் கனம் நிதியமைச்சர் அவர்கள் மிகச் சிரிய முறையிலே தயாரித்துக் கொடுத்திருக்கிறார். இதற்காக நாம் நம்முடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப் பட்டிருக்கிறோம். எதிர்க்கட்சியில் சில பேர் மகாத்மா காந்தியின் கொள்கைகளை எடுத்துப் பேசினார்கள். காந்திஜி ஏழைகளின் கண்ணீர்த் துளிகளை அகற்ற வேண்டுமென்று சொன்னார். அதையேதான் நம்முடைய அரசாங்கமும் பின்பற்றி வருகிறது. நமது நாடு விவசாய நாடு. சுதந்திரம் கிடைத்த பிறகு பல ஐந்தாண்டுத் திட்டங்களைப் போட்டு விவசாயத் துறையிலும் தொழில் துறையிலும் முன்னேற்றம் கொண்டு வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் முறையில் நடத்தி வருகிறோம். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலே என்னென்ன செய்தோம், மூன்றாவது திட்டத்தில் என்ன செய்யப் போகிறோம் என்பதெல்லாம் அறிக்கையிலே விளக்கமாகத் தரப்பட்டிருக்கிறது. ஏழை விவசாயிகளுக்கு நல்ல முறையில் உரத்தை வழங்க வேண்டும். செயற்கை உரத்தைப் பஞ்சாயத்துத் தலைவர்கள் மூலம் விவசாயிகளுக்குத் தாராளமாகக் கொடுக்க வேண்டும். விவசாயத்தை நல்ல முறையில் நடத்த ஆராய்ச்சிப் பள்ளிகளை அமைத்திருக்கிறார்கள். எங்களுடைய தென்னாற்காடு ஜில்லாவில் ஒன்று அமைத்திருக்கிறார்கள். மண் வளத்தைப் பரிசோதித்துப் பார்த்து அதற்குத் தக்கவாறு உரமிட வேண்டுமென்பதற்காக மண்வள ஆய்வுக் கூடங்களை நிறுவி இருக்கிறார்கள். தென்னாற்காடு ஜில்லாவில் ஒன்று நிறுவ வேண்டுமென்றும் சொல்லியிருக்கிறார்கள். விவசாயத்தில் எந்த முறையில் முன்னேற்றம் அடைந்திருக்கிறோம் என்பதையும் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் உணவு உற்பத்தி 38 லட்சம் டன்னாக இருந்தது 44 லட்சம் டன்னாக உயர்ந்திருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மேலும் அதிகமாக 9 லட்சம் டன் பெருகியிருக்கிறது. மூன்றாவது திட்டகாலத்தில் 70 லட்சம் டன் அளவு வரையில் உற்பத்தி பெருகும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். மண்ணரிப்பைத் தடுப்பதற்காக வாய்க்கால் ஓரங்களில் நல்ல மரங்களை நட்டு மண் அரிப்பு ஏற்படாமல் தடுக்க வேண்டுமென்று கூறியிருக்கிறார்கள். நடுரக பாசன வசதிகளைச் செய்வது பற்றியும் சொல்லியிருக்கிறார்கள். ஊற்று குழாய்க் கிணறுகள் (ஆர்டிசன் வெல்ஸ்) துணைக் குழாய் கிணறுகள் (சப்-ஆர்டிசன் வெல்ஸ்) 'பில்டர் பாயின்ட்ஸ்' ஆகியவற்றையும் அதிகமாக ஏற்படுத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள். காட்டு வளம் பெருக வேண்டுமென்பதற்காகவும், விறகுப் பஞ்சம் தீரவும் நதி ஓரங்களிலும், சமுத்திரக் கரை ஓரங்களிலும் மரங்களை நடவேண்டுமென்று கூறியிருக்கிறார்கள். தென்னாற்காடு ஜில்லாவைப் பொறுத்தவரை முந்திரியும் சவுக்கும் அதிகமாக விளைவிக்க இன்னும் நல்ல முறையில் கடன் கொடுத்து உதவினால் உதவியாக இருக்கும். மீன் வளத்தை அதிகப்படுத்தி திட்டங்கள் தீட்டியிருக்கிறார்கள். தென்னாற்காடு ஜில்லாவில் கடலூரில் ஒரு மீன் பிடிப்புத் துறைமுகத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். நம்முடைய

4th July 1962] [திரு. கி. நாராயணசாமி பிள்ளை]

நாட்டு மக்கள் எல்லாருக்கும் வேலை கிடைக்க வேண்டுமென்பதற்காகப் பல திட்டங்களைத் தீட்டியிருக்கிறார்கள். தென்னாற்காடு ஜில்லாவில் நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி எடுப்பதோடு மாத்திரமல்லாமல் அங்கு கிடைக்கும் வெள்ளைக் களிமண்ணைக் கொண்டு பீங்கான் செய்யும் தொழிற்சாலையையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதை விருத்தாசலத்தில் சர்க்கார் துறையில் ஏற்படுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. நெய்வேலி நிலக்கரியையும் சேலத்து இரும்பையும் கொண்டு ஒரு உருக்காலையை சேலத்தில் ஏற்படுத்தப் போவதாகக் கூறியிருக்கிறார்கள். சேலத்து இரும்பை நெய்வேலிக்கே கொண்டு வந்து ஒரு உருக்குத் தொழிற்சாலையை நெய்வேலியில் ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தமிழகத்தில் சர்க்கரை ஆலைகள் பலவற்றை நடத்த சர்க்கார் லைசன்ஸ் கொடுத்திருக்கிறார்கள். தென்னாற்காடு ஜில்லாவில் கள்ளக்குறிச்சி தாலுகாவில் கூட்டுறவு முறையில் ஒரு சர்க்கரை ஆலையை நிறுவவும் விருத்தாசலம் தாலுகாவில் தனியார் துறையில் ஒரு சர்க்கரை ஆலையை நிறுவவும் முயற்சி செய்து வருகிறோம். அதற்கும் சர்க்கார் ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

எல்லாப் பிள்ளைகளும் படிக்க வேண்டும், படிக்காத பிள்ளைகள் இருக்கக்கூடாது என்ற நல்ல நோக்கத்தோடு இலவசக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். உயர்நிலைப் பள்ளிகளை அதிகமாக்க திட்டமிட்டிருக்கிறார்கள். எஞ்சினீயரிங், மருத்துவக் கல்லூரிகளில் படிக்க கடன் கொடுத்து உதவுவதற்குத் திட்டமிடப்பட்டிருக்கிறது. இவற்றையெல்லாம் நாம் போற்றித்தான் ஆக வேண்டும்.

விருத்தாசலம் தாலுகாவில் மேட்டுப்பாங்கான கிராமங்களில் குடிதண்ணீர் வசதி கிடையாது. அதனால் அவர்கள் குளத்துத் தண்ணீரைக் குடிப்பதால் நரம்புச் சிலந்தி ஏற்பட்டு மக்கள் அவதிப்படுகிறார்கள். அரசாங்கம் இதற்கான நடவடிக்கைகளை எடுத்து நல்ல குடிதண்ணீர் சப்ளை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். விருத்தாசலம் தாலுகாவில் 'வெலிங்டன் ரிசர்வாயர்' என்ற ஒரு நீர்த்தேக்கம் இருக்கிறது. 35, 40 வருஷங்களாகிவிட்டதால் அந்தத் தேக்கத்தில் மண் மேடிட்டு அதில் தண்ணீர் நிறைய இல்லாமல் மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இதற்கு வரும் வரத்துவாய்க்காலை அகலப்படுத்தியோ அல்லது ரிசர்வாயரை ஆழப்படுத்தியோ அல்லது கரைகளை உயர்த்தியோ நீரைத் தேக்கி நீர்ப்பாசனத்திற்கு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஒவ்வொரு கிராமத்திற்கும் மின்சாரம் கொடுக்கப்பட்டு வருகிறது. அணுசக்தி நிலயத்தை நமது தமிழ்நாட்டில் நிறுவவேண்டுமென்று சொல்கிறார்கள். அதை நெய்வேலியில் வைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நெய்வேலித்திட்டம் நல்லமுறையில் முன்னேறினால் வேண்டிய மின்சாரம் கிடைக்கும். மத்திய சர்க்கார் ஹொகனக்கல் என்ற இடத்தில் 58 கோடி ரூபாய் செலவு

[திரு. கி. நாராயணசாமி பிள்ளை] [4th July 1962

செய்து இரண்டு பெரிய மின்சார நிலயங்களையும், இரண்டு பெரிய அணைக்கட்டுகளையும் கட்டி நீரைத் தேக்கி மக்களுக்கு மின்சாரம் கொடுக்க ஏற்பாடு செய்து வருகிறார்கள். பின்னர் மேற்படி தண்ணீரை சாத்தனூர் டாமில் விட்டு வெல்லிங்டன் ரிசர் வாயருக்கு கொண்டுவந்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது நெய்வேலித் திட்டம் நல்லமுறையில் நிறைவேறி வருவதால் கடலூர் துறைமுகத்தை அபிவிருத்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கடலூரிலிருந்து விருத்தாசலம் வரையில் மின்சாரம் ஒவ்வொரு ஸ்டேஷனிலும் கொடுக்க வேண்டும். பின்னர் எலெக்ட்ரிக் ட்ரெயின் கடலூரி லிருந்து விருத்தாசலம் வரையில் கொண்டுவர நமது சர்க்கார் சிபார்சு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். (மணி யடிக்கப்பட்டது). இந்த குறுகிய காலத்திற்குள் நமது நாடு நல்ல முறையில் முன்னேறியிருக்கிறது. அதைக்கண்டு பல அயல் நாட்டார்களும் வியப்படைகிறார்கள். நாடு முன்னேறவேண்டு மென்றால் வரி போட்டுத்தானகவேண்டும். ஆகவே கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கிற அந்த வரிகளை நான் வரவேற்கிறேன் என்று கூறிக்கொண்டு என் உரையை முடிக் கிறேன், வணக்கம்.

* **திரு. எஸ். முத்துலிங்கம்:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ஆம் ஆண்டு நிதி நிலை அறிக்கைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற ஆசைப்படுகிறேன். ஜீ.ஓ.எம்எஸ்.நம் 621, பப்ளிக் சர்விஸஸ், டேட்டட் 16-3-41 என்ற அரசாங்க உத்தரவில் பத்து ஆண்டுகள் ஊழியம் புரிந்த அட்டண்டர்கள் போன்ற கீழ்தர அரசாங்க ஊழியர்கள் திருப்திகரமான முறையில் திறமையாக பணி புரிந்தால் அவர்களுடைய ஊதியத்தை அட்டண்டர் பதவியிலிருந்து கீழ்பிரிவு எழுத்தர், (லோயர் டிவிஷன் க்ளார்க்) பதவிக்கு உயர்த்துவதற்கும் வழி வகை செய்யப்பட்டிருக்கிறது. அதனை 5 ஆண்டு ஊழியம் இருந் தால் போதும் என்று நம். 3673/58-2, பப்ளிக் சர்விஸஸ், டேட்டட் 18-9-58 உத்திரவு கூறுகிறது. அவர்கள் குறைந்த கல்வி தரம் கீழ் பிரிவு குமாஸ்தாவிற்கு நிர்ணயிக்கப்பட்ட அளவு இல்லாவிடினும், அவர்களுடைய பொதுக் கல்வி குறைவை (ரிலாக்ஸேஷன்) தளர்த்தல் செய்து அவர்கள் திறமையான ஊதியத்திற்காக அவர் களுக்கு பதவி உயர்வு கொடுக்கலாம் என அரசாங்க உத்தரவு நம். 3673/58-2, பப்ளிக் சர்விஸஸ், டேட்டட் 19—9—58-ல் இருக்கிறது இதன்படி இலாகா வாரியாக பயன் அடைந்தவர்கள் ஜில்லா வாரியாக எவ்வளவு பேர் ? அப்படி பயன் அடையாவிடில் இவ் வுத்திரவை ஏன் சரியான முறையில் பயன் படுத்தவில்லை. ஒவ் வொரு இலாகாவிலும் ஐந்தாண்டு திருப்திகரமாக வேலை செய்யும் நிரந்தர அட்டண்டர்கள் பட்டியலைக் கேட்டு இலாகாவாரியாக அவர்களுடைய பெயரை சிபார்சு செய்து கவர்னருக்கு அனுப்பி ரிலாக்சேஷன் ரூல்படி அவர்களுக்கு ரூ. 55-1-75 என்று சம்பள அடிப்படையில் வாழவும் முடியாமல், சாகவும் முடியாமல் அவஸ் தைப்படும் அவர்களை கீழ்பிரிவு குமாஸ்தாக்களாக உயர்த்தி அவர் கள் வாழ்வினை செப்பனிட வேண்டும்.

4th July 1962] [திரு. எஸ். முத்துலிங்கம்]

அடுத்தபடியாக ஆசிரியர்கள் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ள ஹையர் கிரேடில் இருந்து செகன்டரி கிரேடு பரீட்சை எழுதவேண்டுமானால் எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்வு எழுதவேண்டும். அதற்கு சில குறைந்தபட்ச மார்க்குகள் நிர்ணயிக்கப்பட்டிருக் கிறது. அவர்கள் குடும்பத்தையும் தொழிலையும் செய்து கொண்டே படிக்கவேண்டியிருப்பதால் அச் சலுகை இருக்கிறது. புதிதாக ஆசிரிய பயிற்சியில் சேர வேண்டியவர் எஸ்.எஸ்.எல்.ஸி யில் தேர்வு எழுதி காலேஜில் சேர தகுதியான அம்சங்கள் அல்லது மதராஸ் பப்ளிக் சர்விஸ் கமிஷன் நடத்தும் பரீட்சை எழுத தகுதி யான மார்க்குகள் பெற்றிருக்கவேண்டும். ஆசிரியாக இருப்பவர் தமிழில் 35 மார்க்குகளும், ஆங்கிலத்தில் 30 மார்க்குகளும், கணக்கில் 25 மார்க்குகளும், சமூகத்தில் 25 மார்க்குகளும், விஞ் ஞானத்தில் 25 மார்க்குகளும் வாங்க வேண்டும். ஆனால் சென்னை பப்ளிக் சர்விஸ் கமிஷன் தேர்வு எழுத வேண்டியவர்கள் புதிய தாக தேர்வு எழுதும் எஸ்.எஸ்.எல்.ஸி. யாவது கல்லூரியாவது படித்தவர் பெற வேண்டிய மார்க் நான்கு தேர்விலும் 135 மார்க்கு கள். அரசாங்க இலாகாவில் சபார்டினேட் சர்விஸில் உள்ளவர் கள் கட்டுரையில், 40, ஆங்கிலத்தில் 35, பொது அறிவில் 35, மொழி பெயர்த்தல் 40, ஆக மொத்தம் 150 மார்க்குகள் பெறவேண்டும். ஆகவே குறைந்த வருவாயில் குடும்பத்தையும் நடத்திக் கொண்டு, தொழிலையும் திருப்தியாக செய்து கொண்டு தேர்விற்கும் தங்களை இவர்கள் தயாரித்துக் கொள்ளவேண்டியிருப்பதால் ஆசிரியர் களுக்கு உள்ளது போல் இவர்களுக்கும் சலுகை கொடுத்து நான்கு தேர்விலும் மொத்தமாக 100 மார்க் அல்லது ஒவ்வொரு தேர்விலும் 25 சதவிகிதம் அம்சம் எடுத்தால் போதும் என்று விதியை திருத்தவேண்டும். அல்லது டைபிஸ்ட்களுக்கு மட்டும் வைக்கும் இரு தேர்வுகள் மட்டும் எழுத வாய்ப்பளிக்க வேண்டும்.

அடுத்தபடியாக தமிழ் நாட்டு அரசாங்கம் தமிழை ஆட்சி மொழியாக அமுலாக்கி ஆண்டு பல ஆகின்றன. ஆனால் எஸ்.எஸ்.எல்.ஸி. படித்த அட்டண்டர்கள் பலர் தமிழ் சம்பந்தப் பட்ட எல்லா தேர்வுகளிலும் ஆங்கிலம் தவிர எம்.பி.எஸ்.ஸி.-க்கு உரிய மார்க்குகள் பெற்றிருந்தும் ஆங்கிலத்தில் குறைந்த அம்சங்கள் எடுத்ததற்காக அவர்களுக்கு ப்ரமோஷன் கொடுக்கப் படுவதில்லை. ஆகவே தமிழ் ஆட்சி மொழியாக உள்ள இலாக்காக் களில் ஆங்கிலத்தில் மட்டும் தேர்வு பெறாத அட்டன்டர்கள் இருந் தால் அவர்களுக்கு ஐந்தாண்டு ஊழியம் பூர்த்தியாகியிருந்தால் அவர்களுக்குக் கீழ் பிரிவு எழுத்தராக பதவி உயர்வு கொடுக்க வேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, வந்தவாசியில் குடிதண்ணீர் வசதியில்லாமல் மக்கள் பெரிதும் கஷ்டப்படுகிறார்கள். ஏற்கனவே அரசாங்கத் தாரும் செய்யாறிலிருந்து குழாய் மூலமாக தண்ணீர் கொண்டு வந்து சப்ளை செய்யும் விஷயமாக சர்க்கார் எடுத்துக் கொண்டுள்ள குடி தண்ணீர் திட்டத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டு வந்து ஏழை பெருங்குடி மக்களின் குடிதண்ணீர் கஷ்டத்தைப் போக்க வேண்டுமென்று அரசாங்கத்தை கேட்டுக் கொள்கிறேன்.

[திரு. எஸ். முத்துலிங்கம்] [4th July 1962

ஏற்கனவே வந்தவாசியில் ஒரு ஸ்பின்னிங் மில் அமைக்க வேண்டுமென்று அரசாங்கத்தினரால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. வந்தவாசி பகுதியைச் சேர்ந்த பெருவாரியான கிராம மக்கள் வேலையில்லாத காரணத்தினுல் அவரவர்கள் குடும்பத்தை நடத்த முடியாமல் பெரிதும் கஷ்டப்படுகிறுர்கள். அப்பகுதிகளில் பெருவாரியான நெசவாளர்களும் உண்டு. ஆகவே மக்கள் கஷ்டம் நீங்கி வாழ்க்கைத்தரம் உயரவேண்டுமானுல் கட்டாயம் அரசாங்கம் வந்தவாசியில் ஸ்பின்னிங் மில் ஒன்றை அமைத்துத் தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

வந்தவாசி பகுதியில் நான்கு பிர்க்காக்கள் இருக்கின்றன. அங்கு ஒரு ஹாஸ்டல்தான் இருக்கிறது. அதில் 41 பேர்கள் படித்து வருகிறுர்கள். இரண்டு பிர்க்காக்களுக்காவது ஒரு ஹாஸ்டல் இருக்கவேண்டும். அதைச் செய்துதர அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அல்லது அங்கு அதிகப்படியான பிள்ளைகளாவது படிக்க பர்மிஷன் கொடுக்க வேண்டும். அடுத்தபடியாக, ஹரிஜனங்களுக்காக ஒதுக்கிவைக்கப்படும் புறம்போக்கு நிலங்களை சரியாக பகிர்ந்து கொடுக்க தாமதிக்கிறுர்கள். இதுவரை பகிர்ந்து கொடுத்ததாகத் தெரியவில்லை. ஆகவே அதற்கும் ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எந்த சமுதாயமாகயிருந்தாலும் சரி, மக்கள் வாழ மனைக்கட்டுகள் தேவை. மனையில்லாத காரணத்தினுல் ஏழை மக்கள் சர்க்கார் புறம்போக்கு நிலங்களில் வீடு கட்டிக் கொண்டு 30, 40 வருடங்களாக அனுபவித்து வருகிறுர்கள். அவர்களை, கிராம அதிகாரிகள் மூலம் நோட்டீஸ் கொடுத்து காலி செய்ய வற்புறுத்துகிறுர்கள். 40 வருடங்களாக அனுபவித்து வரும் அம் மனைகளை பிரிக்க விடாமல் அவர்களுக்கே கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எங்கள் பகுதியில் உள்ள விவசாயிகளுக்கு போதிய அளவு மின்சாரம் வழங்கப்படுவதில்லை என்று குறைப்பட்டுக் கொள்கிறுர்கள். இதன் காரணமாக அங்குள்ள விவசாயிகள் கஷ்டப்படுகிறுர்கள். ஆகவே இதைப் பற்றியெல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு கனம் தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்து என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* **திரு. கே. எஸ். சுப்பிரமணிய கவுண்டர்:** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டுக்கான நிதிநிலை அறிக்கையை வரவேற்று சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் மிக நல்ல முறையில் எல்லா விஷயங்களையும் ஆராய்ந்து ஒரு நிதிநிலை அறிக்கையை நம்மிடம் சமர்ப்பித்து இருக்கிறுர்கள். இந்த நிதிநிலை அறிக்கையில் கல்வி, சுகாதாரம், வீடுகள் இவைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதோடு மட்டுமல்லாமல், அதே சமயத்தில் 150 ரூபாய்க்கு குறைவாக சம்பளம் வாங்கக்கூடிய சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு 5 ரூபாய் அதிகச் சம்பளமும் கொடுத்திருக்கிறுர்கள். அது மட்டுமல்ல, ஏழை மாணவர்களுக்கு தொழில் கல்வி பயிலுவதற்கு தவணைமுறையில் கடன் வசதி செய்து கொடுத்திருப்பதானது உண்மையிலேயே மிகவும் பாராட்டுவதற்குரியதாகும். அதே சமயத்தில் வரிகளும் போடப்பட்டிருக்கின்றன. வரி போடுகின்ற விஷயத்தில் ஒரே ஒரு விஷயத்தைத்தான் நாம் கவனிக்கவேண்டும்.

**4th July 1962]** *[திரு. கே. எஸ். சுப்ரமணிய கவுண்டர்]*

திட்டம் எந்த அளவுக்கு இருக்கவேண்டும், பெரிய அளவுக்கு திட்டம் வேண்டுமா வேண்டாமா என்பதைப் பற்றி நாம் முடிவு செய்துவிட்டால், இதில் அமைச்சர் அவர்களின் வேலை மிகவும் எளிதாகிவிடும் திட்டமும் பெரிய அளவிற்கு இருக்கவேண்டும், அபிவிருத்தி வேலைகளும் துரிதமாக நடைபெற வேண்டும் என்று சொல்லும்போது சில வரிகளைப் போட்டுத்தான் ஆகவேண்டும் என்கிற சூழ்நிலை ஏற்படுகிறது. குறிப்பாக மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் சமர்ப்பிக்கும் போது நம்முடைய திட்ட வேலைகளை எல்லாம் நடத்தவேண்டுமென்ருல் 35 கோடி ரூபாய் அளவுக்கு வரிபோடத்தான் வேண்டும் என்கிற நிலை இருந்தது எல்லோருக்கும் தெரியும் என்று நினைக்கிறேன். அதையொட்டித்தான் இந்த வரிகள் போடப்பட்டிருக்கின்றன. வரி போட்டிருப்பதில் சில வரிகள் ஏழை மக்களை பாதிக்கிற காரணத்தால், சில வரிகள் இப்போது போட்டிருப்பது போன்று தான் இருக்கவேண்டுமா, அல்லது இதில் ஏதாவது மாறுதல் செய்யலாமா என்பதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் ஆலோசிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சாதாரணமாக, எதிர்க்கட்சிகள் சொலுவது, பஸ் போக்குவரத்தை எல்லாம் நேஷனலைஸ் செய்து விட்டால் சர்க்காருக்கு வேண்டிய பணம் எல்லாம் கிடைத்துவிடும் என்று. ஆனல் அது எந்த அளவுக்கு சாத்தியம் என்று பார்க்கும்போது நாஷனலைஸ் பண்ணுமலேயே நேஷனலைஸ் செய்தால் வருமானம் கிடைக்கக்கூடிய அளவுக்கு அமைச்சர் அவர்கள் புது வரி மூலமாக வழிவகை செய்திருக்கும்போது அதை ஏன் அனுவசியமாக நாம் பொறுப்பேற்றுக்கொள்ளவேண்டும் என்பது யோசிக்க வேண்டிய விஷயம். அதே சமயத்தில் மின்சாரத்திற்காக இப்போது வரி அதிகம் போடப்பட்டிருக்கிறது. 10 சதவிகிதம் என்று போட்டிருப்பது உசிதமாக இருக்குமா என்பது ஆலோசிக்க வேண்டிய விஷயம். விவசாயிகள் சாதாரணமாக பம்பு செட்டுகளுக்கு அதிகமாக உபயோகப்படுத்தக்கூடிய மின்சாரத்திற்கு அதிகமான அளவில் வரி போட வேண்டுமா என்பதை கனம் அமைச்சர் அவர்கள் ஆலோசிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சாதாரணமாக நமது மொத்த மின்சார உற்பத்தியில் 15 சதவிகிதம் தான் விவசாயத்திற்காக பயன்படுகிறது. மீதியெல்லாம் இன்டஸ்ட்ரீஸ் போன்றவைகளுக்குத்தான் பயன்படுகிறது. 15 சதமானம் மட்டும் உபயோகப்படுத்தி வரும் மின்சாரத்தை எடுத்துக்கொண்டால், மைசூர் நீங்கலாக மற்ற ராஜ்யங்களையெல்லாம்விட நாம் குறைவாக கட்டணம் வசூலித்தாலும் கூட, இந்தப் புது வரியையும் சேர்த்து இப்போது விவசாயி கொடுக்க முடியுமா என்பதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் யோசிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சாதாரணமாக விவசாயத்திற்கு உபயோகிக்கப்படும் மின்சாரத்திற்கு இந்த வரியைப்போடாமல் விட்டுவிட்டால்கூட, இதிலிருந்து கிடைக்கும் தொகை அதிகமாக இருந்துவிடாது என்பதுதான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரண்டாவதாக, நஞ்சை நிலத்தின் பேரிலும் தண்ணீர் தீர்வையும் போடப்பட்டிருக்கின்றது. இதன் மூலமாக ஒரு கோடி 30 லட்சம் ரூபாய் வருமானம் வரக்கூடிய அளவில் இந்த வரி

[திரு. கே. எஸ். சுப்பிரமணிய கவுண்டர்] [4th July 1962

போடப்பட்டிருக்கிறது. ஒன்றும், இரண்டாம் தர நஞ்சை நிலங்களுக்கும் வரி விதிக்கப்படும் என்று இப்போது குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது எந்த அளவுக்கு உசிதமாக இருக்கும் என்பதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் கவனமாக சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். காரணம் நஞ்சை நிலம் என்று எடுத்துக்கொள்ளும்போது, எல்லாம் டெல்டா ஏரியாவாக இருப்பதில்லை. எவையெல்லாம் டெல்டா நிலங்கள், டெல்டா பிரதேசமில்லாத நிலங்கள் எவையெல்லாம் என்கின்ற கிளாஸிஃபிகேஷன் செய்துவிட்டால் இதில் எந்த விதமான ஐயப்பாடும் ஏற்படாது. சாதாரணமாக சேலம்போன்ற இடங்களில், அங்குள்ள நிலங்கள் முழுக்க முழுக்க வானத்தை நம்பித்தான் விவசாயம் செய்ய வேண்டிய நிலைமையில் இருக்கின்றன. டெல்டா என்று சொல்லும் போது மேட்டூர் கனல் மூலம், ராஜகுமாரபாளையம், K.R.P. பகுதிகள் மட்டும்தான் டெல்டா பிரதேசங்கள். வேறு நஞ்சை நிலங்கள் எல்லாம் ஏரிப் பாசனத்தைத்தான் நம்பியிருக்கின்றன. சாதாரணமாக ஏரிப் பாசனத்தை நம்பி விவசாயம் செய்வதை நிச்சயமாக தண்ணீர் கிடைக்கும் என்று சொல்லிவிட முடியாது, பல சமயங்களில் ஏரித் தண்ணீர் இருக்கின்றது என்று நம்பி விவசாயத்தை செய்து பின்னல் பயிர்களை காயவிட்டு விடக்கூடிய நிலைமையும் பல சமயங்களில் ஏற்படுகின்றது என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே இந்த நஞ்சை நிலம், தண்ணீர் வரி போடுவதற்கு பதிலாக, 'அக்ரிகல்சரல் இன்கம் டாக்ஸ்' போடுவதில் பிளான்டேஷன் இனத்திற்கு சற்று அதிகப்படுத்தி விட்டால் நாம் எதிர்பார்க்கின்ற ஒரு கோடி முப்பது லட்சம் ரூபாயை சரிகட்டிவிட முடியும் என்று நான் கருதுகிறேன். காரணம் ஏற்கனவே 'லான்ட் ஸீலிங்' மசோதா கொண்டு வந்த நேரத்தில் பிளான்டேஷனுக்கு விலக்கு கொடுத்திருக்கிறோம். ஆகவே இதன் மீது வரி அதிகப்படுத்துவதாக இருந்தால் நிச்சயமாக ஒரு கோடி முப்பது லட்சம் ரூபாயை நஞ்சை நிலவரியின் மூலமாக வரிபோடவேண்டிய அவசியமில்லை. இதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் யோசித்துப் பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கரும்பின் மீது செஸ் வரியை அதிகப்படுத்தியுள்ளோம். இதன் மூலம் 50 லட்சம் ரூபாய் வரும், இந்த வருமானம் "வேஸ் அண்ட் மீன்ஸ்" வகுப்பதற்கு சௌகரியமாக இருக்கும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் தெளிவுபடுத்தியிருக்கிறார்கள். இதில் கனம் அமைச்சர் அவர்கள் ஒரு விஷயத்தை சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்போது கரும்பின் மீது போட்டிருக்கும் வரியின் மூலம் சர்க்கரை ஆலைகள் ஏற்கனவே கொடுத்துக் கொண்டிருந்த வரி 2 ரூபாய் என்பது இப்போது ஐந்து என்று கொடுக்க வேண்டும் என்கிறது. இதைப்பொறுத்தவரையில், நான் குறிப்பிட விரும்புவது, 1950-வது வருடத்திற்கு முன்பு ஒரு சர்க்கரை ஆலை ஏற்படுத்த வேண்டுமென்றால், 30 லட்சம் ரூபாய் மூலதனம் போதுமானதாக இருந்தது. 1950-ம் ஆண்டில் சாதாரணமாக 60 லட்சம் ரூபாய் வேண்டியிருந்தது. ஆனால் சர்க்கரை ஆலையை எடுத்துக்கொண்டால், 60 லட்சம் ரூபாயில் ஏற்படுத்தப்

**4th July 1962]** *[திரு. கே. எஸ். சுப்பிரமணிய கவுண்டர்]*

பட்டது. அதற்குப் பிறகு 1957-58-ல், எல்லாம் 95 லட்சமாக இருந்தது. இப்போது ஒரு சர்க்கரை ஆலை ஆரம்பிக்கவேண்டு மென்றால் சுமார் ஒன்றரை கோடி ரூபாய் வரை தேவைப்படு கிறது. ஆகவே அதிகமாக கேபிட்டல் போட்டிருக்கும் இந்த புதிய ஆலைகளும் இதன் மூலம் வரி கொடுக்கவேண்டிய நிலையில் இருக்கிறது. குறிப்பாக கூட்டுறவு முறையில் சர்க்கரை ஆலைகள் நிறுவும்போது, இவைகள் ஏற்கனவே (ஐ.எஃப்.ஸி.) இன்டஸ்ட்ரியல் ஃபைனான்ஸ் கார்ப்பரேஷன் போன்ற ஸ்தாபனத்திற்கும், அரசாங் கத்திற்கும் கொடுக்கவேண்டிய ரூபாயின் வட்டியையும் அசலை யும் கொடுத்து இந்த வரியையும் கொடுக்க முடியுமா என்கிற விஷயத்தை கனம் அமைச்சர் அவர்கள் ஆலோசிக்கவேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். என்னைப் பொறுத்த வரையில் செஸ் வரியை பொதுவாக நான் வரவேற்கிறேன். அதே நேரத்தில் புதிதாக நிறுவப்பட்ட சர்க்கரை ஆலைகள் இதன் காரணமாக பாதிக்கப்படுமா என்பதையும் நாம் ஆலோசிக்க வேண்டும். மத்திய சர்க்காரில் கூட்டுறவு சங்கங்களுக்கு இன்கம் டாக்ஸ் கொண்டு வந்த நேரத்தில் புதிதாக நிறுவப்பட்ட கூட்டு றவு சர்க்கரை ஆலைகளுக்கு ஏழு ஆண்டுகளுக்கு "டாக்ஸ் ஹாலி டே" கொடுக்கப்பட்டது. அதைப்போல் புதிய சர்க்கரை ஆலை களுக்கு 'டாக்ஸ் ஹாலிடே' ஏன் கொடுக்கக்கூடாது? இதை கனம் அமைச்சர் அவர்கள் பரிசீலிக்க வேண்டுமென்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். 11-30 a.m.

இந்த பட்ஜெட்டிலே சில தனியார் துறையினர் வைத்திருக்கக் கூடிய மின்சார ஸ்தாபனங்களை நேஷனலைஸ் செய்யப்படும் அளவிலே ஏதாவது இருக்குமென்று எதிர்பார்த்தேன். அது இல்லாதது ஓரளவிற்கு ஏமாற்றமாகத்தான் இருக்கிறது என்று நான் சொன்னால், அப்படி நான் சொல்வது ஒன்றும் மிகையாக இருக்காது என்று நம்புகிறேன். காரணம் ஒரு சில இடங்களிலே, குறிப்பாக எந்த இடத்திலே கிணற்றை நம்பி விவசாயம் செய்யப் படுகிறதோ அந்த இடங்கள் எல்லாம் தனிப்பட்டவர்களிடம் மின்சார வினியோகம் இருக்கிறது. குறிப்பாக, சேலத்தில் எஸ்.ஈ.டி. கம்பெனியிடம் மின்சார வினியோகம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. இந்த காரணத்தினாலே நல்ல முறையிலே மின் சாரத்தை வினியோகிப்பதற்கு இயலாத ஒரு நிலைமை இருந்து வருகிறது. இதைப் பல தடவை இந்தச் சபையிலே எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஏதோ வருஷத்திலே அரசாங்கம் அந்த கம்பெனிக்கு கொஞ்சம் கடன் கொடுக்கக்கூடிய காரணத்தினால், ஒன்றிரண்டு கிராமங்களைத் தவிர அவர்களால் மின்சாரம் வினியோகிக்க முடியவில்லை. அரசாங்கத்தைப்போல் அவர்களால் எல்லா இடங்களுக்கும் நல்ல முறையிலே மின்சாரம் விஸ்தரிக்க முடியவில்லை. ஆனால் பிளானிங் கமிஷனிலே இதற்கு ஏதோ இடைஞ்சல் இருக்கிறது என்று நான் அறிகிறேன். தற்போது தமிழ் நாட்டைப் பொறுத்தவரையிலும், 30 கோடி ரூபாய் இருந்தால் பூரணமாக எல்லா ஸ்தாபனங்களையும் நாம் நேஷனலைஸ் செய்துவிட முடியும் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, சீக்கிர மாக இந்தத் துறையை நேஷனலைஸ் செய்வதற்கான ஏற்பாட்டை செய்யவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

[திரு. கே. எஸ். சுப்பிரமணிய கவுண்டர்] [4th July 1962

சேலத்தைப் பொறுத்தவரையில், சேலம் காலேஜில் ஒரு ஹாஸ்டல் 4 லட்சம் ரூபாய் அளவில் கட்டப்படும் என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். நான் அதை வரவேற்கிறேன். ஆனால், அதே சமயத்திலே அந்த காலேஜானது முனிசிபல் காலேஜாக இருந்தபோது எந்த அளவிலே வசதிகள் இருந்ததோ, அந்த அளவிலேதான் இருக்கிறது. தவிர, அங்கு அதிகமான கட்டிடங்கள் கட்டி, இன்னும் கிளாஸ்களை அதிகப்படுத்துவதற்கு வேண்டிய விரிவானத் திட்டங்கள் இல்லை. அதையும் அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஹாஸ்டல் அவசியம் என்பதை ஒப்புக்கொண்டாலும், அதேசமயத்திலே காலேஜைப் பொறுத்த அளவிலேயும் அதை இன்னும் விரிவுபடுத்துவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எனது தொகுதியைப் பொறுத்தவரையில் சங்ககிரி முன்சீப் கோர்ட்டு சேலத்திலேயே இருந்து வருகிறது. அதை சங்ககிரியிலேயே வைப்பதற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். சங்ககிரியிலே இருக்கக்கூடிய ஜில்லா போர்டு ஆஸ்பத்திரியை அரசாங்கம் எடுத்துக் கொண்டிருக்கிறது. அதற்கு தனியாக வேறு இடத்திலே ஒரு கட்டிடம் கட்டவேண்டும் என்ற அளவிலே டிபுடி டைரக்டர் ஆப் மெடிகல் சர்விசஸ் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதற்கான ஏற்பாட்டையும் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சேலத்திலே இரும்பு தொழிற்சாலை வருமென்ற உறுதி இருந்தாலும், அது அங்கு வருமா என்பதைப்பற்றி ஒரு பெரிய அச்சம் இருக்கிறது. இந்த சேலம் இரும்புத் தொழிற்சாலை, நெய்வேலி இரும்புத் தொழிற்சாலையாகிவிடக்கூடாது என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இப்படிப்பட்ட தொழிற்சாலை தமிழ் நாட்டிலே எந்த இடத்திலே இருந்தாலும் பரவாயில்லை என்று சொன்னாலும், உரிய இடத்திலே இருக்கவேண்டியது அவசியம் என்பதையும் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சேலத்திலே இரும்பு தொழிற்சாலை ஏற்படும் என்கிற நம்பிக்கை எல்லோருக்கும் இருக்கின்ற காரணத்தினாலே, வேறு இடத்திலே அமைத்தால் அது எல்லோருக்கும் பெரிய ஏமாற்றமாக இருக்குமென்று சொல்லிக்கொள்கிறேன். சேலத்திற்கு ஒரு மெடிகல் காலேஜ் வைப்பதற்கான ஏற்பாட்டையும் செய்யவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு, என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* திரு. எஸ். நஞ்சுண்ட ராவ்: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்று காலையில் நண்பர் மதியழகன் அவர்கள் மிகவும் உணர்ச்சியோடு பேசினார். 1947-ம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 14-ம் தேதி சரித்திரத்தை எடுத்துச் சொல்லி பழைய நினைவை ஊட்டினார்கள். இதற்கு மிகவும் நான் அவர்களுக்கு நன்றி செலுத்துகின்றேன். ஆனால் அவர்கள் அதே பாணியிலே, உணர்ச்சி வசமாகப் பேசி, இந்த சர்க்கார் செய்கிற தரித்திர நாராயணன் சேவையை நல்ல முறையிலே பாராட்டி, இன்னும் நல்ல முறையிலே வளர்ப்பதற்கு உதவி இருப்பார்கள் என்று நினைத்தேன்.

4th July 1962] [திரு. எஸ். நஞ்சுண்டராவ்]

சுவாமி விவேகானந்தர் சொன்னார் : "Heat without Light" "உஷ்ணம் உண்டு; ஆனால் வெளிச்சம் இல்லை" என்று. அந்த முறையிலே நண்பர் மதியழகன் அவர்கள் பேசியது எனக்கு மிகவும் வருத்தத்தைத் தந்தது. ஆனால் யாராவது இந்த மன்றத்திலே இருக்கிற நண்பர்கள் சர்க்கார் செய்கிற இந்த தரித்திர நாராயணன் சேவையை இன்னும் எந்தெந்த வகையிலே நல்ல முறையிலே செய்யலாம் என்பதற்கான பணியில் ஈடுபட்டு, அதற்கான பணிகளைச் சொன்னால் நல்லது. அதைச் செய்ய வேண்டுமென்று எதிர்க்கட்சிக்காரர்களை மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். மிஸ். மேயோகூட தன்னுடைய ரிப்போர்டிலே ஏதோ சொல்லியிருப்பதாகச் சொன்னார்கள். அந்த ரிப்போர்ட்டு எனக்குத் தெரியும். குற்றம் சொல்வதையே தொழிலாகக் கொண்டால், அதற்கு என்ன வேண்டுமானாலும் சொல்லலாம். நான்கூட, இந்த மன்றத்திலே ஒரு பச்சைக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு பார்த்தால், எல்லாம் பச்சையாகத்தான் தெரியும். "Seven blind men seeing an elephant". ஏழு குருட்டு நண்பர்கள் ஒரு யானையைப் பார்த்த மாதிரியாகத்தான் இருக்கும் என்பதைச் சொல்லி, சர்க்காருக்கு உதவியாக "கன்ஸ்ட்ரக்டிவ் கிரிடிசிசம்" சொல்லக்கூடியதாக இருந்தால் நல்லது. ஆனாலும், திரு. மதியழகன் அவர்கள் 1947-வது ஆண்டு, ஆகஸ்டு மாதம் சுதந்திரத்தைப்பற்றி நினைவூட்டியதற்கு நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன்; பாராட்டுகிறேன்.

நம் நாட்டிலே பல ஆக்கவேலைகள் செய்கிறோம். அம்மாதிரியான ஆக்கவேலைகளில் நமது சர்க்கார் ஈடுபட்டிருக்கிறது. "Rome was not built in a day". ரோம் நகரம் ஒரே நாளில் கட்டப்படவில்லை. பல நூற்றாண்டு காலமாக கட்டப்பட்ட ஒரு நகரமாகும். அதேமாதிரி நம்முடைய நாட்டை நல்ல முறையிலே, ஆக்கவேலைகள் நிறைந்ததாக செய்வது என்பது இலேசான காரியம் அல்ல. அது ஒரு பெரிய காரியமாகும். இரண்டு மாதத்திற்கு முன்பு நம் நாட்டிலிருக்கிற அமெரிக்க தூதரும் பொருளாதார நிபுணருமான கால்பிரெய்த் அவர்கள் India is waging a war on poverty" என்று கூறியிருக்கிறார்கள். ஆகவே, இந்தியாவில் ஏழ்மையைப் போக்கக்கூடிய ஒரு பெரிய போராட்டம் இப்பொழுது நடக்கிறது. இது மாபெரும் போராட்டமாகும். இந்தப் போராட்டத்திலே நமது மதிப்பிற்குரிய நேரு சர்க்கார், நமது காமராஜ் சர்க்கார் எந்தெந்த விதத்திலே நல்ல பணிகளைச் செய்து ஏழ்மையைப் போக்க வேண்டுமோ, அதைச் செய்து கொண்டிருக்கிறார்கள். அதற்கு உதவி புரியக்கூடிய வகையிலே சேவை செய்தால் உதவியாக இருக்கும் என்று கேட்டுக்கொள்கிறேன். நம்முடைய நாடு நல்ல முறையிலே முன்னேற்றம் அடைய வேண்டுமானால், இந்தச் சமயத்திலே எனக்கு ஆங்கிலத்தில் படித்த ஒன்று நினைவுக்கு வருகிறது "The Great War Prime Minister of England Mr. Winston Churchil," சொன்ன பிரசங்கம் என் ஞாபகத்திற்கு வருகிறது. போராட்டத்திலே வெற்றி பெறுவதற்காக மூன்று வாக்குறுதிகளைக் கொடுக்கிறார். அதை மட்டும் அதாவது, "I promise hard work, labour, sweat and sacrifice" செய்தால் கண்டிப்பாக வெற்றி பெறும் என்று சொல்லி,

[திரு. எஸ். நஞ்சுண்ட ராவ்] [4th July 1962

'வி பார் விக்டர்' என்ற இந்த மூன்று குறிக்கோள்களை எடுத்துக் காட்டினர். அப்படி அவர் சொன்னமாதிரி, இந்த மூன்ருவது ஐந்தாண்டு திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற வேண்டுமானால், உழைப்பும், தியாகமும், வியர்வை வியர்க்கக்கூடிய உணர்ச்சியுள்ள தியாகம் அதாவது உழைப்பும் இருக்கவேண்டும். அப்படி இருந்தால்தான் நாடு முன்னேற்றமடைய முடியும். இதைத் தவிர, வேறு விதத்திலே முன்னேற்றத்தைக் கொண்டுவர முடியாது. கண்டிப்பாக நாட்டிலே ஏழ்மையை ஒழிக்க வேண்டுமென்று சொன்னுல் அது பெரிய காரியம். அதற்குப் பொறுமையும் சகிப்புத்தன்மையும், ஒத்துழைப்பும், கூட்டுறவு மனப்பான்மையும் அவசியம் வேண்டும். அந்த நோக்கத்தோடு சர்க்காருக்கு உதவுமாறு எல்லோரையும் நான் கேட்டுக்கொள்கிறேன்.

வரிகள் போடாமல் எப்படி நிர்வாகத்தை நடத்துவது என்று இந்த மன்றத்தில் இருப்பவர்கள் யோசிக்கவேண்டும். லாரிகள் மீது வரி போடக்கூடாது, பஸ்கள் மீது வரி போடக்கூடாது, ஸ்டாம்ப் டியூட்டி போடக்கூடாது என்ருல் வேறு எந்த விதத்தில் வரி போடவேண்டும் என்று சொல்ல வேண்டும். வரி போடக்கூடாது என்ருல், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை எப்படித்தான் நடத்துவது? சர்க்கார் ஊழியர்களுக்கு 5 ரூபாய் உயர்வு கொடுத்தது போதாது என்று சொல்லலாம். ரூ. 150-க்கு மேல் சம்பளம் வாங்குகிறவர்களுக்கு எந்தவிதமான ஒரு சலுகையும் காட்டவில்லை என்று கூட சொல்லலாம். அதற்குப் போதிய நிதி வசதி இருந்தால் செய்ய முடியும். ஆகையினல், இன்றைக்கு பஸ்கள் மேல் வரி போடக்கூடாது, லாரிகள் மீது வரி போடக்கூடாது, அப்படி போடுவது தவறு என்று குற்றம் சொல்லிக்கொண்டிருப்பதில் பலன் இல்லை. வேறு எந்த விதத்தில் வரி போடலாம் என்பதற்கு கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு உதவியாக 'ஸஜெஷன்ஸ்' கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

என் போன்று இருக்கிற புது அங்கத்தினர்கள் பட்ஜெட் பூராவும் படித்தால் ஒரு பெரிய கட்டுரை மாதிரி அமைந்திருக்கிறது. சர்க்காருடைய பொறுப்புகள் என்ன, சர்க்கார் என்னென்ன வேலைகள் செய்கிறது, எந்தெந்த இலாகாக்களில் என்னென்ன வேலைகள் நடக்கின்றன என்பதை நாம் உணர்ந்து கொள்ள முடிகிறது. அந்த வேலைகளுக்கு நாம் உதவியாக இருக்க வேண்டுமென்ற உணர்ச்சி என் மனதில் தோன்றுகிறது. பொதுவாகப் பேசவேண்டிய விஷயங்கள் இன்னும் சில இருக்கின்றன. ஆனல் எனக்கு நேரம் இன்னும் 5 நிமிடங்கள்தான் இருக்கின்றன. அந்த நேரத்தில் என்னுடைய தொகுதியைப்பற்றி சிறிது சொல்லிக் கொண்டு, இன்னும் வேறு ஏதாவது விஷயங்கள் சொல்லவேண்டுமானுல் மற்ற நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நான் சார்ந்திருக்கிற தொகுதி எல்லோருக்கும் தெரியும். தமிழ் நாட்டிலே ரொம்ப பிற்போக்கான தொகுதி. ராமனதபுரம், பழனி, ஒட்டன்சத்திரம், தாராபுரம் போன்ற தொகுதிகளைக்கூட தோற்

4th July 1962] [திரு. எஸ். நஞ்சுண்ட் ராவ்]

கடிக்கிற தொகுதி என்னுடையது. வேடசந்தூர் தொகுதியில் 'பிஸிகல் என்விரன்மெண்டு' எப்படி இருக்கிறதோ அப்படித்தான் 'மெண்டல் என்விரன்மெண்டும்'. மகாத்மா காந்தியடிகள் ஓர் இடத்திலே சொன்னார் : "Physical vlimate of Wardha or Nagpur is just like the mental climate of India". அதேபோல் வேடசந்தூரில் இயற்கை சூழ்நிலை எப்படியோ அதே மாதிரி தான் மக்களுடைய மனப்பான்மையும், கஷ்டப்படுகிற சூழ்நிலை. அந்த வட்டாரத்திற்கு சர்க்கார் வேண்டிய சலுகைகளை கொடுத்து எல்லா விதத்திலும் அந்த வட்டாரத்தை முன்னேற்றத்திற்குக் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு என்ன வழிகள் இருக்கின்றனவோ அந்த வழிகளைச் செய்ய வேண்டும். வருஷா வருஷம் 20 அங்குலத்திற்கு மேலே அங்கே மழை பெய்யாது. அந்த வட்டாரம், பழனி, ஒட்டன்சத்திரம் எல்லாம் ஒரே சரகு. கோவை ஜில்லாவில் சர்க்கார் 'ஸ்மால் பாண்ட்ஸ் ஸ்கீம்' என்று சொல்லக்கூடிய குட்டைத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். எங்கள் வட்டாரத்திலும் அம்மாதிரி குட்டைத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்து எந்த அளவுக்கு தண்ணீர் வசதி செய்து கொடுத்து விவசாய முன்னேற்றத்திற்கு உதவி செய்ய முடியுமோ, அந்த அளவுக்கு உதவி செய்யவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

வேடசந்தூர் தொகுதியில் 5 வருஷங்களுக்கு முன்னால் ஒரு ஊரிலும் மின்சாரம் கிடையாது. இன்று அங்கே பாதி அளவுக்கு மேலாக 100, 150 கிராமங்களுக்கு மின்சார வசதி செய்துகொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால், அங்கே உள்ள ஜனங்களுக்கு மின்சார பம்பு செட்டுகள் வாங்கி வைத்துக்கொள்ள பண வசதி போதாது. கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலமாகவும், சர்க்கார் தக்காவிக் கடன் கொடுப்பதன் மூலமாகவும் விவசாயிகளுக்கு கடன் உதவி அளிக்கப்படுகிறது. ஆனால், இந்த வட்டாரத்திலுள்ள மக்களுக்கு அந்தக் கடனை மூன்று வருஷங்களுக்குள் திருப்பிக் கொடுப்பதற்கு சக்தி கிடையாது. இந்த வட்டாரத்திலும், இதே போன்று இருக்கிற வட்டாரங்களிலும் 3 வருஷ தவணையை 5 வருஷ தவணை அல்லது 10 வருஷ தவணையாக மாற்றினால் மிகவும் நலமாக இருக்கும். அதனால் மின்சார பம்பு செட்டுகள் வாங்குவதற்கு வசதியாக இருக்கும். அம்மாதிரி தவணையை அதிகப்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால், மின்சார போர்டாரே பம்பு செட்டுகள் வாங்குவதற்கு கடன் கொடுத்தால் மிகவும் நல்லது என்று நினைக்கிறேன். ஏனென்றால், அவர்களுக்கு எந்த இடங்களிலே மின்சார சப்ளை கொடுக்கிறார்கள் என்பது தெரியும். மின்சார போர்டு மூலம் இந்தக் கடனை வழங்கினால் ரொம்பவும் சௌகரியமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

வேடசந்தூரில் ஒரு பஞ்சாயத்து யூனியன் ஆஸ்பத்திரி இருக்கிறது. அதை 'ப்ரொவின்ஷியலைஸ்' செய்து, சர்க்கார் ஆஸ்பத்திரியாக மாற்றுவது மிகவும் அவசியம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பாளையம் யூனியனிலே குறிலபாஜையில் சப்-ரிஜிஸ்டிரார் ஆபிஸ் வசதி கிடையாது. ஒரு பத்திரம் ரிஜிஸ்டர்

செய்யவேண்டுமென்றால் 25 மைல் கடந்து வேடசந்தூர் போக வேண்டும். 25 மைல் இதற்காகச் சென்று வருவது ஜனங்களுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆகவே, பாளையம் யூனியனில் குறிலபாளையில் ஒரு சப்-ரிஜிஸ்டிரார் ஆபீஸ் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

முதியோர் பென்ஷன் விஷயமாக சர்க்காரிடம் ஒரு கருத்தை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். 65-வது வயதிற்குப் பிறகு பென்ஷன் கிடைக்கும் என்று ஆசையோடு வயது வந்த ஏழை ஜனங்கள் இருக்கிறார்கள். 65-வது வயதிலாவது பென்ஷன் கிடைத்தால் சுகமாக இருக்கலாமே என்ற ஆசை ஜனங்களுக்கு இருக்கிறது. 65 வயது என்று இருப்பதற்கு பதிலாக, 60 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு சர்க்கார் பென்ஷன் கொடுக்க முன்வந்தால் சௌகரியமாக இருக்கும் என்று நினைக்கிறேன். சர்க்கார் சிப்பந்திகளுக்கு 55-வது வயதில் ரிடையர் ஆனவுடன் பென்ஷன் கிடைக்கிறது. ஆகவே, பொது ஜனங்களுக்கு 60-வது வயதில் பென்ஷன் கிடைத்தால் நலமாக இருக்கும். இப்பொழுது கொடுக்கிற ரூ. 20 போதுமான அளவுக்கு இருக்கிறது. நாட்டின் நிதி நிலைமையைப் பார்த்தால், அவ்வளவு கொடுப்பது ரொம்பப் பெரிய காரியம். ஜனங்களுக்கு அது திருப்திகரமாக இருக்கிறது. ஆகவே, 65 வயது என்று இருப்பதை 60 வயதாகக் குறைக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இதில் இன்னொரு சிக்கல் இருக்கிறது. அது என்னவென்றால், அப்படி 65 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு 21 வயதிற்கு மேற்பட்ட சம்பாதிக்கிற பையன் வீட்டில் இருந்தால், அவர்களுக்கு பென்ஷன் கொடுக்கப்படுவதில்லை என்பதில் தான் அந்த சிக்கல் இருக்கிறது. இப்பொழுது இருக்கிற பையன்கள் எல்லோரும் தாய் தகப்பனுக்கு சாப்பாடு போடுகிறவர்கள் என்று நினைப்பது அவ்வளவு சரியல்ல. இப்பொழுது பையன்கள் தாய் தகப்பனிடம் எவ்வளவு தெய்வ பக்தி காட்டுகிறார்கள் என்பது எல்லோருக்கும் தெரியும். தாய் தகப்பனர் வைத்த பெயரையே சிலர் மாற்றிக்கொண்டு விடுகிறார்கள். அப்படியிருக்கும்பொழுது அவர்கள் எப்படி தாய் தகப்பனிடம் பக்தி வைத்து அவர்களுக்கு சாப்பாடு போடப் போகிறார்கள்? இது சர்க்காருக்கு நன்றாகத் தெரியும். ஆகையினாலே, 65 வயது என்பதை 60 வயதாக மாற்றி, பையன்கள் இருந்தால்கூட அவர்களுக்கு பென்ஷன் கொடுத்தால் நல்லது என்று நான் நினைக்கிறேன். இன்னும் சொல்லவேண்டிய சில விஷயங்களை அந்தந்த டிமாண்டுகள் விவாதத்திற்கு வரும்பொழுது சொல்லிக்கொள்ளுகிறேன். வணக்கம்.

* **திருமதி செகதாம்பாள் வேலாயுதம்:** கனம் தலைவர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையின் மீது பேச எனக்கு வாய்ப்பு அளித்த தலைவர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். என்னுடைய தொகுதி ஜெயங்கொண்டான் - தொகுதி. அது மிகவும் பின் தங்கிய தொகுதி. உடையார்பாளையம், ஜெயங்கொண்டான் பகுதிகளுக்கு தண்ணீர் வசதி மிகவும் குறைவாக இருக்கிறது. அரசாங்கம் தண்ணீர் வசதி செய்துகொடுக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**4th July 1962]** *[திருமதி செகதாம்பாள் வேலாயுதம்]*

ஜெயங்கொண்டான் தொகுதியில் சில பகுதியில் நரம்புச் சிலந்தி வியாதி மக்களை மிகவும் வாட்டி வதைக்கிறது. அந்த நோயை தடுப்பதற்கு அரசாங்கம் தக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஜெயங்கொண்டான் பகுதியில் பெண்கள் ஆசிரியர் பயிற்சி பள்ளி ஒன்று அரசாங்கம் ஏற்படுத்தித் தரவேண்டுமென்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். ஜெயங்கொண்டான், உடையார்பாளையம், ஆண்டிமடம் ஆகிய இடங்கள் தவிர மற்ற இடங்களில் மின்சார வசதி கிடையாது. மின்சாரத்தைப் பார்த்து அறியாத ஜனங்கள், அதைப் பார்த்தாலே ரொம்பவும் ஆச்சரியப் படக்கூடிய நிலைமையில் இருக்கிறார்கள். ஆகவே, மின்சார வசதி கூடிய சீக்கிரம் செய்துகொடுக்குமாறு அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஜெயங்கொண்டான் ரொம்பவும் பின்தங்கிய பகுதியாக இருப்பதினால், விவசாயத்தைப் பெருக்குவதற்கு ஏதேனும் வழிவகை செய்து கொடுக்கவேண்டும் என்று அரசாங்கத்தை மிகவும் பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். உடையார்பாளையம் தாலுகா மிகவும் மோசமான நிலைமையில் இருக்கிறது. மருதையார் திட்டம் ஒன்று இருக்கிறது. அந்த மருதையார் திட்டத்தை அரசாங்கம் நிறைவேற்றிக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஜெயங்கொண்டான் பகுதிகளுக்கு குடி தண்ணீர் வசதி அவசியம் செய்துகொடுக்குமாறு அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **திரு. டி. கார்ச்சா கவுடர்:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நடப்பு ஆண்டு நிதிநிலை அறிக்கையை விவாதித்துக் கொண்டு இருக்கும் இந்தச் சமயத்தில் இந்த அறிக்கையை வரவேற்று ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்த அறிக்கையை பரிசீலிப்பதற்கு முன்னதாக, எதிர்க்கட்சியில் உட்கார்ந்திருக்கும் நமது திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களைப்பற்றி ஓரிரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இதற்கு முன்பு இந்தச் சபை மூன்று தடவை கூடியிருக்கிறது. முதலில் கவர்னர் பெருமானின் உரைக்கு வந்தனம் செலுத்துவதற்கும், இரண்டாவதாக மின்சார பட்ஜெட்டை விவாதிப்பதற்கும், மூன்றுவதாக பொது பட்ஜெட்டை விவாதிப்பதற்கும் நாம் கூடி இருக்கிறோம். இந்த மூன்று சமயங்களிலேயும் அவர்கள் என்ன கூறியிருக்கிறார்கள் என்பதை நாம் பார்க்கவேண்டும். கவர்னர் பெருமான் கலந்துகொண்ட கூட்டத்தைப் பகிஷ்கரித்தார்கள். மின்சார பட்ஜெட்டைப் பற்றி பேசும்பொழுது, அதிலே ஒன்றும் இல்லை, தமிழ்நாடு முன்னேறவில்லை என்று சொன்னார்கள். இப்பொழுது பொது பட்ஜெட்டின் மீது விவாதம் நடக்கும் பொழுது அவ்விதமே குறை கூறுகிறார்கள். இதை நினைத்தால் எனக்கு ஒரு கதை ஞாபகத்திற்கு வருகிறது.

சில பெண்கள் மீன் கூடையை எடுத்துக்கொண்டு மீன் விற்பதற்காகச் சென்றார்களாம். மீனை விற்றுவிட்டு வரும் பொழுது நடு வழியில் மழை வந்துவிட்டது. அப்பொழுது பக்கத்திலே ஒரு

மல்லிகை பூக்கடை இருந்தது. பூக்கடைக்காரன் அந்த பெண்கள் தங்குவதற்கு இடம் கொடுத்தானும். தொடர்ந்து மழை பெய்து கொண்டிருந்ததால் இரவு நேரம் ஆகிவிட்டபடியால் அவர்கள் அங்கே படுப்பதற்கும் இடம் கொடுத்தான். ஆனால் இந்த மீன் கூடைக்காரிகளுக்கு இரவில் தூக்கம் வரவில்லை. மீன் வாசனை யையே நுகர்ந்து பழக்கமானதால் அவர்களுக்கு மல்லிகைப் பூ வாசனை பிடிக்கவில்லை. ஆகவே இரவில் எழுந்திருந்து மீன் கூடையை எடுத்துக்கொண்டுபோய் தலையில் தொங்கவிட்டுக் கொண்டு தூங்கினார்களாம். அதுபோல எதிர்க்கட்சியில் உள்ளவர் களுக்கு குற்றம் என்னும் கூடையை தினந்தோறும் தூக்குகின்ற முறையிலே ஏதாவது குற்றங்குறை சொன்னால்தான் இரவில் தூக்கம் வருமோ என்று நான் சந்தேகப்படுகிறேன்.

இந்த பட்ஜெட் உரையிலே மிகவும் முக்கியமான அம்சம் கல்வி யைப் பற்றியது. நமக்கு கிடைக்கும் 106 கோடி ரூபாய் வருவாயில், 25 கோடி ரூபாயை, அதாவது கால் பாகத்தை, நாம் கல்விக்காக செலவு செய்கிறோம். நாம் சென்ற பதினைந்து வருஷங் களாக கல்வித் துறையிலே கடைப்பிடித்து வந்த கொள்கைகள் ஓரளவு எதிர்க்கட்சியினரை வளர்ப்பதற்கு ஆதரவாக இருந்தன வோ என்று நான் சந்தேகப்படுகிறேன். தற்போது நீண்டகாலம் அனுபவமுள்ளவரும், கல்வியில் சிறந்தவருமான நமது நிதி யமைச்சர் அவர்கள் சட்டசபையிலும் வெளியிலும் கல்வி சம்பந்த மாக வெளியிட்டுள்ள கருத்துக்கள் இந்தக் கலக்கத்தை ஓரளவு நீக்குகின்றன. செகண்டரி பள்ளிக்கூடங்களில் ஆங்கிலம் அவசியம் என்று கருதுகிற பெற்றோர்கள் தங்களுடைய பிள்ளைகளை ஆங்கில பிரிவில் சேர்த்துக்கொள்ளலாம் என்று கூறியிருக்கிறார்கள். கல்லூரிப் படிப்பிலும் தமிழை அவசரப்பட்டு புகுத்தக்கூடாது என்று சொல்லியிருக்கிறார். இவ்விதமாக ஆறுதல் தரும் திட்டங்களைக் கூறிக்கொண்டு வருகிறார். நமது பாரத நாட்டிற்கு இன்று உலக அரங்கில் ஏதாவது மதிப்பு இருக்கிறது என்றால் அதற்கு காரணம் அங்கேயுள்ள நமது பிரதிநிதிகள் ஆங்கிலத்தில் பேசும் திறமைதான் என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இவ்விதமாக நாம் எல்லோரும் தமிழையே கற்றுக்கொண்டால் தமிழ் நாட்டிலேயே எல்லோருக்கும் வேலை சம்பாதித்து கொடுக்க முடியுமா? "குண்டு சட்டியில் குதிரை ஓட்டுவது" போல எல்லோரும் தமிழைப் படித்துக்கொண்டிருந்தால் தமிழ்நாட்டுக் குள்ளேயே வேலை வாய்ப்புகள் இருக்குமா என்பதை நாம் கவனிக்கவேண்டும். அல்லது உலகம் பூராவும் சென்று தமிழ் நாட்டினுடைய பெருமையை நாம் நிலைநாட்ட வேண்டாமா? ஆகவே கல்லூரிகளிலும், செகண்டரி பள்ளிகளிலும் பூராவாக ஆங்கிலத்தையே போதனா மொழியாக ஆக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கல்விக்கு கடவுள் ஆன சரஸ்வதியை நாம் பூஜிக்கிறோம். மருத்துவ இலாகா டைரக்டர் பதவியை ஒரு அம்மையாருக்கு கொடுத்திருக்கிறோம். அதேபோன்று கல்வி இலாகா டைரக்டராக ஒரு அம்மையாரை நியமித்தால் பொருத்தமாக இருக்கும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

4th July 1962] [திரு. டி. கார்ச்சா கவுடர்]

குறிப்பாக எலிமெண்டரி பள்ளிக்கூடங்களிலே ஆண் உபாத்தியா யர்கள் குழந்தைகளுக்கு சரிவர பாடம் சொல்லிக்கொடுப்பதில்லை யென்று புகார்கள் வந்து கொண்டிருக்கின்றன. சிறிய உள்ளங் களுக்கு கல்வி ஊட்டுவதற்கு பெண்களுக்கே அருகதையுண்டு என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். அதனால் ஹையர் கிரேட் ட்ரெயினிங் பள்ளிகளில் ஆண்களைச் சேர்க்காமல் பெண் களுக்காகவே அவைகளை நடத்தலாம் என்றும், செகண்டரிகிரேட் ட்ரெயினிங் பள்ளிகளில் ஆண்களை சேர்த்துக் கொண்டால் நன்றாக இருக்கும் என்று நான் நினைக்கிறேன்.

அடுத்தபடியாக உணவு உற்பத்தியை எடுத்துக்கொண்டால், இந்த ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே 17 லட்சம் டன் அதிக உணவு தானியங்களை உற்பத்தி செய்வதாக இருக்கிறோம். சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே நாம் உற்பத்திச் செய்துள்ளதைப் பார்த்தால் இது ஒன்றும் பெரியதாக தோன்றாது. இந்த 17 லட்சம் டன் போதுமா? அல்லது இன்னும் சற்று அதிகரிக்கவேண்டுமா என்றுதான் நினைக்கவேண்டியிருக்கிறது. இந்த பட்ஜெட்டிலே விவசாய உற்பத்திக்காக 6.30 கோடி ரூபாய் தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் சற்று அதிகமாக தொகையை ஒதுக்கி விவசாயத்தைப் பெருக்கினால் நலமாக இருக்கும் என்று கனம் அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். அப்படிச் செய்தால் இந்த விலையுயர்வு பிரச்னை இருக்காது. எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் "விலைவாசி உயர்ந்து விட்டது, விலைவாசி உயர்ந்துவிட்டது" என்று கூக்குரல் எழுப்பி யிருக்கிறார்கள். அவர்கள் கோட்டையில் நின்று கொண்டு கூக்குரல் போட்டாலும், பேட்டையில் நின்றுகொண்டு பிரசங்கம் செய்தாலும், அட்டைகளை வைத்துக்கொண்டு ஆர்ப்பாட்டம் செய்தாலும், விலைவாசிகள் எப்படி குறையும் என்று தெரியவில்லை. இதைவிட்டுவிட்டு சோம்பிக்கிடக்கும் மக்களை தயவுசெய்து உழையுங்கள் என்று சொன்னால் நலமாக இருக்கும் என்று அவர் களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ரசாயன உரத்தைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். பருத்தி போன்ற பயிர்களுக்கு தனியாக ரசாயன உரம் கோட்டா கொடுப்பதாக சொல்லியிருக்கிறார்கள். என்னுடைய பகுதியிலே இருபதாயிரம் ஏக்கரில் உருளைக் கிழங்கு விளைகிறது. இப்பொழுது உருளைக்கிழங்கை உணவுப் பொருளாகக் கருதுகிறார்களா அல்லது வியாபாரப் பொரு ளாக கருதுகிறார்களா என்பது தெரியவில்லை. உருளைக்கிழங்கை தயவுசெய்து உணவுப்பண்டங்கள் என்ற இடத்தின்கீழ் கொண்டு வந்து குறைந்தது 2,000 டன் அமோனியம் ஸல்பேட் உரத்தை எங்களது மாவட்டமாகிய நீலகிரி ஜில்லாவுக்கு கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

வரிகளைப் பற்றி சொல்லும்பொழுது புதுவரிகள் ஒன்றும் போடப்படவில்லை. ஏற்கெனவே சர்க்காருக்கு வருமானம் தரும் துறைகளிலே ஏழு துறைகளைப் பொறுக்கியெடுத்து, எந்த துறைகள் லாபகரமாய் இருக்கின்றனவோ அவைகள் மேல் வரிகள்

[திரு. டி. கார்ச்சா கவுடர்] [4th July 1962

போட்டால் தாங்கும் சக்தி அவற்றிற்கு உண்டு என்று கருதி ஏற்கெனவே உள்ள வரிகளை சிறிது அதிகரித்து வரி போட்டிருக் கிறார்கள். இந்த ஏழு இடங்களில் மோட்டார் வரியின் மூலமாக 2 கோடி ரூபாயும், மின்சார வரி மூலமாக 215 லட்ச ரூபாயும், ஸ்டாம்பு கட்டணம் மூலமாக 3 லட்சம் ரூபாயும், நிலத் தீர்வை மூலம் 1.3 கோடி ரூபாயும், நகர வரி மூலம் 25 லட்ச ரூபாயும், குதிரைப் பந்தய வரி மூலம் 24 லட்சம் ரூபாயும், கரும்பின் மீது செஸ்வரி உயர்வு மூலம் 50 லட்சம் ரூபாயும் கிடைக்கும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த மூன்று நாட்கள் இங்கே விவாதத்தில் கலந்து கொண்ட அங்கத்தினர் எல்லாம் குறிப்பாக நிலவரியைத்தான் ஆட்சேபிக்கிறார்கள். நமது மாகாணத்தில் என்னுடைய மாவட்டத்தை எடுத்துக்கொண்டால் அங்கே ஒரு ஏக்கருக்கு 4 அணா முதல் 6 அணா வரை நிலவரி செலுத்திக் கொண்டு வருகிறோம். ஆனால் இங்கே வேறு மாவட்டங்களைச் சேர்ந்த சில அங்கத்தினர்கள் பேசும்பொழுது 25 ரூபாய் வரைச் செலுத்துகிறோம் என்று சொன்னார்கள். கேரள ராஜ்யத்தில் செய்தது போல் எல்லா மாவட்டங்களையும் மறு ஸெட்டில்மெண்ட் செய்து, நஞ்சை புன்செய் வித்தியாசம் இல்லாமல் ப்ளாட் ரேட்டாக விதித்தால் நலமாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக இந்த பட்ஜெட்டிலே உள்ள நல்ல அம்சம் என்ன வென்றால் ரூபாய் 150-க்கு கீழ் வருமானம் உள்ள எல்லா சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும் 5 ரூபாய் பஞ்சப்படி உயர்வு கொடுத் திருக்கிறார்கள். தயவுசெய்து கிராம அதிகாரிகளையும், கணக்குப் பிள்ளைகளையும் இந்த என்.ஜி.ஓ.க்களின் இனத்தின்கீழ் கொண்டு வந்து அவர்களுக்கும் ஏதாவது பஞ்சப்படி கொடுக்கமுடியுமா என்பதை ஆலோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக குதிரைப்பந்தையத்தின் மீது வரி விதித்திருக் கிறார்கள். ஊட்டியிலும், சென்னையிலும் குதிரைப்பந்தயம் நடக் கிறது. குதிரைப் பந்தயத்திற்குப் போகக்கூடியவர்கள் எல்லோரும் பணக்காரர்கள்தான். அதிலும் சென்னையில் உள்ள வர்கள் அதிகப்படியாகக் கட்டணம் செலுத்த வேண்டும் என்றும் ஊட்டியில் உள்ளவர்கள் குறைவாக கட்டணம் செலுத்த வேண்டும் என்று இருக்கிறது. அது சரியல்ல. ஊட்டியில் இருக்கக்கூடியவர் களும் சென்னையிலுள்ளவர்களைப்போல் கட்டணம் செலுத்த வேண்டும் என்று சொல்லவேண்டும். அந்த முறையில் அதிக வருவாயைத் தேடிக்கொள்ளலாம். ஆகவே பணக்காரர்கள்தான் பந்தயத்திற்குப் போகக்கூடியவர்களாக இருப்பதால் இதைக் கட்டுவதற்கு அவர்கள் தயங்க்மாட்டார்கள். ஆகவே ஊட்டியிலும் மதராஸில் உள்ளபடியே உயர்த்தவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

12-00 noon.

அடுத்தபடியாக சென்னை மாகாணத்தில் சுமார் இருபது ஆயிரம் பேர்கள் சொந்தக் கார்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த முறையில் இருபது ஆயிரம் கார்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன. இந்த இருபது ஆயிரம் கார்களுக்கும் நாம் போதுமான வரி விதிக்க

4th July 1962] [திரு. டி. கார்ச்சா கவுடர்]

வில்லை. அவர்கள் தற்போது காலாண்டு ஒன்றுக்கு முப்பது ரூபாய்தான் கட்டுகிறார்கள். அதை அறுபது ரூபாயாக உயர்த்தி அந்த முறையிலும் வருவாயைத் தேடிக்கொள்ளலாம். அந்த முறையில் பார்த்தால் சுமார் 25 லட்சம் ரூபாய் வரலாம் என்று தோன்றுகிறது. இப்பொழுது முப்பது ரூபாய் கொடுக்கிறவர்கள் அறுபது ரூபாய் கொடுக்க தயங்க மாட்டார்கள் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த சந்தர்ப்பத்தில் எனக்கு பேசுவதற்கு அனுமதி தந்ததற்கு என்னுடைய நன்றியை தெரிவித்துக்கொண்டு என் உரையை இந்த அளவில் முடித்துக் கொள்கிறேன்.

* **ஸ்ரீ எம். பி. முத்துக்கருப்பண்ணசாமி கவுண்டர் : கனம் உதவி** சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையை ஆதரித்து சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள் நிகழ்த்திய உரைக்கு என் நன்றியையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். புள்ளி விவரங்களுடன் பல்வேறு திட்டங்கள் நிறைவேற்றப்பட்டதையும், நிறைவேற்றப்பட இருப்பதைப்பற்றியும் குறிப்பிட்டிருப்பதை ஆதரித்து அவருக்கு என் நன்றியையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இதற்கு முன்னதாக எதிர்கட்சி உறுப்பினர்கள் சில வார்த்தைகளைப் பேசினார்கள். நமக்கு இந்த வரிகள் வேண்டியதில்லை என்றும் சொன்னார்கள். பல்வேறு திட்டங்களை எடுத்து நிறைவேற்றும்போது இப்படிப்பட்ட வரிகள் வேண்டுமா வேண்டாமா என்பதைப்பற்றி கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். சுமார் பத்தாண்டு காலத்திற்கு முன்னதாக நம் நாடு எந்த நிலையில் இருந்தது இப்பொழுது எந்த நிலையில் இருக்கிறது என்பதை நம் கண்முன் எடுத்துக்கொண்டால் எவ்வளவோ முன்னேற்றமடைந்திருப்பது நன்றாகத் தெரியவரும். நமது ராஜ்யத்தில் சுமார் 291 கோடி ரூபாய் வரையில் செலவு செய்து பல திட்டங்களை எடுத்து நிறைவேற்றி அதற்கு செலவிட வேண்டியதாக இருப்பதால்தான் இந்த வரிகளை விதிக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த நிலைமையில் வரி விதிக்கும்போது வரி விதிக்கக்கூடாது அதனால் ஏழைகள் பாதிக்கப்படுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் ஏழைகளை பாதிக்கக்கூடிய அளவில் வரி விதிக்க மாட்டார்கள். அவர் ஏழை பாங்காளிதான். இதை எதிர்க்கும்போது சாதாரணமாக எதிர்க் கட்சிக்காரர்களுக்குத் தெரியும் இப்படி வரி விதித்தால்தான் போடக்கூடிய திட்டங்களையெல்லாம் நிறைவேற்ற முடியும் என்று. அவைகளை நல்ல முறையில் நிறைவேற்றவேண்டுமானால் வரி விதித்தால்தான் முடியும் என்பதும் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் அவர்கள் இதை எதிர்ப்பதெல்லாம் அவர்களுடைய எதிர்ப்பு பத்திரிகைகளில் வரவேண்டும், அதை கிராமத்திலுள்ளவர்கள் வாசித்துப் பார்க்க வேண்டும் என்ற அபிப்பிராயத்தில்தான் இதை அவர்கள் எதிர்க்கிறார்கள் என்றுதான் நான் அபிப்பிராயப்படுகிறேன்.

மேலும் என்னுடைய கோவில்பாளையம் தொகுதியை எடுத்துக் கொண்டால் அதைப்பற்றி சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். கோவில்பாளையம் பொள்ளாச்சி தாலுகாவைச் சேர்ந்தது.

[திரு. எம். பி. முத்துக்கருப்பண்ணசாமி கவுண்டர்]

[4th July 1962

பொள்ளாச்சி தாலுகாவைப்பற்றி பல அங்கத்தினர்கள் இங்கே பேசினார்கள். இதற்கு முன்பாகவும் அதைப்பற்றி இந்தச் சட்டசபையில் பேசப்பட்டிருக்கிறது. அதாவது பரம்பிக்குளம்-ஆளியாறு திட்டங்கள் என்று அடிக்கடி பேசப்பட்டிருக்கிறது. அதனால் பல பகுதிகளுக்கு பாசன வசதி கிடைக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஆனால் என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டால் எந்த விதமான பரம்பிக்குளம் திட்டமோ ஆளியாறு திட்டமோ கிடையாது. அது மிகுந்த வரண்ட பிரதேசம். அதேபோல பொள்ளாச்சி தாலுகா உடுமலைப்பேட்டை குடிமங்கலம் பிர்க்கா முதலிய இடங்களில் குடி தண்ணீர் வசதி கிடையாது. சுமார் நாலைந்து மைல்களுக்கு அப்பாலிருந்து தண்ணீர் கொண்டு வர வேண்டியதாக இருக்கிறது. அவ்வளவு கஷ்டமான நிலைமையில் அவர்கள் இருக்கிறார்கள். என்னுடைய தொகுதியில் இதுவரைக்கும் எந்தவிதமான வேலைகளும் செய்யவில்லை. வெள்ளைக்கார ஆட்சி காலத்திலிருந்தே எங்கள் தொகுதிக்கு எந்த விதமான வேலையும் நடக்கவில்லை. சாதாரணமாக எந்த கிராமத்திலும் சுமார் ஆறு அல்லது ஏழு மைல்களுக்கு அப்பாலிருந்துதான் தண்ணீர் கொண்டு வர வேண்டியதாக இருக்கிறது. பக்கங்களிலுள்ள ஊர்களுக்குப் போவதாக இருந்தாலும் நல்ல ரோடு வசதி கிடையாது. குடி தண்ணீர் கொண்டு வருவதற்கும் நல்ல ரோடு வசதி கிடையாது. அந்த முறையில் என் தொகுதி இருந்து வருகிறது. அந்த தாலுகாவையே எடுத்துக்கொண்டால் மற்ற தொகுதி மக்களைப் போல் எங்கள் தொகுதி மக்களுக்கும் வரியை செலுத்திக்கொண்டுதான் வருகிறார்கள். அப்படி செலுத்திக்கொண்டு வந்தும் எந்த விதமான வேலையும் எங்கள் தொகுதியில் செய்யவில்லை. சாதாரணமாக எங்கள் தலை நகரமாகிய கோயம்பத்தூருக்குப் போக வேண்டுமானாலும்கூட எங்கள் கிராமத்திலிருந்து மூன்று ஆறுகளை கடந்து செல்ல வேண்டியதாக இருக்கிறது. வட சித்தாறு, கரைசேரி, செட்டி பாளையம் என்ற ஆறுகளை கடந்து செல்ல வேண்டியதாக இருக்கிறது. இப்படி மூன்று பள்ளங்களைக் கடந்து செல்ல வேண்டியதாக இருக்கிறது. ஆறுகளில் தண்ணீர் வந்து விட்டாலோ தண்ணீர் வடிகிற வரையிலும் காத்திருக்க வேண்டியதாக இருக்கிறது. மழைக்காலங்களில் ரொம்பவும் கஷ்டமாகத்தான் இருக்கிறது. இரவு காலங்களில் போகும்போது தண்ணீர் வந்து விட்டால் மறு நாள் வரையில் காத்திருக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த நிலையில் அங்குள்ளவர்கள் இருக்கிறார்கள். அதைப் போலவே கிணற்றுகடவு என்ற கிராமத்தை எடுத்துக்கொண்டால் பத்து மைல் தூரம் வரையில் போக வேண்டியதாக இருக்கிறது. அங்கு எந்த விதமான போக்குவரத்து வசதியும் கிடையாது. அது எப்படி இருந்தாலும் மூன்று பள்ளங்களைக் கடந்து செல்ல வேண்டியதாக இருக்கிறது. இதுவரையிலும் அந்தப் பகுதியிலுள்ளவர்கள் வரி செலுத்தாமலா இருந்தார்கள்? மற்றவர்களைப் போலவே அவர்களும்தான் வரி செலுத்திக்கொண்டு வந்திருக்கிறார்கள். அப்படி அவர்கள் பல காலமாக வரி செலுத்தி வந்தும் அவர்களுக்கு இதுவரைக்கும் எந்த விதமான நல்ல வேலைகளும் செய்யப்படவில்லை. அதைப்பார்த்தால் எனக்கே மிகவும் வருத்தமாக இருக்கிறது. இப்படியே நானும் மற்றவர்களுடன் கஷ்டப்பட்டுக்

[திரு. எம். பி. முத்துக்கருப்பண்ணசாமி கவுண்டர்]
4th July 1962]

கொண்டிருக்கிறேன். நானும் ஒரு விவசாயி. கோவை ஜில்லா கலெக்டரிடம் கனம் அமைச்சர் அவர்கள் எடுத்துச் சொல்ல வேண்டும். இது வரையிலும் என்ன வேலே நடந்திருக்கிறது என்று பார்த்து அங்கு பல வேலேகளே எடுத்து நடத்துச் சொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். சாதாரணமாக மற்ற பகுதிக ளில் என்ன என்ன வேலேகள் நடைபெற்றிருக்கின்றனவோ அவை களேயெல்லாம் இங்கும் நடத்தச் சொல்ல வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களே பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன். மற்ற பகுதிகளில் செய்யப்பட்ட வேலேகள் எல்லாம் ஏன் இந்தப் பகுதி யிலும் செய்யக்கூடாது? சாதாரணமாக பொள்ளாச்சி தாலுகா

(திருமதி ராஜாத்தி குஞ்சிதபாதம் தலேமை.)

விலும் மற்ற பகுதிகளிலும் எந்த அளவில் வேலேகள் நடைபெற்று வருகின்றன என்பதைப்பற்றி கலெக்டரைக் கேட்கவேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களேக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும் ஏதோ சில வேலேகள் அங்கு நடைபெற்று வந்தாலும் கூட அவைகள் எல்லாம் கண்ட்ராக்டர் மூலமாக நடைபெறு கின்றன. அந்தக் கண்ட்ராக்டர்கள் குறித்த காலத்தில் வேலேயை முடிக்காவிட்டால் அவர்களுக்கு அபராதம் போடுகிறுர்கள். அப் படி முடிக்கவில்லேயாஞல் அபராதம் போட வேண்டியதுதான். ஆனுல் அவர்களுக்கு சிமெண்ட் காலத்தில் கிடைப்பதாக இல்லே. ஆகவே சிமெண்ட் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பத்து அல்லது பதினேந்து நாட்கள் காத்துக்கொண்டிருந்தாலும்கூட சிமெண்ட் கிடைப் பதாக இல்லே. அது கிடைக்க ஏற்பாடு செய்யும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். காலத்தில் சிமெண்ட் கிடைக்காமல் இருப்பதால்தான் கண்ட்ராக்டர்களால் குறித்த காலத்தில் வேலேகளே முடிக்க முடியவில்லே. ஆகவே சிமெண்ட் கிடைக்கும் படியாக ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

மேலும் என்னுடைய தொகுதியில் கிணத்துகடவு பிர்காவில் 30 ஆண்டுகளுக்கு முன்னதாக மேல் பவானி திட்டம் என்று ஒன்று வந்தது. அதை எடுத்து முடிவு செய்வது என்று இருந்தார்கள். ஆனுல், அது கைவிடப்பட்டது. மூன்ருவது ஐந்தாண்டு திட்டத் திலும் அது சேர்க்கப்படவில்லே. எனக்கு முன் பேசிய கோவை ஜில்லாவைச் சேர்ந்த கனம் அங்கத்தினர்கள் பேசும்போது, 'கோவை, அவிஞசி, பல்லடம், பெருந்துறை' என்று பேசினுர்களே யொழிய என்னுடைய பகுதியை விட்டுவிட்டார்கள். இதுதான் முதலில் சர்வே செய்யப்பட்ட இடம். பரம்பிகுளம்-ஆளியார் திட் டத்தில் எங்கள் பகுதி சேர்க்கப்படாவிட்டாலும்கூட, மேல் பவானித் திட்டம் வரும்போதாவது சேர்க்கப்படவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன். முப்பது ஆண்டுகளுக்கு முன் பாகவே சர்வே செய்யப்பட்ட இடமாதலால் என்னுடைய பகுதிக் கும் பாசன வசதி ஏற்படும் வகையில் மேல் பவானித் திட்டத்தை வகுக்கவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களேக் கேட்டுக் கொள்கின்றேன்.

[திரு. எம். பி. முத்துக்கருப்பண்ணசாமி கவுண்டர்]

[4th July 1962

கல்வித் துறையில் தமிழ்நாடு அதிக முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பதைப்பற்றி நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. அது யாவருக்குமே தெரிந்த விஷயம். இந்த ஆண்டில் 25 கோடி ரூபாய் வரையில் கல்வித் துறையில் செலவு செய்யக்கூடிய வகையில் இதில் திட்டமிடப்பட்டிருக்கிறது. எல்லாத் துறைகளிலும் நாடு அபிவிருத்தி அடையவேண்டியது அவசியம் தான் என்றாலும், கல்வித் துறையில் முன்னேற்றம் அடைய வேண்டியது மிக மிக அவசியம். கல்வி இருந்தால்தான் நாடு நல்ல முறையில் முன்னேற்றம் அடைய முடியும். இந்த நல்ல தொரு நிதி நிலை அறிக்கையைச் சமர்ப்பித்ததற்காக நிதி அமைச்சர் அவர்களைப் பாராட்டி என்னுடைய நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்து, உரையை முடித்துக் கொள்கின்றேன்.

* **திரு. எஸ். ஜே. ராமசாமி:** மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, 1962-63-ம் ஆண்டின் நிதி நிலை அறிக்கையின்மீது எதிர்க்கட்சியைச் சார்ந்த நான் ஒரு சில கருத்துக்களை இந்த அரங்கில் எடுத்துரைக்க விரும்புகிறேன்.

இந்த பட்ஜெட், செலவுகளைச் சரிகட்டுவதற்காகப் போடப்பட்டதாகத் தெரிகிறதே தவிர, திட்டங்களை நிறைவேற்றுவதற்காகப் போடப்பட்டதாகத் தோன்றவில்லை. திட்டக் கமிஷன் வகுத்த திட்டத்தை இந்தச் சபை முன் வைத்து, அதற்குப் பிறகு வரியினங்களைப் போடவேண்டும் என்ற நோக்கத்தோடுதான் இந்த பட்ஜெட் போடப்பட்டிருக்கிறது. இதில் ஆங்காங்கு சில பற்றாக் குறைகளும் இருந்துகொண்டிருக்கின்றன. கடைசியில் பார்த்தால், துண்டு விழக்கூடிய தொகைகூட சரிக்கட்டப்படவில்லை என்று அடுத்த ஆண்டு அமைச்சர் அவர்கள் சொல்வார்கள். துண்டு விழுவதைப்பற்றி இந்த பட்ஜெட்டில் ஏதும் சொல்லவில்லை. துண்டு விழுவதைச் சரிக்கட்டும் அளவுக்கு வரி போடும்படி நாங்கள் சொல்லவில்லை. இருக்கக்கூடிய வரிகளையே குறைக்க வேண்டும் என்றுதான் நாங்கள் விரும்புகிறோம்.

இந்த மாநிலத்தில் மேலும் ஒரு சிமெண்ட் தொழிற்சாலையை நிறுவினால், இப்போழுது இருக்கும் சிமெண்ட் பற்றாக்குறை நீங்கி, இந்த மாநிலத்தின் தேவையை ஓரளவு நாம் பூர்த்தி செய்து கொள்ள முடியும் என்று நாங்கள் கருதுகிறோம். ஒரு சிமெண்ட் பர்மிட் வேண்டுமென்று தாலுக்கா ஆபிசுக்குப்போய் முறையிட்டால், அங்கிருக்கும் தாசில்தார் அவர்கள் ஒரு பர்மிட் எழுதிக் கொடுத்துவிடுகிறார்கள். அந்தப் பர்மிட்டை எடுத்துக்கொண்டு ஸ்டாக்கிஸ்டிடம் போனால், அவர்கள் 'சிமெண்ட் இப்பொழுது இல்லை' என்று சொல்லிக் கையை விரித்து விடுகிறார்கள். அந்த அளவுக்குப் பற்றாக்குறை இருக்கிறது. பெருமைபடக்கூடிய அளவுக்குப் புதிய தொழிற்சாலைகள் நிறுவுவதுபற்றி இந்த பட்ஜெட்டில் ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. தனியார்த் துறையில் இருக்கக்கூடிய தொழிற்சாலையைக் காட்டித்தான் விளம்பரப் படுத்திக்கொள்ள வேண்டுமே தவிர, சர்க்கார்த் துறையில் ஒன்றும்

4th July 1962] [திரு. எஸ். ஜே. ராமசாமி]

இல்லை. சர்க்கார்த் துறைக்குத் தேவையான சிமெண்டாவது கிடைக்கக்கூடிய வகையில் திட்டங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன என்று சொன்னால், இந்த பட்ஜெட்டை நாங்கள் நல்ல முறையில் வரவேற்றிருப்போம். சிமெண்ட் பற்றுக்குறையைப் போக்க சர்க்கார் தக்க கவனம் செலுத்தவேண்டுமென்று நான் குறிப்பிட விரும்புகிறேன்.

இரசாயன உர விநியோகம் பற்றி இந்த பட்ஜெட்டில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இரசாயன உர விநியோகம் கூட்டுறவு ஸ்டோர்கள் மூலமாக விடப்பட்டிருக்கிறது. இதனால் விவசாயிகளுக்கு நல்ல முறையில் உரம் கிடைக்க வழி இல்லை. வடாற்காடு மாவட்டத்தைப் பொறுத்த வரையில், கூட்டுறவு மார்க்கெடிங் சொஸைட்டியில் இருக்கக்கூடிய உரங்கள் சரிவர வெளியே வருவதில்லை. மட்ட ரக சல்பேட்தான் வெளி வருகிறதே தவிர, சிந்திரி சல்பேட் எங்கே போகிறது, எங்கே வருகிறது என்றே தெரிவதில்லை. ஆனால், சென்னை வந்து பார்த்தால் இங்கே நிறையக் கிடைக்கின்றது. விலையைப்பற்றியோ சொல்லவேண்டியதே இல்லை. நியாயமான விலை சுமார் நாற்பது ரூபாயாக இருக்க, சென்னையில் எழுபது, எழுபத்தைந்து ரூபாய்க்குக் குறைந்து உரம் கிடைப்பதில்லை. இந்த நிலைமைக்குக் காரணம் இரசாயன உரங்கள் போதுமான அளவு விவசாயிகளுக்குக் கிடைக்க இந்த சர்க்கார் வழி செய்யவில்லை என்பதுதான்.

கிணறு வெட்ட இரண்டாயிரம் ரூபாய் வரையில் மான்யம் கொடுக்கப்படுகிறது. இந்தத் தொகை போதாது என்று நாங்கள் கருதுகிறோம். ரூ. 2,500, ரூ. 3,000 வரை கொடுத்தால்கூட சௌகரியமாக இருக்கும். இல்லாவிட்டால் 20 சத விகிதச் செலவை சப்ஸிடியாகக் கொடுத்து விட்டால் விவசாயிகளுக்கு ஓரளவு திருப்தி ஏற்படும். கிணறுகளுக்காக மான்யம் கொடுத்து விட்டால் மட்டும் விவசாயிகளுடைய கஷ்டம் நீங்கிவிடாது. இத்துடன் எலெக்ட்ரிகல் சர்சார்ஜை 10 சத விகிதம் ஏற்றியிருக்கிறார்கள். விவசாயிகளால் இந்த அதிக கட்டணத்தைத் தாங்கவே முடியாது என்றுதான் நான் கனம் அமைச்சர் அவர்களுக்கு, கனம் தலைவர் அவர்கள் மூலமாக, எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் வேளாண்மைக் குடியில் பிறந்தவர்கள். வேளாண்மையில் அவருக்குத் தெரியாதது ஒன்றும் இருக்க முடியாது என்றுதான் நான் நினைக்கிறேன். விவசாயிகளின் நன்மைக்காக எங்கள் கட்சியிலுள்ளவர்களானாலும் சரி, வேறு எந்தக் கட்சியிலுள்ளவர்களானாலும் சரி, அங்கத்தினர்கள் ஒரு முகமாக எடுத்துச் சொல்லி இருப்பதற்கு கனம் அமைச்சர் அவர்கள் செவி சாய்ப்பார் என்று நான் மனமார நம்புகின்றேன்.

கல்வித் துறையை எடுத்துக் கொண்டால், பொறியியற் கல்லூரியில் 700 இடங்கள் இருக்கின்றன என்றால், அதற்கு 2,700 மனுக்கள் வந்திருக்கின்றன என்று பத்திரிகையில் வந்திருந்த ஒரு குறிப்பைப் பார்த்தேன். இந்த அளவுக்கு கல்லூரியில் இட நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. சாதாரணமாக, ஆசிரியர் பயிற்சிப் பள்ளி

[திரு. எஸ். ஜே. ராமசாமி] [4th July 1962

யில்கூட இட நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. அது மட்டுமல்லாமல் மருத்துவக் கல்லூரியிலும் இட நெருக்கடி இருக்கிறது. இட நெருக்கடியைப் போக்குவதற்காக ஆங்காங்கே கல்லூரிகளை ஏற் படுத்தவேண்டுமாய் நான் கேட்டுக் கொள்கின்றேன்.

உர விநியோகப் பொறுப்பை கூட்டுறவு ஸ்டோர்களுக்குக் கொடுத்தாலும், அது நல்ல முறையில் விநியோகிக்கப்படவேண்டும் என்பதுதான் எங்களுடைய விருப்பம். கூட்டுறவு ஸ்டோர்களிலே இருக்கக்கூடியவர்கள், தங்களுக்கு வேண்டியவர்களுக்கும், யார் யார் சலுகை பெற்றவர்களோ அவர்களுக்கும்தான் இந்த உரத் தைக் கொடுக்கிறார்கள். கூட்டுறவு சொஸைட்டியிலே இருக்கக் கூடியவர்கள் அட்டையைப் போல், உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டு, மற்றவர்கள் வர இடம் கொடுக்காமலிருக்கிறார்கள். ஏனென்றால், சட்டங்கள் அந்த வகையில் அமைந்திருக்கின்றன. அந்த சட்டங்களை மாற்றி, கூட்டுறவு இயக்கத்தில் புது ஆட்கள் வர வழி செய்யவேண்டும் என்பதுதான் என்னுடைய கருத்தாகும்.

அரக்கோணத்தில் 'பால் பேரிங்' தொழிற்சாலையொன்று நிறுவப் போவதாக இந்த பட்ஜெட்டில் ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறது. முன்பு அரக்கோணத்தில் 'பாய்லர்' தொழிற்சாலை யொன்று நிறுவுவதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். ஆனால், அந்தத் திட்டம் மாறி, இப்பொழுது பால் பேரிங் தொழிற் சாலையாக அது உருவெடுத்திருக்கிறது. அது கூட ஓரளவு நிறுவப் படுமோ, அல்லது எங்காவது உருண்டு ஓடி விடுமோ என்ற அச்சம் கூட ஏற்படுகிறது. பாய்லர் தொழிற்சாலைத் திட்டத்தைக் கைவிட்டதைப்போல, பால் பேரிங் தொழிற்சாலை நிறுவுவதும் கைவிடப்படுமோ என்ற அச்சம் இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் நிதி நிலை அறிக்கையில் இந்தத் திட்டம் குறிப்பிடப்பட்டிருப் பதால், அது கைவிடப்படமாட்டாது என்ற நம்பிக்கை ஏற்படு கிறது. இந்தத் திட்டம் கூட, பல தடவை அதிகாரிகளால் அங்கு வந்து பார்க்கப்பட்டபின், இப்பொழுதுதான் இந்தப் புத்தகத்தில் இடம் பெற்றிருக்கிறது. இதையாவது உடனடியாக நிறுவ வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

ஐந்து குதிரை வேகமுள்ள மோட்டார் பம்ப் செட் வைத்துக் கொண்டு, ஒரு பேரகத்திற்குச் சாகுபடி செய்தால், 600 முதல் 700 ரூபாய் வரையில் அதற்காக கரண்ட் சார்ஜ் கட்ட வேண்டியிருக் கிறது. இத்துடன், மூட்டையொன்றுக்கு 75 முதல் 80 வரையில் செலவிட்டு உரம் வாங்கிப் போடவேண்டியிருக்கிறது. பிண்ணாக் குப் போட்டுப் பயிர் செய்யவேண்டுமானால், மூட்டையொன்றுக்கு 27 முதல் 30 வரையில் செலவிட வேண்டியிருக்கிறது. இப்படி யெல்லாம் செலவிட்டு விவசாயம் செய்யவேண்டியிருக்கும்போது, விவசாயத்தின்மீது இன்னும் வரி விதிக்கிறோம் என்றால் இதற்கு என்ன பொருள்? தாங்கமுடியாத வரிச்சுமையை இன்னும் கொஞ்சம் தாங்குகிறேன் என்பதே அர்த்தம். ஆகையால் இந்த வரிச்சுமையை உடனடியாக கனம் அமைச்சர் அவர்கள் எடுத்து விட வேண்டுமென்பது என்னுடைய கோரிக்கையாகும். அடுத் தது கால்நடைச் செல்வங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

4th July 1962] [திரு. எஸ். ஜே. ராமசாமி]

கால்நடைச் செல்வங்களுக்கு சில கிராமங்களில் மேய்ச்சல்கால் புறம்போக்கு இருக்கிறது. அந்த மேய்ச்சக்கால் புறம்போக்கை சிலர் ஆக்கிரமித்துக்கொண்டு அவரவர்களுக்குத் தேவையான விவசாயத்திற்கு உபயோகப்படுத்திக்கொண்டு வருகிறார்கள். அந்த மாடுகளை அவிழ்த்துவிட்டாலோ எங்கேயும் போக முடியாமல் இருக்கின்றன. ஏரிகளுக்கு அனுப்பினால், அங்கே புல்லா இருக்கிறது மேய்வதற்கு? ஏரிக்கரை மண்ணை நக்கிவிட்டு திண்ணையில் படுக்கும் ஆளைப்போல படுத்துவிடுகிறது. ஆகவே தனியார் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிற மேய்ச்சல் தரைகளை எல்லாம் விடுவித்து மாடுகள் மேய்வதற்கு ஏற்றபடி ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* திரு. ஜி. ஈ. சின்னதுரை: கனம் சபாநாயகர் அவர்களே, 1962-63-ஆம் ஆண்டின் நிதிநிலை அறிக்கையை ஆதரித்து சில கருத்துக்களை வெளியிட ஆசைப்படுகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் லட்சியம் உணவுத்துறையில் 17 லட்சம் டன் அதிகமாக உணவுதான்யங்களை உற்பத்தி செய்யவேண்டுமென்பது. உணவு தான்யங்களை அதிகமாக உற்பத்தி செய்வதன் மூலம் தான் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த முடியும். அதைத்தவிர வேறு வழியில்லையென்பதை அறிந்துதான் நமது கனம் அமைச்சர் அவர்கள் உணவு தான்யங்களை அதிகமாக உற்பத்தி செய்வதற்கு தீவிரமான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதுபற்றிய விவரங்கள் இந்த நிதி நிலை அறிக்கையில் கண்டு இருப்பதற்காக நான் பாராட்டுகிறேன். உதாரணமாக பஞ்சாயத்து யூனியன் மன்றங்கள் வசம் உணவு தான்ய பெருக்குத் திட்டங்கள் சிலவற்றை நிறைவேற்றும் பொறுப்பை ஒப்புவித்திருக்கிற காரணத்தினால் உணவு தான்யங்களை ஓரளவு அதிகமாக உற்பத்தி செய்யமுடியும் என்ற எண்ணத்தோடும், நல்ல விதைப் பண்ணைகளை ஆங்காங்கு நிறுவி விதைகளை விவசாயிகளுக்கு நல்லமுறையில் விநியோகம் செய்வதன் மூலமும், நல்ல பசுந்தழை உரத்தை விநியோகிப்பதன் மூலமும், ரசாயன உரத்தை ஆங்காங்கே நல்லமுறையில் விநியோகிப்பதன் மூலமும், பூச்சி தொல்லையில் இருந்து பயிர்களைக் காப்பதன் மூலமும், உணவு உற்பத்தியை நல்லமுறையில் அதிகப்படுத்த முடியும் என்ற எண்ணத்தில் கனம் அமைச்சர் அவர்கள் தமது அறிக்கையில் அந்தந்தத் திட்டங்களை வகுத்திருக்கிறார்கள். இதைவிட்டு ஆர்ப்பாட்டங்கள் செய்வதன் மூலமும், பேரணிகளை நடத்துவதன் மூலமும் உணவு உற்பத்தியை அதிகமாக்கிவிட முடியாது. இப்படிப்பட்ட பேரணிகளை நடத்துவதன்மூலம், போராட்டங்களை நடத்துவதன் மூலம் விலைவாசிகளைக் குறைக்க முடியும் என்றால் நாங்களேகூட அந்தப் பேரணியில், போராட்டத்தில் கலந்துகொள்ளத் தயாராய் இருக்கிறோம் என்று எதிர்க்கட்சி மெம்பர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இத்தகைய பேரணிகளை நடத்துவதைவிட்டு கிராமங்களுக்குச் சென்று விவசாயப் பெருமக்களிடத்தில் உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள் என்று பிரசாரம் செய்தோமானால் நிச்சயமாக உணவு உற்பத்தியை ஓரளவு பெருக்க முடியும். அதோடு கூட உணவு உற்

[திரு. ஜி. ஈ. சின்னதுரை] [4th July 1962

பத்தி அதிகமாகக் கூடிய நேரத்தில் நிச்சயமாக விலைவாசிகள் குறைய முடியும் என்பதையும் இந்த நேரத்தில் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக நமது கனம் அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்துள்ள அறிக்கையில் கல்விக்காக 25 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். சில முக்கியமான திட்டங்களையும் அவர் சொல்லியிருக்கிறார். அதாவது ஏழை மாணவர்களுக்குத் தொழில் கல்வி கற்றுக் கொடுப்பதற்கு நீண்ட கால கடன் (வட்டியில்லாக் கடன்) கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வந்திருக்கிறது. அதைப் பாராட்ட வேண்டியவர்களாக நாம் இருக்கிறோம். அதோடு கூட ஏழை மாணவர்களுக்கு இலவசமாக மதிய உணவுத் திட்டத்தை, இலவசமாக உடைகள் வழங்குகின்ற ஏற்பாடுகளை இன்னும் அதிகமாக அரசாங்கம் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் கோவையில் ஒரு வைத்தியக் கல்லூரியும், ஒரு சட்டக் கல்லூரியும் ஆரம்பிக்கவேண்டுமென்று அமைச்சரவையை நான் கேட்டுக்கொள்கிறேன். அடுத்து கால்நடை பராமரிப்புக்குச் சுமார் 70 லட்சம் ரூபாய் வரைக்கும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இன்றைக்கு இந்த நாட்டிலே கால்நடைகளுக்கான ஆஸ்பத்திரி அதிகம் இல்லாத சூழ்நிலை இருந்துகொண்டிருக்கிறது. கால் நடைக் கல்லூரி ஒன்றே ஒன்றுதான் இந்த நாட்டில் இருக்கிறது. இதையும் அதிகமாக ஏற்படுத்தவேண்டுமென்று நான் அமைச்சரவையைக் கேட்டுக்கொள்கிறேன்.

கூட்டுறவுத் துறையில் நாம் நல்ல முன்னேற்றம் அடைந்திருக்கிறோம் என்று கூறப்பட்டுள்ளது. உண்மையில் நாம் கூட்டுறவுத் துறையில் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கிறோம் என்றாலும் கூட, சில நகரங்களில் நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் சரியான முறையில் நடைபெறாத அவல நிலையை நாம் பார்க்கிறோம். நகரத்தில் வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிற காரணத்தினால் கோவையில் இருக்கக் கூடிய நெசவாளர் சங்கங்களின் உறுப்பினர்களுக்கு அதிகமாகக் கூலியை நாம் கொடுக்கவேண்டியவர்களாக இருக்கிறோம். இன்றையதினம் கிராமங்களில் உள்ள நெசவாளர் கூட்டுறவு சங்கங்களில் உற்பத்தி செய்கின்ற துணிகளுக்கும், நகரங்களில் உள்ள நெசவாளர் கூட்டுறவு சங்கங்களில் உற்பத்தி செய்கின்ற துணிகளுக்கும் விலையில் வித்தியாசம் இருக்கிறது. கிராமச் சங்கங்கள் கொடுக்கிற கூலியைவிட நகரத்திலுள்ள சங்கங்கள் அதிகமாக கூலி கொடுக்கவேண்டியதாக இருக்கிறது. இதனால் நகரச் சங்கங்களில் உற்பத்தி செய்யப்படுகிற துணிகள் சரியானபடி வியாபாரம் ஆகாமல் தேங்கிவிடுகின்றன. இதனால் நகரத்திலுள்ள சங்கங்கள் சரியான முறையில் செயல்படுவதில்லை. இதைப் போக்குவதற்கு அரசாங்கம் ஏற்கனவே விலை அதிகமாக இருந்தாலும் கூட நகரச் சங்கங்களில் தேங்கிக் கிடக்கும் துணிகளை வாங்கி விற்பனை செய்ய ஏற்பாடு செய்யவேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்தில் நான் கேட்டுக்கொள்கிறேன்.

4th July 1962] [திரு. ஜி. ஈ. சின்னதுரை]

மேலும் நெசவாளர்களுக்கு பிராவிடண்ட் பண்டு **(Provident Fund)** வசதி கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனாலும், இந்த வசதி எல்லாச் சங்கங்களிலும் உள்ள நெசவாளர்களுக்குப் பயன் படவில்லை. ஒருசில சங்கங்களிலுள்ள ஒரு சில அங்கத்தினர் களுக்கு மட்டும்தான் பயன்படுகின்றது. காரணம் இவ்வளவு ரூபாய்க்கு மேல் மூலதனமுள்ள சங்கங்களில் உள்ள உறுப்பினர் களுக்கு மட்டும்தான் இந்த வசதி என்று இருப்பதால் இந்த மூலதன அளவுக்கு வராத பல சங்கங்கள் இத்திட்டத்தின் கீழ் வரவில்லை. அதனால் இந்தச் சங்கங்களிலுள்ள பல்லாயிரக்கணக் கான நெசவாளர்களுக்கு இந்த வசதி எட்டவில்லை. ஆகவே சின்னச் சங்கங்களுக்குக் கூட இந்த பிராவிடண்ட் பண்டு **(Provident Fund)** வசதி, வைத்திய வசதி இவற்றை விஸ்தரிக்க வேண்டுமென்று நான் கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

கடைசியாக புதிதாகப் போடப்பட்டிருக்கும் வரிகளைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்லவிரும்புகிறேன். இப்போது மின்சாரத் தின் மீது வரி விதிக்கப்படுகிறது. வீட்டிலே மின்சாரம் உபயோகிப்பவரை இது அதிகம் பாதிக்கும் என்று நான் கருது கிறேன். இதனால் பாதிக்கப்படக்கூடியவர்கள் மிகவும் ஏழைகள். குறிப்பாக மின்சார விளக்கைப் போட்டுக்கொண்டு வீட்டிலேயே வேலை செய்யக்கூடிய பல தொழிலாளர்கள் இருக்கிறார்கள். நெச வாளர்கள் பலர் இந்தமாதிரியாக வேலை செய்து வருகிறார்கள். இவர்களையும் இது பாதிக்கும். அதேபோல ஆபரணம் செய்யக் கூடிய தொழிலாளர்கள் மின்சார விளக்கைப் போட்டுக்கொண்டு தான் இரவில் அதிகமாக வேலை செய்கிறார்கள். மின்சார வெளிச் சம் அதிகமாக இருந்தால் தான் அவர்கள் மிக நுட்பமான இந்த வேலை செய்ய முடியும். ஆகவே இப்படி வீட்டில் மின்சாரத்தை உபயோகிப்பவர்களையாவது இது பாதிக்காமல் இருக்கும்படியாக இவர்களுக்கு விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று கனம் அமைச் சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

12-30 p.m.

எனது கோவை தொகுதியைப் பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கோவை நகரமானது பெரிய தொழில் நகரம். இலட்சக்கணக்கான தொழிலாளிகள் மின்சாரத்தை நம்பி வாழ்கிறவர்கள். மின்சாரம் இல்லையென்றால் அவர்களுக்கு வேலை இல்லை. வேலை இல்லையென்றால் கூலி இல்லை. இந்த நிலை சமீபத்தில் ஏற்பட்டதல்லாமல் ஒவ்வொரு வருஷமும் மின்சார வெட்டு வருகிற நேரத்தில் இதை நாம் கோவையில் காண்கிறோம். இந்த அவல நிலையைப் போக்க கோவையில் ஒரு 'தெர்மல் பவர் ஸ்டேஷன்' அல்லது அணுசக்தி மின் நிலயம் ஒன்றைக் கூடிய சீக்கிரத்தில் ஏற்படுத்த வேண்டுமென்று அமைச்சரவையை நான் கேட்டுக் கொள்கிறேன்.

இரண்டாவது முக்கியமான பிரச்னை, குடிதண்ணீர்ப் பிரச்னை. 1930-ம் ஆண்டிற்கு முன்பு இரத்தினசபாபதி முதலியார் தலைவராக இருந்த காலத்தில் கோவையின் ஜனத்தொகை சுமார் ஒரு லட்சம். அந்த ஒரு லட்சம் ஜனங்களுக்குச் சிறுவாணியிலிருந்து குடிநீர் கொண்டு வரப்பட்டது. அதிலிருந்து 42 லட்சம் காலன் தண்ணீர்

அன்று வந்து கொண்டிருந்தது. இன்றைக்கு கோவையில் 3½ லட்சம் ஜனங்கள் இருக்கிறார்கள். சமீபத்தில், அடிவாரத்தில் இருந்து 10, 15 மைலுக்கு இரட்டைக் குழாய் போட்டதன் மூலமாக 10 லட்சம் காலன் தண்ணீர் அதிகமாகக் கிடைக்கிறது. மொத்தம் 52 லட்சம் காலன் தண்ணீர்தான் வருகிறது. இந்த 52 லட்சம் காலன் தண்ணீரை 3½ லட்சம் ஜனங்களுக்குப் பகிர்ந்து கொடுக்க வேண்டிய காரணத்தால் தண்ணீர்த் தட்டுப்பாடு ஏற்படுகிறது. அதைப் போக்குவதற்காக ஏற்கனவே அரசாங்கத்திடம் ஒரு திட்டம் இருக்கிறது. சிறுவாணியில் 'அப்பர் டாம்' கட்டி நாளொன்றுக்கு ஒரு கோடி காலன் தண்ணீர் கொண்டுவர ஏற்பாடு செய்யும் திட்டம் அங்கிகாரத்திற்கு வந்திருக்கிறது. அந்த அங்கீகாரத்தைக் கேரள அரசிடம் பெறவேண்டுமென்பதற்காக கேரள அரசுடன் கடிதப் போக்குவரத்து நடந்து கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அதை விரைவில் அமுலாக்கி, அந்தச் சிறுவாணித் திட்டத்தைக் கூடியசீக்கிரத்தில் முடித்துத் தர வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* திரு. அ. துரைசாமி : கனம் தலைவி அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையைக் குறிப்பிட்டுச் சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். இந்த ஆண்டு அறிக்கையில் வளர்ந்து வரும் சமுதாயத்தை அனுசரித்து, திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியடைவதற்கான நல்ல பல திட்டங்கள் இடம் பெற்றிருக்கின்றன. மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் உண்டான பல அம்சங்கள் இந்த அறிக்கையில் இருக்கிற காரணத்தால் உண்மையிலேயே நான் நிதியமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். மதிப்புக்குரிய எதிர்க்கட்சி அங்கத்தினர் மதியழகன் அவர்கள் பேசும்போது, "இந்த அரசாங்கத்தை வரி இல்லாமல் நடத்தவேண்டுமென்று சொன்னால் பஸ்களையும் தொழில்களையும் தேசியமயமாக்க வேண்டும்" என்று சொன்னார்கள். பஸ்களையும், தொழில்களையும் திடீரென்று தேசிய மயமாக்குவது என்றால் எந்த அடிப்படையில் செய்வது? தற்போது இருக்கும் நிலவரத்தில் அதனுடைய வரவு-செலவுகள் என்ன? எப்படி 100 கோடி ரூபாய் கிடைக்கும், எப்படி வரி இல்லாமல் அரசாங்கத்தை நடத்த முடியும் என்பதற்கான திட்டத்தை இந்தச் சபையில் சமர்ப்பிப்பார்களேயானால் அதை இந்தச் சபை அறிந்து கொள்ள வாய்ப்பாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். கனம் அங்கத்தினர் அவர்கள் விலைவாசியைப் பற்றி ரொம்ப உருக்கமாகப் பேசினார்கள். விலைவாசியைப் பற்றி நமது பெண் அங்கத்தினர் திருமதி அனந்தநாயகி அவர்கள் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசியதையே நான் குறிப்பிட விரும்புகிறேன். இன்னும் 30 நாட்கள் இந்தச் சபை நடக்க இருக்கிறது. அதற்குள்ளாக விலைவாசியைக் குறைப்பதற்கான ஒரு திட்டத்தை அவர்கள் இந்த சபைக்கு கொண்டு வந்தார்களானால் அதை இந்தச் சபை அறிந்து கொள்ள வாய்ப்பாக இருக்குமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

4th July 1962] [திரு. அ. துரைசாமி]

என்னுடைய தொகுதி தலைவாசல் தொகுதியாகும். அங்கிருக்கும் மக்கள் மிகவும் ஏழ்மையான மக்கள். அங்கு தரிசு நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன. அவற்றில் நல்ல முறையில் விவசாயம் செய்ய ஆற்றுப் பாசனமோ, பெரிய ஏரிப் பாசனமோ கிடையாது. அங்கு நிலக்குடியேற்ற விவசாயக் கூட்டுறவுச் சங்கங்கள் சுமார் 22 ஆரம்பிக்கத் திட்டமிருந்தது. அதில் சென்ற ஆண்டு 7 சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன. மீதியை உடனடியாக ஆரம்பிக்க நடவடிக்கை எடுக்க வேண்டும். எங்கள் பகுதியில் ஆத்தூர் தாலுகா மிக பிற்போக்கான தாலுகா. அங்கு எந்த விதமான தொழில் திட்டமும் கிடையாது. ஏழை மக்களுக்குத் தொழில் வாய்ப்புக் கிடைக்க வேண்டுமென்று சொன்னால் அங்கு ஒரு நூற்பு ஆலையையாவது அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று நிதியமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். நூற்பு ஆலையை ஏற்படுத்துவதோடு கூட, நெய்வேலி நிலக்கரியைக் கொண்டு ஆரம்பிக்கப்படவிருக்கும் உருக்குத் தொழிற்சாலையையும், ஆத்தூர் தாலுகாவில் ஆரம்பிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். என்னுடைய தொகுதியில் காட்டுக்கோட்டை, தலைவாசல், செந்தாரப்பட்டி ஆகிய பகுதிகளில் உயர்நிலைப் பள்ளிகள் இல்லை. இந்த மூன்று இடங்களிலும் 3 உயர்நிலைப் பள்ளிகளை ஆரம்பிக்க வேண்டுமென்றும், ஆத்தூரில் ஒரு கல்லூரியை ஆரம்பிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

மின்சாரம் உபயோகிக்கும் ஏழை விவசாயிகளுக்கு மினிமம் சார்ஜ் வைத்திருக்கிறார்கள். கிணற்றில் தண்ணீர் இல்லாத காலத்தில் அவர்கள் மின்சாரத்தை உபயோகப்படுத்த முடியாது. அப்போதும் கூட அவர்கள் மினிமம் சார்ஜ் கட்ட வேண்டியிருக்கிறது. விவசாயிகளுக்கு இதிலிருந்து விலக்கு அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

(Deputy Speaker in the Chair.)

ஹரிஜனங்களுக்கு வீட்டு மனை வாங்கிக் கொடுப்பதில் கால தாமதம் ஏற்பட்டு வருகிறது. 4, 5 வருஷ காலமாகியும் இதுவரை ஒன்றும் செய்யப்படவில்லை. பரிசீலனையில் இருக்கும் நிலங்களையாவது உடனடியாக வாங்கி அவர்களுக்கு உதவ வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அரகலூரிலும், தம்பம்பட்டியிலும் ஒரு ஹரிஜன ஹாஸ்டல் ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்தச் சபையிலே பேச வாய்ப்பு அளித்ததற்காக என்னுடைய நன்றியைத் தெரிவித்து முடித்துக் கொள்கிறேன்.

* **திரு. வி. ஆர். பெரியண்ணன்:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையின் மீது ஒருசில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த நிதிநிலை அறிக்கையிலே விவசாய அபிவிருத்திக்கும், நீர்ப்பாசனத்திற்கும், கைத்தொழிலுக்கும் நிறையப் பணம் ஒதுக்கியிருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் எங்களுடைய சேலம் மாவட்டத்திற்கு எந்த விதமான உதவியும் கிடைக்கவில்லை என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். சேலம் மாவட்டம் விவசாயத்திலே மற்ற மாவட்டங்களை விட அதிக உற்பத்தியைக் காட்டக்கூடிய மாவட்டம் என்று

[திரு. வி. ஆர். பெரியண்ணன்] [4th July 1962

அமைச்சர் அவர்களே இந்த மன்றத்தில் கூறியிருக்கிறார்கள். அந்தச் சேலம் மாவட்டத்திற்கு எந்தவிதமான ஒரு நீர்ப்பாசனத் திட்டமும் இல்லையென்பது மிகவும் வருந்தத்தக்க விஷயமாகும். சேலம் மாவட்டத்திலே குறிப்பாக ராசிபுரம், நாமக்கல், திருச்செங்கோடு போன்ற தாலூகாகளில் உள்ள விவசாயிகள் கிணற்றில் இருந்து நீர் இறைத்துத்தான் விவசாயம் செய்ய வேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள். இப்பொழுது மழையில்லாத காரணத்தினால் கிணறுகளை 80, 90 அடி, 100 அடிகூட ஆழமாக வெட்டி அதிலிருந்து தண்ணீர் இறைத்து விவசாயம் செய்யவேண்டிய நிலையில் இருக்கிறார்கள். நூறு அடி வெட்டியும் கூட விவசாயத்திற்கு போதிய அளவில் தண்ணீர் இல்லாததினால் சேந்தமங்கலம் தொகுதியில் இருந்து பக்கத்திலுள்ள ஆத்தூர், அரூர் போன்ற இடங்களுக்கு விவசாயிகள் குடியேறிவிட்டார்கள் என்று நான் இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துக் கூற விரும்புகிறேன். சேந்தமங்கலம், ராசிபுரம் போன்ற பகுதிகளில் குடிதண்ணீருக்காக மக்கள் அவதிப்பட்டுக் கொண்டிருப்பது அரசாங்கத்திற்கு தெரியும். காவேரி ஆற்றிலிருந்து ஒரு வாய்க்காலை வெட்டி ராசிபுரம், சேந்தமங்கலம், திருச்செங்கோடு, நாமக்கல் போன்ற பகுதிகள் வழி செல்ல ஏற்பாடு செய்தால் குடிதண்ணீர் பிரச்னையும் தீரும். அதேசமயத்தில் விவசாயமும் நல்லமுறையில் வளர முடியும். மற்ற தாலுக்காக்களை விட எங்கள் தாலுகாவில் அதிகமாக உற்பத்தி செய்துதர முடியுமென்று இந்த நேரத்தில் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்து, எங்கள் பகுதியில் விவசாயத்திற்கு மின்சாரம் குறைவாகத்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. மின்சாரக் கம்பங்கள் நட்டும், கம்பிகள் இழுத்தும் மின்சார சப்ளை கொடுக்காத நிலைதான் இன்னும் இருந்துகொண்டிருக்கிறது. மூன்று ஏக்கருள்ள ஒரு விவசாயி ஒரு ஆயில் இஞ்சின் வைத்து விவசாயம் செய்து கொண்டிருக்கக்கூடிய நிலையில், கம்பி இழுப்பதற்குள் மோட்டார் வாங்கி "பிட் அப்" செய்தால்தான் கரண்ட் தர முடியும் என்று கூறும் காரணத்தினால், விவசாயி ஆயில் எஞ்சினை விற்று, எலக்ட்ரிக் மோட்டார் வாங்கி பிட் அப் செய்யும் நிலை இருக்கிறது. அப்படி பிட் அப் செய்து ஆறு மாதங்கள் ஆகியும் சர்வீஸ் கொடுக்கப்படாததினால் விவசாயம் செய்ய முடியாத நிலையில் மக்கள் அவதிப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்பதை இந்த நேரத்தில் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். எங்கள் பகுதியில் ஏரிகள் அதிகமாக இருப்பதால் ஏரிக்கு கீழே உள்ளவைகளை நஞ்சை நிலங்களாக கருதுவதால் அப்பகுதியினரையும் நிலத்தின் மீது போடப்பட்டிருக்கும் வரி பாதிக்கும். ஆகவே அவர்கள் இந்த வரி பாதிக்காமல் இருக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, கல்வி. சேந்தமங்கலம் தொகுதியில் கொல்லிமலை என்றதொரு பகுதியிருக்கிறது. அது மிகவும் பின்தங்கிய பகுதியாக இருப்பதால் அங்கு கல்வியைப் பரப்ப அரசாங்கம் போதிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது கொல்லிமலையில் 30 பள்ளிகள் இருக்

4th July 1962] [திரு. வி. ஆர். பெரியண்ணன்]

கின்றன. அங்கு 37 ஆசிரியர்கள் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். அங்கு பரவலாக, ஒரு ஊரில் பத்து பதினைந்து வீடுகள் இருக்கும். பின்னர் இரண்டு மைல்கள் சென்றால் அங்கும் ஒரு பதினைந்து வீடுகள் இருக்கும். இப்படி பரவலாக பல ஊர்கள் அங்கு இருப்பதால், ஒரு ஊரில் ஒரு பள்ளி ஏற்படுத்தினால் மற்ற ஊர்களில் இருந்து மாணவர்கள் வந்து படிப்பது கடினமாகயிருக்கிறது. ஆக பத்து பதினைந்து மாணவர்கள்தான் அங்கு படிக்கும் நிலை இருக்கிறது. அதனால் கொல்லிமலையிலேயே தங்கிப் படிக்க குறிப்பிட்ட நான்கைந்து இடங்களைத் தேர்ந்தெடுத்து அங்கு பள்ளிகள் ஏற்படுத்தி, அங்கு மாணவர்கள் ஹாஸ்டலும் திறவினால் அங்குள்ள பின்தங்கிய வகுப்பினராகிய மலைஜாதியினர் பிள்ளைகள் கல்வி பயிற்சி பெற ஏதுவாகயிருக்கும். கொல்லிமலைப் பகுதியில் ஆசிரியர்களை நியமிக்கும்போது அவர்கள் தங்குவதற்கு இடவசதி இல்லாத காரணத்தினால் அவர்கள் சரியானபடி பணியாற்ற முடியாதிருக்கின்றனர். ஆகவே ஆசிரியர்களுக்கும் தங்க விடுதிகள் ஏற்படுத்தித் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்து பஞ்சாயத்து யூனியன் ரோடு வேலைகள் போன்றவைகளைச் செய்ய வேண்டுமென்றால் மக்கள் தொகை கட்டமுடியாத அளவில் அவர்கள் இருப்பதால், பஞ்சாயத்து யூனியன் எந்த வேலையையும் செய்ய முடியாமல் வேலை தடைபட்டுக் கொண்டு போகிறது. அங்கு மலைஜாதியினர் இருப்பதால் அங்கு எந்த வேலை செய்ய வேண்டுமானாலும், ரோடு போடவேண்டுமானாலும், பள்ளிக்கூட கட்டிடங்கள் கட்ட வேண்டுமென்றாலும் அரசாங்கமே முழுத் தொகையையும் கொடுத்து வேலை செய்தால்தான் கொல்லிமலை மக்கள் வளர்ச்சி அடையமுடியும். கொல்லிமலைப் பஞ்சாயத்து யூனியனில் வேலை செய்ய அலுவலரை நியமித்தால் அவர்கள் அங்கு செல்ல மறுக்கிறார்கள். அப்படிச் சென்றாலும் அங்கிருந்து ஒன்றிரண்டு மாதங்களில் வந்து விடுகிறார்கள். காரணம் அவர்களுக்கு அங்கு தங்குவதற்கு வசதியில்லை. ஆகவே பஞ்சாயத்து யூனியன் அலுவலருக்கும் தங்குவதற்கு வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அங்கு பள்ளியை தணிக்கை செய்ய சேந்தமங்கலத்திலிருந்து தணிக்கையாளர் சென்று கொண்டிருப்பதால் சரியானபடி தணிக்கை செய்ய முடியாத நிலைமையிலிருப்பதால் கொல்லிமலையிலேயே தனி தணிக்கையாளரைப் போடவேண்டுமென்று கேட்டுக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

எண்பது சதுர மைல் பரப்புள்ள கொல்லிமலை பகுதியில் இவ்வளவு நாட்களாக எந்தவித வைத்திய வசதியும் இல்லாத நிலையில் அங்குள்ள மக்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதால் உடனடியாக அங்கு ஒரு வைத்தியசாலை நிறுவ அரசாங்கம் முன் வரவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். அங்கு ஒரு காவல் நிலையமும் அவசியம் தேவை. ஆகவே கொல்லிமலையில் ஒரு காவல் நிலையம் நிறுவ ஏற்பாடு செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அடுத்து, தொழில் வளர்ச்சி. சேலம் மாவட்டத்தில் பெரிய தொழில்களே வளரவில்லை. சிறு சிறு கைத்தொழில்கள் கூட முன்னேறவில்லை. சேந்தமங்கலம் வட்டாரத்தில் கைத்தொழில் விஸ்தரிப்பு அதிகாரி ஒருவர் இருந்து

[திரு. வி. ஆர். பெரியண்ணன்] [4th July 1962

கொண்டு அங்கு பாத்திரம், பாய் முடைபவர்கள் இவர்களுக்கு ஒரு கூட்டுறவு சங்கம் நிறுவி அத்தொழிலை வளர்ச்சியடையச் செய்யவேண்டுமென்று மனு அனுப்பி ஒரு ஆண்டிற்கு மேலாகியும் பாத்திரம், பாய் முடையும் சங்கம் பதிவு செய்யப்படாமல் இருப்பது கண்டு வருந்துகிறேன். ஆகவே அரசாங்கம் உடனடியாக அச்சங்கங்களை நிறுவ வேண்டிய ஏற்பாடுகள் செய்து தர வேண்டும்.

அடுத்து, தனிப்பட்ட முறையில் செருப்பு தைப்பவர்களுக்கு 200 ரூபாய் வரை கடன் கொடுக்கப்பட்டுக் கொண்டிருந்தது. இப்பொழுது காதி போர்ட் நிறுவியதால் அவர்களுக்கு கொடுக்கப்பட்டு வந்த கடன் 200 ரூபாய் நிறுத்தப்பட்டிருக்கிறது. தோல் பதனிடுவது போன்ற காரியங்களுக்குத்தான் பண உதவி அளிக்கிறார்கள். கூட்டுறவு சங்கங்கள் அமைத்தால்தான் காதி போர்ட் மூலம் பணம் கொடுக்கப்படும் என்ற நிலை இருப்பதால், கிராமங்களில் இதுபோன்று தனிப்பட்டமுறையில் தொழில் செய்து கொண்டிருப்பவர்களுக்கு இந்த பண உதவி கிடைக்காததால் அவர்கள் மிகவும் துன்பப்படுகிறார்கள். இவ்வளவு நாட்களாக கொடுத்து வந்ததுபோல் 200 ரூபாய் பஞ்சாயத்து யூனியன் மூலம் அவர்களுக்கு கொடுக்க வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, சேந்தமங்கலத்தில் மாதிரி தோல் பதனிடும் தொழிற்சாலையில் ஒவ்வொரு ஆண்டும் 20, 30 பேர்கள் பயிற்சி பெற்று வெளி வருகிறார்கள். அவர்களுக்கு ஒரு கூட்டுறவு சங்கம் பதிவாகி ஒரு ஆண்டிற்கு மேலாகியிருக்கும். அவர்களுக்கு காதி போர்ட் மூலம் லோன் சாங்ஷன் செய்யவேண்டி மனு அனுப்பியும் ஒன்றும் செய்யப்படாமல் இருக்கிறது. ஆறு மாதம் தோல் பதனிடுவதில் பயிற்சி பெற்று வெளியே வந்தவர்கள் தொழில் செய்ய வசதி இல்லை. அவர்கள் மீண்டும் கூலி வேலைக்குச் செல்லும் நிலைதான் இருக்கிறது. ஆகவே தோல் பதனிடுவோர் சங்கத்திற்கு உடனடியாக இந்த பணத்தை சாங்ஷன் செய்து கொடுக்க வேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, பஞ்சாயத்து யூனியனில் சில கிராமங்களுக்கு இணைப்பு ரோடுகள் போடுவதற்கு 36 அடி அகலமுள்ள நிலம் இருந்தால் தான் போட முடியும் என்று பஞ்சாயத்து ஆணையாளர் கூறுகிறார். அது கிடைக்க கடினமாகயிருப்பதால், 15 அடி நிலம் இருந்தால் போதும் ரோடு போடலாம் என்ற உத்தரவை அரசாங்கம் பஞ்சாயத்து யூனியன்களுக்கு அனுப்பவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, பஞ்சாயத்து யூனியன்கள் மூலம் அரிஜனங்களுக்கு வீடு கட்டிக்கொள்ளவும், கிணறுகள் வெட்டிக்கொள்ளவும் முழுத் தொகையையும் கொடுக்கலாம் என்றிருக்கிறது. அதுபோலவே பள்ளிக்கூடம் ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டால் அதற்கான திட்டம் இல்லை என்று மாவட்ட கல்வி அதிகாரி சொல்லிவிட்டார்கள். பஞ்சாயத்து யூனியன் மூலம் தான் இது ஏற்படுத்த

**4th July 1962]** [*திரு. வி. ஆர். பெரியண்ணன்*]

வேண்டும் என்று இருந்தாலும், அரிஜன வெல்பேர் இலாகா மூல மாகவே பள்ளிக்கூடம் ஏற்படுத்தி கொடுப்பதற்கு வழிவகை செய்யவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

இதற்கடுத்தாற்போல், அரிஜன இலாகா மூலம் பலவிதத்தில் சகாயத் தொகைகள் கொடுக்கப்பட்டு வருகின்றன. மாடுகள் வாங்குவதற்கு, தையல் மிஷின் வாங்குவதற்கு, இவைகளுக்கு எல்லாம் மான்யம் வழங்கப்படுகிறது. இவைகள் எல்லாம் மாவட்ட அரிஜன நல அதிகாரி மூலம் தான் வினியோகிக்கப் படுகிறது. இதில் அரிஜன நல அதிகாரியோடு யார்யார் அடிக்கடி தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறார்களோ, அப்படிப்பட்ட ஒரு சிலருக்குத்தான் இந்த சகாயம் கிடைக்கிறது. ஆனால் ஒன்றும் தெரியாமல் கிராமங்களில் இருக்கக்கூடியவர்களுக்கு இந்த வித மான எந்த உதவியும் கிடைப்பதில்லை. ஆகவே இந்தத் தொகைகள் எல்லாம் வட்டார வளர்ச்சித் திட்ட அதிகாரிகளின் மூலமாகவே வினியோகித்து, தனித்தனியாக எல்லோரும் இந்த பலனை அடை கின்ற முறையில் வழிவகை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு, என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

***திரு. ஏ. எம். பொன்னுரங்கம்**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-வது ஆண்டு நிதி நிலை அறிக்கை மீது என்னுடைய கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். பொது வாக விவசாயிகள் இந்த நாட்டில் முன்னேற வேண்டும் என்று நம்முடைய அரசாங்கம் எத்தனையோ சலுகைகளை கொடுத்துக் கொண்டிருக்கிறது. பஞ்சாயத்துக்களை ஏற்படுத்தி விவசாயி களுக்கு வேண்டிய பல தேவைகளையும் கொடுத்துக்கொண்டிருக் கிறது. அதே நேரத்தில் விவசாயிகள் பம்பு செட்டுகளை அதிக மாக உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இப்போது மின்சாரத்திற்கு வரி போட்டிருப்பதின் காரணமாக, மின்சாரக் கட்டணம் அதிகமாக கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆகவே அரசாங்கம் இப்போது போட்டிருக்கும் வரியை சற்று குறைத்து அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மேலும், வடஆற்காடு சோளிங்கர் தொகுதியைச் சேர்ந்தவன் நான். எங்கள் தொகுதியில் மலை அதிகமாக இருப்பதால் சாலை வசதிகள் இப்போது அதிகமாக இல்லை. ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி ஆலோசித்துப் பார்த்து, சாலைகள் அதிக மாக போடுவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் சோளிங்கரிலிருந்து 16 மைல் தூரத்தில் ஓர் ஆசிரியர் பயிற்சிப்பள்ளி இருக்கிறது. அதில் 80 பேர்களுக்கு மேல் அட்மிஷன் கொடுக்க முடியாது என்று சொல்லிவிட்டார்கள். ஆகவே எங்கள் ஊரிலேயே ஓர் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி அமைத் துக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், இப்போது லாரிகளுக்கு போடப்பட்டிருக்கும் வரி யால் பல கஷ்டங்கள் ஏற்படும் என்று தோன்றுகிறது. ஏற் கனவே வெளியில் அதிக விலைகொடுத்து வாங்கி, பல சாமான்களை

[திரு. ஏ. எம். பொன்னுரங்கம்] [4th July 1962

யும் டயர்களையும் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். மேலும் அவர் கனம் அமைச்சர் அவர்கள் ஆலோசித்துப் பார்த்து வரியைக் குறைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இத்துடன் என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* **திரு. வா. சொ. சு. மணி:** மதிப்பிற்குரிய சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையின் பேரில் பொது விவாதம் நடைபெற்றுக்கொண்டிருக்கும் போது, எங்கள் கட்சியைச் சேர்ந்த அன்பர்களை, சட்ட மன்ற ஆளும் கட்சி அங்கத்தினர்கள் எப்போதும் குறை சொல்லிக் போது, எங்கள் கட்சியைச் சேர்ந்த அன்பர்களை, ஆளும் கட்சி சட்ட மன்ற அங்கத்தினர்கள் எப்போதும்குறை சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். விவாதம் செய்வதை விட்டு விட்டு திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் என்ன சொல்லுகிறார்கள், என்ன பேசுகிறார்கள் என்பதைமட்டும் எடுத்துக் கொண்டு குறைகூறி பேசுகிறார்களே தவிர, திட்டத்திற்காக என்ன செய்யலாம். இந்த நிதி நிலை அறிக்கையில் என்ன செய்யலாம் என்பதைப்பற்றி ஒரு வார்த்தைகூட பேசுவதில்லை. எனக்கு முன் பேசிய ஆளும் கட்சியைச் சேர்ந்த நண்பர் ஒருவர் பேசும் போது, மீன் கூடையை தூக்கிக்கொண்டு போன கதையைச் சொல்லி, மல்லிகைப் பூவைப்பற்றியும் உதாரணம் சொன்னார்கள். நான் சொல்லுகிறேன், திராவிட முன்னேற்றக் கழகத்தாரின் கருத்துக்கள்தான் நறுமணம் வீசும் மல்லிகைப் பூ போன்றது என்று. ஆகவே கனம் அங்கத்தினர் அவர்கள் தங்கள் கருத்தை மாற்றிக் கொள்ளட்டும். இன்றைக்கு நாம் சட்ட மன்றத்தில் விவாதிக்கவேண்டிய கடமையை விட்டு விட்டு ஏதோ எதிர்க்கட்சிக்காரர்கள் சொல்லுகிற கருத்துக்களை மட்டும் எதிர்த்துக்கொண்டிருப்பதால் எந்தவிதமான பயனும் இல்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தாற்போல் இந்த நிதிநிலை அறிக்கையில் முழுக்க, முழுக்க பாராட்டுவதற்குரிய அம்சம் எதுவுமில்லை என்றாலும், மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் ஒன்றரை மணி நேரம் 50 பக்கங்களை கொண்ட அறிக்கையை சலியாது, பொறுமையுடன் வாசித்தமைக்கு பாராட்டு தெரிவிக்கவேண்டியதாகத்தான் இருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அதாவது, ஒவ்வொரு ஆண்டும் பட்ஜெட் ஸீஸன் வரும் போது புதிய வரிகள் வருமா என்று பொதுமக்கள் பீதியடைகிறார்கள். அதையொட்டித்தான் முன்கூட்டியே முதல் அமைச்சர் அவர்கள் சூசகமாகக்கூட புதுவரிகள் வரும் என்று சொல்லி பீதியை போக்க முயன்றார் போலும். அப்படியில்லாமல், இருக்கின்ற நிதி வசதியை வைத்துக்கொண்டு எப்படி திட்டங்களை போடலாம், வரி போடாமல் எப்படி எப்படி திட்டங்களைப் போட முடியும் என்பதைப்பற்றி ஆலோசிக்கவேண்டும். திட்டங்கள் வேண்டாம் என்று யாரும் சொல்லமாட்டார்கள். உண்மையில் காந்தியார் நினைத்த ராம ராஜ்யத்தில் இப்பேர்ப்பட்ட வரிகள் இருக்கும் என்று யாரும் கருதவில்லை. அப்பேர்ப்பட்ட காந்தியார் லட்சிய ராம ராஜ்யத்தில் இதுபோன்ற வரிச்சுமையை தாங்கிக் கொண்டிருக்கிற மக்கள் இருப்பார்களா என்பதைப்பற்றி ஆளும்

**4th July 1962]** [திரு. வா. சொ. சு. மணி]

கட்சியிலுள்ள நண்பர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். வரிகள் போடாமல் ஒன்றும் செய்ய முடியாது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். ஆனால் ஒவ்வொரு ஆண்டும் வரிகளை ஜாபிதாவில் சேர்த்துக்கொண்டே போனால் இதன் முடிவு என்னவாகும் என்பதை நாம் ஆலோசிக்க வேண்டும். புது வரிகள் ஒவ்வொரு ஆண்டு பட்ஜெட்டிலும் அதிக மாக சேந்துகொண்டு இருக்கிறதே தவிர, போட்ட வரிகளில் இன்னின்ன வரிகளையெல்லாம் எடுத்து விட்டோம் என்று சொல்லக்கூடிய நிலை என்றைக்காவது ஏற்பட்டுள்ளதா என்பதை யும் நாம் பார்க்க வேண்டும். இருக்கின்ற நிதியை சிரிய முறையில் சிக்கனமாக செலவு செய்து, நல்லமுறையில் பலனுள்ளதாக திட்ட மிடுவதாக இருந்தால் அது நீதியாக இருக்கும் என்று நினைக் கிறேன்.

1-00 p.m.

அடுத்தாற்போல், நமது நிதி அமைச்சர் அவர்கள், கல்வி அமைச்சாரகவும் இருக்கிறார்கள். அதிகாரங்களை எல்லாம் பரவலாக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் மாவட்டக் கழகங் களாக இருந்தவைகளை எல்லாம் கலைத்து, இப்போது பஞ்சாயத்து யூனியன்களாக அமைந்திருக்கின்றன. ஆனால் இந்த பஞ்சாயத்து யூனியன்களாக அமைத்திருக்கிறார்கள். ஆனல் இந்த பஞ்சாயத்து அமைப்பாகத் தான் இயங்கி வருகிறது. உண்மையில் மக்களுக்கு நன்மைகளை செய்யக்கூடிய ஒரு அமைப்பாக இல்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். ஏனென்றால் பஞ்சாயத்து யூனியனில் இருக்கின்ற அங்கத்தினர்கள், தலைவர்கள் இவர்கள் எல்லோரும் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். இந்த அமைப்பை ஒரு பிரச்சார கருவியாகத்தான் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். இதற்காக பல லட்சக் கணக்கான ரூபாய் கள் விரைகின்றன. முன்னால் மாவட்ட கழகங்களாக இருந்த போது ஏற்பட்ட செலவைவிட இப்போது பஞ்சாயத்து யூனியனை தனியாக பிரிந்திருப்பதால் அதிகமாக செலவு செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. அது மட்டுமல்ல, பஞ்சாயத்து யூனியன் களில் இருக்கின்ற தலைவர்களின் விருப்பு வெறுப்புகளுக்கு எல்லாம், அவர்களின் அதிகாரத்திற்குள் இருக்கும் பள்ளி களிலுள்ள ஆசிரியர்கள், ஆசிரியைகள் நடந்துகொள்ளக்கூடிய நிலைமையும் ஏற்பட்டிருக்கின்றது.

இந்த கல்வி இலாகாவை அவர்களிடம் ஒப்படைத்திருப்பது பெரிய பாதகமாக இருக்கிறது என்றுதான் நான் சொல்லிக் கொள்கிறேன். கல்வியின் தரம் குறைந்து விட்டது என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நான் நிதி அமைச்சர் அவர் களைக் கேட்டுக் கொள்வதெல்லாம், இந்த கல்வி இலாகாவை, ஒரு தனிப்பட்ட இலாகாவாக ஏற்படுத்தி, அந்த இலாகாவை தனிப் பட்ட முறையில் சுதந்தரத்துடன் நிர்வகித்தால், நிச்சயமாக கல்வியின் தரம் உயரும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படு கிறேன்.

அடுத்தாற்போல், இந்த செலவினங்களைப் பற்றி சொல்லும் போது நீர்ப்பாசனத் திட்டங்களைப் பற்றியும், அணைக்கட்டுக் களைப் பற்றியும் குறிப்பிடும்போது, இத்துறையிலே பணம் நல்ல

முறையிலே செலவழிக்கப்பட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். எனக்குத் தெரியும், இதிலே நல்ல முறையில் செலவு செய்யாது, நல்ல முறையில் பரிசிலனை செய்யாது பணம் விரையம் செய்யப் பட்டிருக்கிறது என்பது. எனது மாவட்டத்திலே நிலக் கோட்டைப் பகுதியில் இருக்கக்கூடிய ஒரு குளத்திலிருந்து, அதன் சர்ப்ளஸ் தண்ணீரை கொண்டு போக ஒரு வாய்க்கால் வெட்டி, அதை பாசன வசதி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. இதை ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்னே நமது முதல் அமைச்சர் காமராஜ் அவர்கள் திறந்து வைத்தார்கள் என்று எனக்கு நினை விருக்கிறது. ஆனால் அந்தக் கால்வாயிலே இதுவரைக்கும் ஒரு சொட்டுத் தண்ணீர்கூட போனது கிடையாது. நல்ல முறை யிலும் பரிசீலனை செய்யாது இப்படி பல திட்டங்களில் பணம் விரையம் செய்யப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறே. ஆனால், நல்ல காரியங்களில் பயனுள்ள திட்டங்களுக்கு பணம் செலவழிப்பதற்கு முன்வருவதில்லை. குறிப்பாகச் சொல்கிறேன். எனது தொகுதியில் உள்ள அய்யம் பாளையம் மலையடிவாரத்திலிருந்து வரும் மருதையாற்றில் ஒரு அணைக்கட்டை கட்டி, தண்ணீர் தேக்கினால் பல ஆயிரக்கணக்கான நிலங்களுக்கு பாசன வசதி செய்ய முடியும் என்று என்ஜினியர் அவர்கள் ரிப்போர்ட் அனுப்பியிருக்கிறார்கள். ஆனால், அதைப் பின்னால் என்ன காரணத்தினாலோ, யார் சூழ்ச்சியாலோ அந்தத் திட்டமானது கைவிடப்பட்டிருக்கிறது. இந்த கைவிடப்பட்ட இந்த திட்டத்தில் உள்ள ரிபோர்டில் என்ன சொல்லப்பட்டு இருக் கிறதென்றால், இந்த அணையைக் கட்டி நீர் தேக்கினால், இந்தத் தண்ணீரானது வைகை ஆற்றில் சங்கமம் ஆகிறது; அப்படி இந்தத் தண்ணீரை அணைகட்டி தேக்கி விட்டால், அது இராமனாதபுரம் மாவட்டத்திலுள்ள குடியானவர்களுக்கு பாதகம் ஏற்படுகிறது. ஆகவே, அவர்கள் இதை ஆட்சேபிப்பார்கள் என்று ஒரு காரணத் தைக் காட்டி, அதனால் இந்தத் திட்டம் கைவிடப்பட்டது என்று ரிப்போர்ட்டில் சொல்லப்பட்டு இருக்கிறது. இப்படி அந்தத் தண்ணீரானது வைகை ஆற்றில் சேருவதால் எந்த வகையில் இராமனாதபுரம் பாதிக்கப்படுகிறது என்பது உண்மையிலேயே தெரியவில்லை. அப்படியானால், அந்த வைகை ஆற்றில் வேறு தாலுக்காக்களுக்கு தண்ணீர் கொண்டு போகவில்லையா? அப் போது அதனால் இராமனாதபுரம் மாவட்டம் பாதிக்கப்பட வில்லையா? ஆகவே, இப்படி ஒரு நீர்ப்பாசன திட்டத்தை நிறை வேற்றுவதால் இராமனாதபுரம் மக்கள் ஆட்சேபிப்பார்கள் என்று காரணத்தைச் சொல்லி, கைவிடுவது என்றால், அதைவிட ஒரு மோசமான நிலை உண்டா என்று நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அடுத்ததாக, இப்போது உயர்நிலைப் பள்ளிகள் அதிகமாக ஏற் பாடு செய்திருக்கிறோம் என்று நமது கனம் நிதி அமைச்சர் அவர் கள் சொன்னார்கள். இது பாராட்டக் கூடியது. உயர்நிலைப் பள்ளிகள் அதிகமாக ஏற்பாடு செய்திருந்தபோதிலும், அதற்குத் தகுந்தாற்போல் கல்லூரிகள் ஏற்படுவதில்லை. உயர்நிலைப் பள்ளி படிப்பு படித்தவுடன், அவர்கள் கல்லூரிக்குப் போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. எனது மாவட்டத்தில் திண்டுக்கல்லில் நான்கைந்து உயர்நிலைப் பள்ளிகள் இருக்கின்றன. ஆகவே,

4th July 1962] [திரு. வா. சொ. சு. மணி]

அங்கு ஒரு கல்லூரி ஏற்படுத்த அரசினர் முன்வந்தால், மிகவும் பாராட்டக்கூடியதாக இருக்குமென்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தாற்போல், தொழிலைப்பற்றி பேசும்போது, கைத்தறித் தொழில் நமது மாகாணத்திலே சிறந்ததாக, உழவுத் தொழிலுக்கு அடுத்து, இரண்டாவதாக கருதப்பட்டிருக்கிறது. எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் ஒருவர் இதைப்பற்றியும் சொன்னார். இதைப்பற்றி இந்தத் திட்டத்திலே ஒன்றும் குறிப்பிடவில்லை என்று. அந்த முறையிலே நமது நிதி அமைச்சர் அவர்கள் இந்த அறிக்கையிலே கைத்தறித் தொழிலைப்பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. கைத்தறியானது உண்மையிலேயே நமது நாட்டில் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. அதுவும், தென்னகத்திலே அதிகமான கைத்தறிகள் இருக்கின்றன. எனக்குத் தெரிந்த மட்டில், தைத்தறியில் இரண்டு வகை உண்டு. ஒன்று, பருத்தி நூலில் நெய்யப்படக்கூடிய, ஜவுளி உற்பத்தி செய்யக்கூடிய தறிகள். இரண்டாவது, நார்ப்பட்டினால் நெய்யக்கூடிய தறிகள். நான் இரண்டாவதாக சொன்ன இந்த நார்ப்பட்டினால் உற்பத்தி செய்யக்கூடிய ஜவுளியின் கைதறிகளைப்பற்றி சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த நார்ப்பட்டு உற்பத்தி செய்யக் கூடிய அந்த தறிகளானது நமது மாகாணத்திலே ஒரு லட்சத்து ஐம்பதாயிரத்திற்கு மேலே தறிகள் இருக்கின்றன. ஒரு தறிக்கு மூன்று மாதத்திற்கு 25 கிலோ கிராம் நார்ப் பட்டு நூல் தேவைப் படுகிறது. ஆனால் இன்றைக்கு கிடைக்கக்கூடிய அந்த நார்ப்பட்டு நூலின் அளவு 5 கிலோ கிராம் தான். பாக்கி 20 கிலோ கிராம் நார்ப் பட்டு நூல் பம்பாயிலிருந்து அதிக விலை கொடுத்து ஓப்பன் மார்கட்டில் வாங்க வேண்டியிருக்கிறது. காரணம் என்னவென்றால், இந்த நார்ப்பட்டுகள் பூராவும் பம்பாயில் உள்ள டெக்ஸ்டைல் கமிஷனரால் ஒதுக்கப்படுகிறது. அங்கேயிருந்து நம் மாநிலத்திற்கு 'அலாட்மெண்ட்' வாங்க வேண்டியிருக்கிறது. ஆகவே, நமது மாகாணத்திலே உள்ள ஆட்சியாளர் இதை நல்ல முறையிலே வற்புறுத்தி நமது மாகாணத்திற்கு அதிகமான நார்ப் பட்டு அலாட்மெண்டை வாங்கும்படி கனம் தொழில் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன். இத்துடன் எனது உரையை நிறுத்திக்கொள்கிறேன். வணக்கம்.

* **திருமதி டி. என். அனந்தநாயகி:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் 50 பக்கங்கள் கொண்ட அழகான, திறமையான, விரிவான வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்திருக்கிறார்கள் என்று சிலர் பாராட்டினர். சிலர் குறை கூறினார்கள். புதிதாக அதிக எண்ணிக்கையில் வந்திருக்கும் எதிர்க் கட்சியாகிய திராவிட முன்னேற்றக் கழகத்தினர் ஆகிய 50 அங்கத்தினர்களும் இந்த நிதி நிலை அறிக்கையை நன்கு புரிந்துகொள்வதற்காக இத்தகைய விரிவான, அழகான, திறமையான முறையிலே கொடுத்திருக்கிறார்கள் என்று நான் நினைக்கிறேன். இவ்வளவு திறமையான வரவு செலவு திட்டத்தைக் கொடுத்திருக்கக்கூடிய அதே சமயத்தில், 7 கோடி ரூபாய் வருமானம் வரக்கூடிய வகையில் கெட்டிக்காரத்தனமாக, யார் தலைமீது வரிகள் விழுந்தால் தாங்கும் என்பதை ஆராய்ந்து

பார்த்து இந்த அறிக்கையைக் கொண்டு வந்ததற்காக எதிர்க் கட்சிக்காரர்களாக இருந்தாலும், இதை பாராட்டாமல் இருக்க முடியாது. வேண்டுமானுல், எதிர்க்கட்சிக்காரர்கள் குறை கூற வேண்டுமென்பதற்காக, ஏதோ இது ஏழை மக்களை மிகவும் பாதித்துவிட்டதாகவும், என்னமோ அவர்கள் தலைமீது தான் இந்த வரிகள் பூராவும் விழுந்து விட்டதாகவும் சொல்லலாமே தவிர, இன்றைய சூழ்நிலையிலே ஆற அமர யோசித்துப் பார்த்தால் இவ்வளவு புத்திசாலித்தனமாக வரி போடக்கூடிய ஒரு ஆற்றல் நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் ஒருவருக்குத் தான் இருக்க முடியுமென்று நான் நினைக்கிறேன். அந்த வகையிலே இதை நாம் உண்மையிலேயே பாராட்டத்தான் வேண்டும். வேண்டுமானுல், இன்னும் சில வகைகளில் உள்ள குறைகளை குறைக்க முடியும் என்ருல், அதை வரவேற்க சட்டசபை அங்கத்தினர்கள் மகிழ்ச்சி யோடு இருக்கிருர்கள்.

இந்த வரவு செலவு திட்டத்திலே 9 கோடி ரூபாய் போதாது என்று குறிப்பிட்டிருக்கிறது. அப்படி இருந்தும், 7 கோடி ரூபாய்க்கு வரியைப் போட்டு, எப்படியாவது நிதி நிலையை நல்ல முறையிலே அமர்த்தி, அதோடு மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத் தையும் வெற்றிகரமாக நடத்தி, சென்னை மாகாணத்திற்கு ஒரு நல்ல பெயரை வாங்க வேண்டுமென்று, அந்த வகையிலே சென்னை மக்களுக்கு சேவை செய்ய வேண்டுமென்ற எண்ணத்திலே அர சாங்கத்தார் ஆற அமர யோசித்து செய்திருப்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். எதற்காக இந்த வரவு செலவுத் திட்டம் சமர்ப்பிக்கப்படுகிறது என்று கேட்கலாம்? இதை இரண்டு பகுதி களாப் பிரிக்கலாம். ஒன்று, நிதி நிலைமையை புதிதாக எந்த அளவுக்குப் பெருக்கலாம் என்பது. மற்றென்று, எந்த அளவிலே முன்பிருந்த நிதி நிலைமையைப் பயன்படுத்தி இருக்கிருேம் என்ற நிலையைத் தெரிந்து கொள்வது. இப்படி இதை இரண்டு பிரி வாகப் பிரிக்கும்போது, சென்னை மாகாணம் மிகச் சிறந்த முறை யிலே முன்னேற்றப் பாதையில் சென்றிருக்கிறது, முதலாவது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களை மிகச் சிறந்த அளவிலே வெற்றிகரமாக, குறித்த காலத்திற்கு முன்னதாக செய்து முடித் திருக்கிருேம் என்பதை அறிக்கையின் முன் பகுதியில் விவசாயம், தொழில், கல்வி ஆகிய தலைப்புக்களை எல்லாம் படித்துப் பார்த் தால், மிகத் தெளிவாக புரிந்து கொள்ளலாம். ஆனுலும், அதே சமயத்திலே ஐந்தாண்டுத் திட்டத்தை அமுல் நடத்துவதற்கு 291 கோடி ரூபாய் என்று நிர்ணயித்திருப்பதால், அதற்கு வேண்டிய பணத்தை பெருக்குவதற்கான பொறுப்பையும் ஆற அமர யோசித்து, அதை 7 கோடி ரூபாய் என்று நிர்ணயம் செய்து, யார் தலையிலே போட்டால் தாங்கும் என்று பார்த்து போட்டிருப்பதைப் பார்க்கும்போது இது சிறந்த முறையில் தயாரிக்கப்பட்ட பட்ஜெட் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். ஏதோ நாங்கள் 6 மாதத்திற்கு முன்பே சொல்லி விட்டோம், இந்த 7 கோடி ரூபாய் பூராவும் ஏழை மக்கள் தலையில் தான் விழுந்திருக்கிறது என்று அரசியல் கண்துடைப்புக்கு வேண்டுமானுல் சொல்லலாம். ஏழை களுக்கு வரி விதிப்பதை நாம் இப்போது நகரசபை நிர்வாகத் திலேதான் பார்க்கிருேம். குடிசையிலே வாழக்கூடியவர்களுக்கு கூட அவர்கள் தான் வரி போட்டிருக்கிருர்கள். நம்முடைய அர

4th July 1962] [திருமதி டி. என். அனந்தநாயகி]

சாங்கம் அப்படி ஏழைகள் மீது வரி போடாமல், இந்த 7 கோடி ரூபாய் வசூல் செய்வதற்கு வரியைப் போட்டால் யாரால் முடியும், யார் தலை தாங்கும் என்பதை தேடி தேடிப் பார்த்த பின்னர் தான் போட்டிருக்கிறார்கள்.

அதே சமயத்தில் பொன் முட்டை இடுகிறது வாத்து என்று ஓரேயடியாக அதை வெட்டிவிட்டாலும் ஆபத்து. நம்முடைய அரசாங்கம் இதைச் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். எதிர்க்கட்சிக்காரர்கள் பஸ்காரர்கள் மீது வரி விதிக்க வேண்டும் என்று தான் சொல்லுவார்கள். காரணம் அவர்களுக்கு, பஸ்காரர்கள் மீது தான் கோபம். ஆனால், ஆளும் கட்சியில் இருப்பவர்கள் பஸ்காரர்களுக்குப் போடப்பட்ட வரியை அவர்கள் எந்த அளவுக்கு தாங்க முடியும் என்று சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். 'ஸ்டேஜ் பை ஸ்டேஜாக' கட்டம் கட்டமாக உயர்த்துவதற்கு முடிவு செய்யலாமா என்று ஆலோசித்துப் பார்ப்பது வரவேற்கத்தக்கது. எதற்காகச் சொல்லுகிறேன் என்றால் 'பெர்மிடட் லேடன் வெயிட்'-டின் அடிப்படையில் ரூ. 300 லிருந்து 500 ரூபாய், ரூ. 400-லிருந்து 600 ரூபாய் என்று திடீரென்று வரியை அதிகப்படுத்தி போடுவோமேயானால், வரி அதிகரிப்பு அதிகமாக அதிகமாக, அதை எப்படி ஏமாற்றுவது என்பதில் அவர்கள் முழு கவனம் செலுத்த ஆரம்பித்தால், அதனால் ஆபத்தாகிவிடும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். வைரத்திற்கு 6 சதவிகிதம் வரி போட்டால், வைரத்தை வாங்குகிறவர்கள், விற்பவர்கள் பில்லே போடுவதில்லை. 6 சதவிகிதம் எதற்காக வரி கொடுப்பது என்று நினைக்கிறார்கள். அதிகமாக வரி போடுவதால் வருகிற ஆபத்து என்னவென்றால், ஏமாற்றம் அதிகமாக இருக்கும். ஆகவே ஓரேடியாக 200, 300 ரூபாய் என்று லாரிக்காரர்களுக்கு வரியை உயர்த்தாமல், ஒவ்வொரு ஆண்டும் நமக்குத் தேவைபடுகிற அளவிற்கு அதிகப்படுத்தினால் நல்லதா என்று அரசாங்கம் யோசித்துப் பார்க்க வேண்டும். அதேபோன்று தான் பிரயாணக் கட்டணத்தின் வரியையும் அதிகரிப்பது சம்பந்தமாக கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். காரணம், சென்னை மாகாணத்தில் பஸ் போக்குவரத்துத் துறையின் மீது விதிக்கப்பட்டுள்ள வரிகள் ஏற்கனவே உச்ச கட்டத்தில் இருக்கின்றன. சென்னை மாகாணத்தில் ஜாஸ்தி வரிகள் போடப் படுகின்றன. நான் முன்பு சொன்ன மாதிரி பொன் முட்டை இடுகிற வாத்தை அடிக்கடி தொந்திரவு செய்தால் நமக்கு லாபமாக இருக்குமா என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். வேறு சில துறைகளில் வரி போடுவதற்கு வழி இருக்குமா என்பதையும் கொஞ்சம் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். அதோடுகூட, போடப் படுகிற வரிகளை ஒழுங்காக கண்காணித்து வசூல் செய்தால், 2, 3 கோடி ரூபாய் அதன் மூலம் வந்துவிடும். உதாரணமாக, ரைஸ் மில் வைத்திருப்பவர்கள் 1 சதவிகிதம், ½ சதவிகிதம் வரியை கொடுப்பதேயில்லை. ரைஸ் மில் என்னவோ ஓடிக்கொண்டு தான் இருக்கும். நெல் அறைத்துக்கொண்டு தான் இருப்பார்கள். எலக்டிரிஸிடி கன்சம்ஷனும் அதிகமாக இருக்கும். ஆனால் வரி கொடுக்கமாட்டார்கள். நெல் அறைக்காமல்

[திருமதி டி. என். அனந்தநாயகி] [4th July 1962

எலக்டிரிஸிடி கன்ஸம்ஷன் எப்படி அதிகமாயிற்று என்று கண்காணிப்பு இல்லாத காரணத்தினால், அந்த வரியை ஏமாற்றுவதற்கு வழிகள் அதிகமாக இருக்கின்றன. இது போன்று பல துறைகளில் வரி கொடுக்காமல் ஏமாற்றுகிறார்கள். இந்த 'எவேஷன்களை' தடுத்து, வரவேண்டிய வரியை வசூலிப்பதில் நிதி அமைச்சர் அவர்கள் இன்னும் அதிக அக்கறை செலுத்தவேண்டும். அம்மாதிரி செய்தால் ஓரளவிற்கு இந்த வரிகளை குறைக்கலாம். குறைந்த வரிபோட்டு, அதை முழு கண்காணிப்புடன் வசூலித்தும், புதிய வரிகள் போடக்கூடிய துறைகள் இன்னும் ஏதாவது இருக்கிறதா என்பதையும் ஆராய்ந்து பார்க்கவேண்டும் அப்படிச் செய்தால் ஒருவாறு நிலைமையைச் சமாளிக்கலாம். ஆகவே, இதை அரசாங்கம் ஆலோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதே மாதிரி தான் ஸ்டாம்பு கட்டணத்தை 50 சதவீதம் உயர்த்த திட்டமிடப்பட்டிருக்கிறது. சாதாரணமாக நிலத்தையோ அல்லது வேறு சொத்தையோ விற்றால், ரூ. 10,000-க்கு விற்றால் ரூ. 5,000-க்குத் தான் பத்திரம் எழுதுகிறார்கள். காரணம், அரசாங்கத்திற்குக் கொடுக்கவேண்டிய வரியை ஏமாற்றுவதற்குத் தான். இந்த நிலையில் ஸ்டாம்பு கட்டணம் இன்னும் அதிகமாகக் கொடுக்கவேண்டுமென்று சொன்னால், ஒருவேளை விற்கவே இல்லை. 'கிப்டாக' கொடுத்தோம் என்றுகூட சொல்லக்கூடிய சூழ்நிலை ஏற்படும். இம்மாதிரி வரியை ஏமாற்றுவதற்கு வழி இல்லாமல் செய்ய வேண்டும். ஒரேயடியாக 50 சதவீதம் உயர்த்தாமல் இப்போது 10 சதவீதம், அடுத்த ஆண்டில் அதற்கு மேல் 10 சதவீதம், இப்படி கட்டம் கட்டமாக உயர்த்தினால், ஒருவேளை வரிச்சுமை தோன்றாமல் இருக்கலாம் என்று நான் நினைக்கிறேன். சில நல்ல வரிகளையும் போட்டிருக்கிறார்கள். குறிப்பாக 'பெட்டிங் டாக்ஸ்' வரவேற்கத்தக்கது. பந்தயத்தில் போகிற பணத்தில் மக்களுடைய நன்மைக்காக ஒரு பகுதி அரசாங்கத்திற்கு வருவது வரவேற்கத்தக்க அம்சம் தான். ஆகவே, அந்த வரி போடப்பட்டது பாராட்டத்தக்கது.

அரசாங்கத்தின் அடுத்த வரி விதிப்பு யோசனை நஞ்சை நிலத் தீர்வையையும், தண்ணீர் தீர்வையையும் பற்றியதாகும். இதையும் சற்று யோசித்துச் செய்ய வேண்டும். விவசாயிகளுக்கு ஏற்கனவே எல்லாத் தொல்லைகளும் இருக்கின்றன. போட்டிருக்கிற வரியை திரும்பவும் புதுப்பிப்பதிலே நாம் சற்று சிந்தித்துச் செய்ய வேண்டும். 60 சதவீதம், 40 சதவீதம் உயர்த்துவதாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் இப்படி வரியை அதிகப்படுத்துவதற்கு முன்பு இதற்கென்று ஒரு குழுவை ஏற்படுத்தி, அதில் முக்கியமாக விவசாயிகளுக்கு பங்கு கொடுத்து, எந்த அளவுக்கு வரி போடவேண்டும் என்பதை தீர்மானம் செய்யவேண்டும். எல்லாவற்றையும் புதியதாக சர்வே செய்ய வேண்டும். 30 ஆண்டுகளுக்கு முன்பு போடப்பட்ட வரியாதலால், உள்ளே புகுந்து நல்ல முறையில் பரிசீலனை செய்து முடிவு செய்யவேண்டும். இதற்காக ஒரு முதல்தர கமிட்டியைப் போட்டு, பெரிய புத்திசாலிகளை அதில் பங்கெடுக்க வைத்து, தமிழகம் பூராவும் சுற்றிப்பார்த்து, இருக்கிற நிலங்களை சர்வே செய்து, எந்த வகையில் எப்படி இந்த வரியை

4th July 1962] [திருமதி டி. என். அனந்தநாயகி]

சீர்திருத்தலாம் என்பதை ஆராய்ந்து பார்த்து முடிவு செய்தால் வரவேற்க தக்கதாக இருக்கும். இதன் காரணமாக விவசாயிகளுக்கு வருத்தம் இருக்காது. மற்றவர்களுக்கும் தொல்லை குறையும். ஆகவே, இந்த விஷயத்தை அரசாங்கம் ஆறஅமர யோசித்து அவசரப்படாமல் முடிவு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, மின்சார வரி. வரியில் பெரிய ஒரு பகுதி மின்சாரத் துறையிலிருந்தும், பஸ் துறையிலிருந்தும் தான் வசூலிக்கப்படுகிறது. பஸ்காரர்கள், லாரிகாரர்கள் 2 கோடி ரூபாய் வரி கொடுக்கிறார்கள். மின்சாரம் உபயோகிக்கிறவர்கள் 2 கோடி ரூபாய் வரி கொடுக்கிறார்கள். 'ஹை-டென்ஷன்' மின்சாரத்திற்கு வரியை அதிகப்படுத்திவிட்டு, 'லோ-டென்ஷன்' மின்சாரத்திற்கு வரியை அதிகரிக்காமல் விட்டு விட்டால் வரவேற்கத்தக்கதாக இருக்கும். 'ஹை-டென்ஷன்' மின்சாரத்திற்கு 4 நயா பைசா வீதம் கட்டணம் விதிக்கப்படுகிறது. 'லோ-டென்ஷன்' மின்சாரத்திற்கு 29 நயா பைசா வீதம் கட்டணம் விதிக்கப்படுகிறது. ஏற்கனவே நகரத்தில் வாழ்கிறவர்களுடைய வாழ்க்கை நரக வாழ்க்கையாக இருக்கிறது. ஏற்கனவே வீட்டுச் சொந்தக்காரர்கள் குடித்தனக்காரர்களிடம் 3 மணி நேரம் விளக்கு எறிக்க ஒரு பல்புக்கு ரூ. 2 வீதம் வசூல் செய்கிறார்கள். இப்பொழுது வரியை 3 நயா பைசா அதிகரித்துவிட்டால், வீட்டுச் சொந்தக்காரர்களும் விளக்குக்காக என்று வாடகையை ரூ. 3-க்கு உயர்த்திவிடுவார்கள். அதனால் குடித்தனக்காரர்கள் தொந்தரவுக்கு உள்ளாவார்கள். வீட்டு விளக்கு எறிக்க உபயோகப்படுத்துகிற மின்சாரத்திற்கு ஒரு யூனிட்டுக்கு 29 நயா பைசா ஏற்கனவே கட்டணம் வசூலிக்கப்படுகிறது. அதை 3 நயா பைசா அதிகமாக்கினால், வீட்டுச் சொந்தக்காரர்கள் வேண்டுமென்றே ஏழைக் குடித்தனக்காரர்கள் தலையில் சுமக்கும்படி விளக்குக்காக என்று அவர்கள் வாடகையை ரூ. 4 ஏற்றிவிடுவார்கள். அதற்கு மேலே கேட்டால், 'ஏன் காங்கிரசுக்கு வோட்டுப் போட்டீர்கள்?' என்று அதற்காக நாம் கெட்ட பெயர் வேறு வாங்கிக்கொள்ள வேண்டும். ஆகவே, நகர்புறங்களில் வீடுகளுக்கு உபயோகிக்கும் மின்சாரத்திற்கு 3 நயா பைசா ஏற்றுவதற்கு பதிலாக, 'ஹை-டென்ஷன்' மின்சாரத்திற்கு வேண்டுமானால் இன்னும் அதிகமாக ஏற்றி அதை மாற்றி அமைத்தால் வரவேற்கத்தக்கதாக இருக்கும்.

நகர்புற நிலங்களின்மீது வரி விதிப்பது பற்றியும் சற்று ஆலோசிக்க வேண்டியதுதான். அதுபற்றியும் சர்வே எடுத்துத் தான் செய்யவேண்டும். ரூ. 1,000-க்கு மனைக்கட்டுகள் வாங்கி, இன்று 10,000, 12,000-க்கு விற்கிறார்கள். 10 மடங்கு, 12 மடங்கு வரி போடுவது வரவேற்கத்தக்கது தான். அப்படிப் போடும் பொழுது கொஞ்சம் ஆலோசித்து யாருக்கு எப்படிப் போடலாம் என்று முடிவு செய்யவேண்டும். 15, 20 கிரௌண்டுகளை சுற்றி வைத்துக்கொண்டு உள்ளே ஒரு சிறிய பங்களாவில் குடியிருந்து கொண்டிருக்கிறார்கள். இட நெருக்கடி அதிமாக இருக்கும் பொழுது, சுற்று வட்டாரத்தில் இவ்வளவு பரப்பு நிலங்களை வைத்துக்கொண்டிருப்பது சரியா என்பதையும் யோசிக்க

[திருமதி டி. என். அனந்தநாயகி] [4th July 1962

வேண்டும். இதையெல்லாம் சரிவர சர்வே செய்து ஆலோசித்துப் பார்த்து வரியைப் போட்டால் சிறந்ததாக இருக்கும் என்று நகரப் பிரதிநிதி என்ற முறையில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மேலும், மத்திய அரசாங்கத்தினிடமிருந்து அதிகமாக பணம் வாங்குவதற்கு வழி இருக்குமா என்பதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ரயில்வே பாஸஞ்ஜர் வரியின் மூலம் வசூலிக்கிற தொகையில் மத்திய அரசாங்கம் 12 கோடி ரூபாய் ஒதுக்கிவைத்து, அதிலிருந்து அத்தனை மாகாணங்களுக்கும் பங்கு கொடுப்போம் என்று சொல்லுகிறார்கள். அப்படிப் பார்க்கும்பொழுது நமக்கு ரூ. 81,000 தான் கிடைக்கிறது. நம் மாகாணத்தில் கிடைக்கிற வருமானத்தை மக்கள் அடிப்படையில் நமக்குத் தரவேண்டும் என்று மத்திய அரசாங்கத்திடம் வாதாடிக் கேட்கலாம். அதைப் பற்றியும் சிந்தித்து பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதேபோன்று 'எக்ஸைஸ் டியூடி' வகையில் சற்று அதிகமான பங்கை பெறுவதற்கு முயற்சி எடுக்கவேண்டும். அப்படியெல்லாம் செய்தால் நம்முடைய வரிப்பளுவை ஓரளவுக்கு சமாளிக்கலாம் என்று நினைக்கிறேன்.

அதேபோன்று, ரூ. 150-க்கு குறைவாக சம்பளம் உள்ளவர்களுக்கு பஞ்சப்படி ரூ. 5 உயர்த்தப்பட்டிருக்கிறது. அதற்கு மேலே சம்பளம் வாங்குகிறவர்களுக்கு பஞ்சப்படி உயர வேண்டுமென்பதுதான் ஆசை. அதைக் கொடுக்கவேண்டுமென்பது நமக்கு தெரியாதது அல்ல. மத்திய அரசாங்க ஊழியர்களுக்கும் பஞ்சப்படி உயர்த்தும் பொழுது மாகாண அரசாங்க ஊழியர்களுக்கும் பஞ்சப்படி உயர்த்தவேண்டுமென்று ஒரு நியதி உண்டு. ஆகவே, மத்திய அரசாங்கம் அவர்களுடைய சிப்பந்திகளுக்கு சம்பளம் உயர்த்தும்பொழுது மாகாண அரசாங்கத்தைக் கேட்டு, 'நாங்கள் இவ்வளவு உதவி செய்கிறோம், நீங்களும் செய்யுங்கள்' என்று ஒத்துழைத்தால் மிகவும் வரவேற்கத்தக்கதாக இருக்கும். மத்திய அரசாங்கம் அவர்களுடைய ஊழியர்களுக்கு உயர்வு அளிக்கும்பொழுது மாகாண அரசாங்கத்தையும் கலந்து ஆலோசித்து செய்யவேண்டும். நாம் எந்த அளவுக்கு பண வசதி பெற்றிருக்கிறோம் என்பதைப் பார்க்கும்பொழுது, 150 ரூபாய்க்கு கீழ் இருக்கிற ஊழியர்களுக்கு இன்று ரூ. 5 உயர்த்தியிருப்பது பற்றி மாகாண அரசாங்கத்தை நாம் பாராட்ட வேண்டும். ஆனால், ரூபாயாகக் கொடுப்பதற்கு பதிலாக, அவர்களுக்கு வசதியாகக் கொடுத்தால், வீட்டு வசதி மற்ற வசதிகள் தாராளமாக செய்து கொடுத்தால் மிகவும் மகிழ்ச்சி அடைவார்கள். அம்மாதிரி உதவி செய்வது இந்த ரூ. 5-ஐக் காட்டிலும் உதவியாக இருக்கும் என்று தான் நான் நினைக்கிறேன். அந்த வகையிலே நாம் நிதி நிலையை பார்க்கும்பொழுது மிகச் சிறந்த முறையிலே நாம் செயலாற்றிக் கொண்டிருக்கிறோம். இருந்தாலும், இன்னும் இருக்கிற சில குறைபாடுகளையும் குறைத்துவிட்டால், மிகவும் சிறந்ததாக இருக்கும். சில இடங்களில் நாம் உபரியாக செலவழித்துக் கொண்டிருக்கிறோம். அதையெல்லாம் கண்காணித்து சிக்கனம் செய்யவேண்டும். அதோடுகூட, உதாரணமாக 'ரூரல் வாடர் சப்ளை காபிடல் எக்ஸ்பெண்டிசர்'-க்கு ரூ. 28

**4th July 1962]** [திருமதி டி. என். அனந்தநாயகி]

லட்சம் ஒதுக்கினேம். ஆனல் செலவழிக்கப்பட்டது ஒரு லட்சம் தான். 27 லட்ச ரூபாய் செலவழிக்கப்படாமல் தங்கிவிட்டது. இந்த ஆண்டு அதற்கு ரூ. 28,000 தான் ஒதுக்கியிருக்கிறேம். கிராமப் புறங்களில் இன்று தண்ணீர் சப்ளை தேவையில்லையா? அவ்வளவு பணம் ஒதுக்கியது தவரு? இதையெல்லாம் சற்று சிந்திக்கவேண்டும். இன்னும் வரவு செலவுத் திட்டத்தை துருவிப் பார்க்கக்கூடிய நிலைமை தேவை. அதே போன்று விவசாயத்தில் பல துறைகளில் ஒதுக்கிய பணத்தை காட்டிலும் குறைவாக செலவழிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு அதிகமாக ஒதுக்கி யிருக்கிறேம். வரவு செலவுத் திட்டத்தில் இன்னும் அக்கறை எடுத்துக்கொண்டு கவனம் செலுத்தி, முடிந்தவரையில் சிக்கன முறையைக் கையாளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நகர்புறங்களிலுள்ள மேம்பாலங்கள் மிகவும் பழைய பாலங் களாகி விட்டன. என்றைக்கு, எது எப்படி இடிந்து விழுமோ என்ற நிலைமை இருக்கிறது. அடையாறில் உள்ள பாலமும் பேசின் பிரிட்ஜில் இருக்கிற பாலமும் அப்படித்தான் மோசமாக இருக்கின்றன. சென்னை நகரில் உள்ள எல்லா மேம்பாலங்களும் மிகவும் மோசமான நிலையில் தான் இருக்கின்றன. இந்த பாலங்களை செப்பனிடுவதற்கு எந்தவிதமான சலுகையும் காட்டப்படவில்லை. சென்னை நகரின் பிரதிநிதி என்ற முறையில், இங்கே இருக்கிற மேம்பாலங்களையெல்லாம் பார்த்து ஆராய்வதற்கு ஒரு குழுவை நியமித்து, எந்தெந்தப் பாலங்களை பழுது பார்க்க வேண்டுமோ, அவைகளைச் செப்பனிடுவதற்கு உடனடியாக ஏற்பாடு செய்ய வேண்டுமென்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

* **திரு. சி. கு. சின்னராஜு:** மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையின் மீது சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த அறிக்கையிலே பஸ்கள் மீது வரி விதிக்கப்போவதாக குறிப்பிட்டிருக்கிருர்கள். இந்த வரியை வரவேற்கின்ற நேரத்திலே பஸ் முதலாளிகள் கட்டணத்தை உயர்த்தாமல் இருக்கும்படி அரசாங்கம் பார்த்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சர்க்கார் பஸ் களைப் பொறுத்தவரையில் கட்டண உயர்வு இருக்காது என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிருர்கள். அதைப்போலவே தனியார் பஸ்களிலும் கட்டணத்தை உயர்த்தாமல் இருக்க அர சாங்கம் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, லாரிகளின் மீதும் வரி விதித்திருக்கிருர்கள். சாதாரணமாக, சிறிய முதலாளிகளும், தொழிலாளர்களும் தான் லாரி வைத்து நடத்துகிருர்கள். அதனல் அவர்கள்மீது சுமத்தப் படும் இந்த வரியை எடுத்துவிடவேண்டும் என்று கேட்டுக் கொள் கிறேன்.

எனது தொகுதியிலுள்ள சில குறைகளை இந்த மன்றத்தின் முன் சமர்ப்பிக்க விரும்புகிறேன். எனது தொகுதியாகிய செங்கத்தில் ஒரு ஆஸ்பத்திரி இருக்கிறது. தினசரி சுமார் 300 நோயாளிகள், வந்துகொண்டிருக்கிருர்கள். அங்கே ஒரு டாக்டர் தான் இருக்கிருர். இவ்வளவு அதிகமான நோயாளிகளுக்கு ஒரு டாக்டர் போதாது. மேற்கொண்டு இன்னெரு பெண் டாக்டரை

[திரு. சி. கு. சின்னராஜி] [4th July 1962

யும், ஒரு நர்ஸையும் போடவேண்டுமென்று வேலூர் டி.எம்.ஓ. அவர்கள் சிபார்சு செய்திருக்கிறார்கள். ஆனால் நாளது வரையில் அவ்வாறு டாக்டர் போடப்படவில்லை. ஆகவே, அரசாங்கம் உடனடியாகக் கவனித்து, இன்னும் ஒரு பெண் டாக்டரையும், ஒரு நர்ஸையும் போட்டால் நலமாக இருக்குமென்று தெரிவித்துக் கொள்கிறேன். ஆஸ்பத்திரிக்கு சிகிச்சைக்கு வருகிறவர்கள் 5 மைல், 10 மைல் தூரத்திலிருந்து வருவதால், காலையிலிருந்து மாலை வரையிலும் காத்துக்கொண்டிருக்கிறார்கள். கால தாமதமாகிறது. உடனடியாக இன்னொரு டாக்டரைப் போடும்படி தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

திருப்பத்தூர் நகரத்திற்கு குடி தண்ணீர் திட்டம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. உடனடியாக அதைச் செயல் படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். திருப்பத்தூரின் ஜனத்தொகை சுமார் 40,000. குடி தண்ணீர் வசதி குறைவாக இருக்கிறது. ஆகையால் குடி தண்ணீர் திட்டத்தை உடனடியாக செயல்படுத்தும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.

திருப்பத்தூருக்குப் பக்கத்திலுள்ள ஜவ்வாது மலையில் சந்தன மரம் விளைகிறது. திருப்பத்தூரிலே ஒரு சந்தன எண்ணை தொழிற்சாலையை ஆரம்பித்தால் அரசாங்கத்திற்கு நல்ல வருவாய் கிடைக்கும், தொழிலாளர்கள் பிரச்சனையும் நீங்கும் என்று தெரிவித்துக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**கனம் உதவி சபாநாயகர்:** இப்பொழுது சபை ஒத்திவைக்கப் பட்டு நாளை காலை 8-30 மணிக்கு கூடும்.

பிறகு சபை ஒத்திவைக்கப்பட்டது.

## VIII.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules and Orders.

114. *Notification issued with G.O. Ms. No.* 2102, *Revenue, dated* 11*th May* 1962, *amending the Revenue Deparment Notification S.R.O. No. A*-1797 *of* 1959, *published at pages* 454–455 *of Part I of the* Fort St. George Gazette, *dated the* 25*th March* 1959, *as subsequently amended, regarding the shifting of Checkpost at Arambakkam village to Kaveripettai village in Chingleput district.* [*Laid on he table of the House under section* 53 (5) *of the Madras General Sales Tax Act*, 1959 (*Madras Act I of* 1959).]

1–25 p.m.

### B. Reports, Notifications and other papers.

* 61. *Assurance No.* 1543 *regarding answer to Legislative Assembly Question No.* 2114 *asked by Sri N. R. Thiagarajan on* 15*th November* 1961 *relating to the loans and grants, etc., sanctioned by Government to the Corporation of Madras during the year* 1959–60 *and* 1960–61 *together with expenditure incurred.*

62. *The Madras General Sales Tax* (*Amendment*) *Bill*, 1962, *with Annexure.*

---

* Laid on the table on 3rd July 1962.